

# அது ஒரு நிலாக் காலம்

ஸ்டெல்லா புரூஸ்

# அது ஒரு நிலாக்காலம்

ஸ்டெல்லா புரூஸ்



கலைஞன் பதிப்பகம்
10, கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை-600 017

Price Rs. 20-00

ADHU ORU NILAKKALAM

by

Stella Bruce (C)

First Edition : Dec 1985

Second Edition : April 1989

Published by

Kalaignaan Pathipagam

10, Kannadasan Salai

T. Nagar, Madras-600 017

Printed by

Durghaa Devi Printers

Saidapet, Madras-15

## முன்னுரை

இந்த நாவல் ஆனந்த விகடனில் தொடர் கதையாகப் பிரசுரமாகிய போது ஏராளமான வாசர்களின் மனங்களில் மிக ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும் என்பது நான் எதிர்பார்த்ததுதான். இந்த நாவலில் பிரதானமாகச் சொல்லப்படும் ராம்குமார், சுகந்தா என்ற கதாபாத்திரங்கள் அனைவரையுமே மிக அதிகமாக வசீகரித்ததில் எனக்கு ஆச்சர்யம் கூட இல்லை. இந்த வசீகரம் ஒரு வகையில் இன்றைய வாழ்க்கை முறையின் உறவுகளில் வார்க்கப் பட்டிருக்கிற மரபுகளால் எழுந்த ஆற்றாமையின் வடிவம் என்றுகூடச் சொல்லலாம். அந்த அளவிற்கு உறவு என்பது பொய்மைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

இதனால் தான் வாழ்க்கை அழகற்றுப் போக நேர்ந்ததும்... இந்த நாவலில் சொல்லப்படுகிற ராம்குமாரும் சுகந்தாவும் காதலையும் அன்பையும் பகிர்ந்துகொள்கிற கட்டங்களில் மட்டுமல்லாமல் துயரத்திலும் யுத்தத்திலும் கூட உண்மையின் ஒப்பிலா அழகுடன் மிளிர்கிறார்கள். அதற்குக் காரணம்—அவர்களின் உறவில் எந்தப் பரிமாணத்திலும் பொய்மை இல்லை என்பதே. ஆனாலும் அவர்களின் காதலும் கூட தோல்விதானே என்ற கேள்வி எழலாம். இல்லை. வெற்றி தோல்வி என்ற பேதங்கள் சமுதாய பார்வையின் பாஷைதான். வாழ்க்கையில் அந்தப் பாகுபாடுகள் இல்லை. கணவன் மனைவியாக ராம்குமாரும் சுகந்தாவும் இணைய முடியாமல் போனாலும்கூட வாழ்வில் ஒருவரை ஒருவர் அவர்கள் இழந்து விடாதது அதனாலேயே சாத்தியமானது. ஏனெனில்; வாழ்க்கை என்பது யாராலோ

என்றைக்கோ எழுதி முடிக்கப்பட்டுவிட்ட புத்தகம் அன்று. ஒவ்வொரு மனிதனாலும் ஒவ்வொரு நிமிடமும் எழுதப்பட்டுக் கொண்டே இருக்கிற முடிவே இல்லாத புத்தகம்—வாழ்க்கை. ரோஸ்மேரிக்கு அப்படியெல்லாம் குரூர முடிவு ஏற்பட்டிருக்க வேண்டுமா? காதலும் கல்வியும் கொண்ட சுகந்தா அப்படியோர் இழிவான சந்தேகத்திற்கு ஆளாகக் கூடியவளா? —என்றெல்லாம் கேட்போருக்கு 'வாழ்க்கை' சொல்லும் பதில்— 'ஆம்; இப்படியெல்லாம் நடக்கத்தான் செய்கின்றன. இப்படித் தான் நடக்கவும் செய்தன......' என்பதுதான்.

அது ஒரு நிலாக்காலம் என்ற இந்த நாவல் கற்பனைக் கதை அன்று. சில மனித ஜீவன்களின் வாழ்க்கையில் நடந்த உண்மைச் சம்பவங்களின் தொகுப்பே இந்த நாவல் வடிவம்.

ஆனந்த விகடனில் தொடர் கதையாக வெளியாகிய இந்த நாவலை நூல் வடிவில் கொண்டு வரும் கலைஞன் பதிப்பகம் உரிமையாளர் திரு. மாசிலாமணி அவர்களுக்கு என்னுடைய நன்றி.

சென்னை-17

ஸ்டெல்லா புரூஸ்

'அது ஒரு நிலாக் காலம்' நாவல் ஆப்த நண்பன் ராம்குமாரின் வாழ்க்கையில் நிகழ்ந்த பல அரிய, அவலமான சம்பவங்களை, அந்த ராம்குமார் என்ற நண்பனே நினைத்துப் பார்க்கிற உத்தியில் சில அத்தியாயங்களாக விரிவடைகிறது. 'நினைத்துப் பார்த்தல்' என்பது எப்போதுமே மனிதனுக்கு அலாதியான விஷயம். அதெல்லாம் ஒரு காலம் என என்றைக்கோ நடந்தவற்றை ஒவ்வொரு மனிதனின் உள்ளமும் அசை போடுகிறது. அசை போட்டு அசை போட்டு மனம் ஆனந்தப் படுகிறது, அல்லது அல்லல்படுகிறது. அப்படிப்பட்ட ஆனந்தத்தோடும் ஒரு மன அவசத்தோடும்— இதோ, நண்பன் ராம்குமார் அவன் வாழ்வில் நடந்த பல நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்க்கிறான்......

# அது ஒரு நிலாக்காலம்

1

நினைப்பு ஓர் வற்றாத ஜீவப் பெருநதி. வாழ்க்கை நெடுக மனித மனவெளியில், நினைப்பு ஓர் இயக்கமாக இயங்கிக் கொண்டே இருக்கிறது. என்றோ நடந்து முடிந்துபோன பல நிகழ்ச்சிகளை நாம் நினைத்துப் பார்க்கிறோம். என்றாவது நடக்காதாவென்று நாம் ஆசைப்படும் நம்முடைய அபிலாஷைகளை மனத்தில் கற்பனை வடிவில் நிகழ்த்தியே பார்க்கிறோம். நடந்து விடக்கூடாதேயென்ற பயங்களையும் எண்ண வடிவில் நடத்திக் கலவரம் அடைகிறோம். நமது பிரச்னைகளை நினைக்கிறோம்; வருத்தங்களை நினைக்கிறோம்; ஏமாற்றங்களை, பகைமையை, உறவை...இப்படி ஏதேனும் ஒன்றைச் சதா மனத்தால் நினைத்துக் கொண்டே இருக்

கிறோம். எதைப் பார்த்தாலும் அல்லது யாரைக் கண்டா லும் ஏதோ ஒன்று நம் நினைப்பில் வந்து போகிறது; சில நிமிடங்களுக்கு மனத்தை நெருடுகிறது.

—இதோ, சில மாதங்கள் கழித்து குவாலியர் நகரி லிருந்து சுகந்தா எழுதியிருக்கும் துயரம் தோய்ந்த கடிதத்தைப் பார்த்ததும் எப்படி எனக்கு அவள் ஓர் ஆத்ம சிநேகிதியாக ஒரு காலத்தில் என்னுடைய வாழ்க்கையில் உன்னத இடம் பெற்றிருந்தாள் என்ற மெலிதான நினை வலைகள் என்னுள் சில கணங்கள் புரண்டு கொண்டிருந் தன. அதே போல, ஜன்னலுக்கு வெளியில் தெருவில் ஒரு சிறுமி ரோஜாப்பூ விற்றுச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தபோது என் தோழி— என் மகள் ரோஸ்மேரி என் மன வெளியில் அழகிய மேகம் போலக் கடந்து சென்றாள்.

இருபத்தோரு வயதாகி விட்டாலும் மனத்தன்மையில் ரோஸ்மேரி வெறும் பன்னிரண்டு வயதுப் பெண்ணாகத்தான் இருந்தாள்.

அந்தப் பெண் ரோஜா மலர்களின்மீது அலாதியான நேசம் கொண்டிருந்தாள். ரோஜாக்களை வருடுவாள். ரோஜாக்களை முத்தமிடுவாள். ரோஜாக்களோடு பேசவும் செய்வாள். ரோஜாப் பூக்களும் அவளோடு பேசுமாம்...

ஒரு நாள்...

ரோஸ்மேரியின் அறையில் ஈஸிச்சேரில் சாய்ந்து படித்துக் கொண்டிருந்தேன். தோட்டத்திலிருந்து ரோஸ்மேரி என் னைக் கூப்பிட்டபடியே வந்தாள். அவள் கூப்பிட்டது என் காதில் விழுந்தாலும் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தின் சுவாரஸ்யத்திலிருந்து கலையாமலே அமர்ந் திருந்தேன்.

"பாஸ், இங்கே பாரேன்..."

"படிச்சிட்டிருக்கேன். தொந்தரவு பண்ணாதே..." —தலையை நிமிர்த்தாமலே சொன்னேன்.

''உஹூம்... ஒரே ஒரு நிமிஷம் பார் பாஸ்''— சிணுங்கினாள்.

''எதுக்கு?''— பார்வையை உயர்த்தாமலே கேட்டேன்.

''பாரேன்...''

நிமிர்ந்து பார்த்தேன். இரண்டு கைகளையும் என்னை நோக்கி நீட்டியபடி நின்றாள்.

''போச்சு, உனக்கு வயசாயிடுச்சு பாஸ்... கண் சரியாத் தெரியலை...''

''கண்ணெல்லாம் நல்லாத்தான் தெரியுது...''

''என்ன தெரியுது ? நல்லா பாத்துட்டு சொல்லு.''

''ஓ! ரெண்டு கையிலேயும் ரெண்டு ரோஜா வச்சிருக்கியா? ஸாரிம்மா! நான் பாக்கலை...''

ரோஸ்மேரி அழகு காட்டிவிட்டுச் சொன்னாள்: ''வேற ரெண்டைக் காட்டினா மட்டும் உடனே பாத்துடுவே!''

பட்டென்று புத்தகத்தை மூடினேன். ''அன்னிக்கி ஒரு நாள் உன்னை இந்த மாதிரி வல்கரா பேசாதேன்னு வார்ன் பண்ணிருக்கேன். மறுபடியும் வம்புக்காக பேசறே. ஜாக்கிரதை! மறுபடியும் இந்த மாதிரி சம்பந்தமே இல்லாம அசிங்கமா பேசினே— 'பளார்'னு கன்னத்துல அறைஞ்சிடுவேன்.''

''அறை பாக்கலாம்.''

''உன் அக்கா கன்னாபின்னான்னு பேசறதைப் பார்த்துட்டு நீயும் அந்த மாதிரியெல்லாம் பேசணும்னு நெனைக்காத. புரியுதா? நீ வேற, அவ வேற. அது சுத்தமா தண்ணி தெளிக்க வேண்டிய கேஸ். நீ அப்படியில்லை, தெரிஞ்சுக்க. ஜெம் நீ!''

ரோஸ்மேரியின் கண்களில் விநோத அன்புக் கலவை தெரிந்தது. அவளின் மிருதுவான மெத்தென்ற கைகள்

என் கழுத்தைச் சுற்றிப் பின்னிக் கொண்டன. ''உன்னை மாதிரி ஒரு ஆளை லைஃப்ல இனிமே நான் மீட் பண்ணவே போறதில்லை பாஸ்...''

ரோஸ்மேரியின் அன்பில் தோய்ந்த இந்தச் சொற்கள் என்னைப் பற்றிய வெறும் புகழுரைகள் இல்லை; இச்சொற்கள் என்னைப் பற்றிய உண்மைகளே. இந்த ரோஸ்மேரி போன்ற, இரண்டொரு மாதங்களுக்கு ஒரு முறை குவாலியரிலிருந்து துயரம் இழையக் கடிதம் எழுதும் சுகந்தா போன்ற, இன்னும் என் வாழ்க்கை நெடுக நான் உறவாடிப் பிரிந்து போன பற்பல பெண்களின் நேசம்தான் இறுதியில் என்னை நிர்மலமான மனிதனாக மலரச் செய்ததென்று சொல்லலாம்.

''ரோஸி...! இப்படியே உன்னைத் தூக்கிட்டுப் போய் எங்க அம்மாகிட்ட காட்டணும் போல இருக்கு எனக்கு...''

''பாஸ், நெஜமாவே என்னை ஒருநாள் உன் மதர்கிட்ட கூட்டிட்டுப் போறியா?''

''கண்டிப்பா அழைச்சிட்டு போறேன்.''

''ப்ராமிஸ் ?''

''ப்ராமிஸ்.''

''உன் மதர்கிட்ட என்னை யார்னு சொல்வே ?''

''யார்னு சொல்லணும் சொல். அதே மாதிரி சொல்றேன்.''

''நீயும் நானும் வெறும் ஃப்ரெண்ட்ஸா ?''

''இல்லை !''

''ப்ரதர் சிஸ்டர் மாதிரியா ?''

''நோ !''

''ஹஸ்பண்ட் ஒய்ஃப் மாதிரியா ?''

''நஹி !''

''நாம யார் பாஸ் ?''

''தெரியலை டார்லிங்... ஆனா உண்மையா சொல்லப் போனா... நீ எனக்கு டாட்டர்!''

''பாஸ்...''

''யெஸ்...''

''என்னை நீ விட்டுட்டுப் போயிட மாட்டியே?''

''கண்டிப்பா போகமாட்டேன் சின்ன கண்ணம்மா...''

நான் — இந்த ராம்குமார் எங்கேயும் போகவில்லை. ரோஸ்மேரியாவது எங்கேயும் போய்விடமாட்டாரயே என்று என்னிடம்தான் மருட்சியுடன் கேட்டாள். ஆனால், சுகந்தா? என்னை விட்டு ஒரு போதும் பிரிந்து போகவே மாட்டேனென்று வங்கக் கடலின் எதிரில் எனக்கு அவள் தந்த வாக்கை மீறி எங்கேயோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் சென்று விட்டாள்.

சென்னை நகரின் கிழக்கே விரிந்து பரந்திருந்த வங்கக் கடலின் எதிரில் என்னைவிட்டு ஒருபோதும் பிரிந்து போகவே மாட்டேனென்று சுகந்தா உறுதி மொழிந்த அந்தச் சம்பவத்தை நோக்கி என் நினைவுத் தடம் பெயர்ந்து செல்கிறது. அந்தச் சிறிய சம்பவத்தை சொல்வதற்குமுன் ராம்குமார் என்ற என்னைப் பற்றியும், சுகந்தா என்ற என் சிநேகிதி பற்றியும் சில அவசியமான தகவல்களை இங்கே சொல்லி விடுவது பொருத்தமாக இருக்கும்.

மதுரைக்கு மேற்கே நாற்பதாவது மைலில் இருக்கும் பெரியகுளம் என்ற மிகப் பெரிய கிராமத்தின் தென்கரை என்ற பகுதியின் புழுதிக் காட்டில் பிறந்து வளர்ந்தவுன் நான். தேக்கடி, கம்பம் போன்ற வனத்துறைகளில் வன விலங்குகளை நேருக்கு நேர் ஒற்றையாகவே சந்தித்திருக்கிற அச்சமற்ற தன்மை குழந்தைப் பருவத்திலிருந்தே என்னுள் மிக இலகுவாகப் படிந்திருந்தது. அந்த வனத்தன்மை என் தோற்றத்தில் நான் சென்னையில் வந்து வேரூன்றி விட்ட பின்பும் ஒரு சிதையாத கம்பீரத்தை நிரந்தரமாகவே என்னில் படியச் செய்திருந்தது. அறிவார்த்த ரீதியில் நவீன வாழ்க்

கையின் எல்லா அம்சங்களோடும் நான் கைகோத்துக் கொண்டிருந்தாலும்கூட, பரம்பரை பரம்பரையாக வீரம் உறைந்த ஒரு குலத்தில் பிறந்து ஆளாகியிருந்த கம்பீரம், என்னை சென்னை நகரத்து இளைஞர்களிடமிருந்து சுகந்தாவுக்கு முற்றிலுமாக மாறுபட்ட மனிதனாகக் காட்டி விட்டது.

ஒரு அகில உலக நிறுவனத்தில் பணி புரிந்து கொண் டிருந்த நவநாகரிக யுவதியாக மட்டுமல்லாமல், பல மொழி களில் அநாயாசமாக உரையாடத் தெரிந்த சுகந்தா தமிழ், ஆங்கிலத்தைத் தவிர வேறு எந்த மொழியிலும் இலகுவாகப் பேச தெரியாத எனக்கு, ஓர் அருமையான பெண்ணாகத் தெரிந்ததில் வியப்பில்லை. இத்தனைக்கும் என்னுடைய இலக்கிய, சங்கீத ஞானத் தேர்ச்சியில் சுகந்தா பத்தில் ஒரு பங்குகூடத் தேர்ச்சி பெறாதவள்தான், ஆனாலும் அவளின் குடும்பப் பின்னணியின் தன்னம்பிக்கையின் முன் அவளுடன் பழகத் துவங்கிய ஆரம்பத்தில் அவளிடம் எனக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை இருந்தது. தேக்கடிக் காடுகளில் எத்த னையோ சமயங்களில் ஒற்றையாக எதிர்ப்பட்ட யானையின் முன்னிலையில் கூடப் பயப்பட்டிராத நான், துவக்கத்தில் சுகந்தாவிடம் பேசக் கூடப் பயந்து போயிருந்தேன்!

ஏறக்குறைய ஒரு வருடம் பஸ் பயணத்தில் அந்நியர் களாகவே ஒன்றாகப் பயணமாகி, எதிர்பாராமல் மயிலாப் பூரில் இருந்த பட்டாடை விற்பனைக் கூடத்தில் ஒருவரை ஒருவர் பார்க்க நேரிட்டு, தயங்கித் தயங்கி ஓரிரு வார்த் தைகள் பேசி, தினமும் மாலை வேளைகளில் சந்திக்கிற நண்பர்களாகி விட்டிருந்தோம்.

ஒவ்வொரு சந்திப்பிலும் எனக்கு சுகந்தாவின் மேல் இருந்த ஈர்ப்பின் நீர் மட்டம் அதிகமாகிக் கொண்டே இருந்தது! இழை இழையாக அவளோடு நட்பின் இறுக் கத்தை உறுதிப்படுத்திக் கொண்டபின் என்னுடைய காதலை உரிய தருணத்தில் சுகந்தாவிடம் வெளிப்படுத்திக் கொள்ளக்

காத்திருந்தேன். ஒருநாள் மாலை மெரீனா மணல் வெளியில் அவளும் நானும் எதிர் எதிராக மௌனமாக அமர்ந்திருந்தோம். நான் கடலையே பார்த்துக் கொண்டிருக்க, சுகந்தா பொய்யாக ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். நிமிடங்கள் மிக மிகக் கனமாகக் கழிந்து கொண்டிருந்தன. சிறிது நேரத்துக்குப் பின் புத்தகத்தை மூடி வைத்தாள். நான் கடலையே கவனித்துக் கொண்டிருந்தேன்.

''ராம்குமார்...''— மெல்லிய குரலில் அழைத்தாள். நான் கடலைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேன். சில நிமிடங்கள் மௌனமாக இருந்த பின் மறுபடியும் கூப்பிட்டாள்:

''ஹலோ— ராம்குமார்...!''

''யெஸ்...!''- சற்றே அதிர்ந்தவன் போல சுகந்தாவைத் திரும்பிப் பார்த்தேன். அவளின் கண்கள் சில கணங்கள் என்னை நோக்கின.

''சொல்லுங்க சுகந்தா...!'' என்றேன்.

''கடலையே பார்த்திண்டு இருந்தீங்களே— என்னவோ யோசிச்சிண்டிருந்த மாதிரி... அப்படியென்ன யோசனை ?'' —சுகந்தா கேட்டாள். இந்தக் கேள்விதான் எங்கள் இருவருடைய வாழ்க்கையின் போக்கை முழுமையாக மாற்றி அமைத்து விட்டது !

சுகந்தாவின் இந்தக் கேள்வி பெண்ணுடன் ஏற்படுகிற நட்பு அல்லது காதல் உறவில் எனக்கே இயல்பான ஒரு கள்ளங்கபடமற்ற தன்மை வெளிப் பாட்டைப் பளீரெனக் காட்டி விட்டது.

''ஒண்ணுமில்லே சுகந்தா... ... ஒண்ணுமில்லே... கடலையே பாத்திட்டிருந்தப்ப சின்ன ஒரு சந்தேகம் வந்திச்சி எனக்கு...''

''என்ன சந்தேகம் ராம்குமார் ?''

''ஒண்ணுமில்லே. கடல்ல ஒவ்வொரு அலையா வந்து வந்து போயிட்டிருந்ததைப் பார்த்ததும் நீங்களும் என் வாழ்க்கையில ஒரு அழகான கடல் அலை மாதிரி வந்திட்டு கடல் அலை மாதிரியே போயிடுவீங்களோன்னு ஜஸ்ட் நெனைச்சிப் பார்த்தேன்...''

நான் எதிர்பார்க்கவே இல்லை. சுகந்தா பளிச்சென்று முழங்கால்களில் அவளின் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். லேசாக அவளின் உடல் விசும்பிக் கொண்டிருந்தது. சுகந்தாவின் உருவில் ஏதோ ஒரு கடல் தணிந்து விட்டாற் போல் தெரிந்தது. நான் அமைதியாக உட்கார்ந்திருந்தேன்.

பல நிமிஷங்களுக்குப் பின் முகத்தை முழங்கால்களிலிருந்து நிமிர்த்திய போது கிரஹணம் கடந்த நிலா போல அவளின் முகம் ஓர் உறுதியடைந்திருந்தது. நட்பு என்ற தளத்திலிருந்து எங்களின் உறவு காதல் என்ற விரிந்த பரிவர்த்தனைக்குப் பரிணாமமடையும் துளிர்ப்புகளை சுகந்தாவின் கண்களில் அந்தக் கணத்திலேயே என்னால் கண்டு கொள்ள முடிந்தது.

முற்றிலும் புதிய குரலில் சொன்னாள்: ''போக மாட்டேன் ராம்குமார்... அலை மாதிரி வந்திட்டு நான் போகவே மாட்டேன். சத்தியமா மாட்டேன்.''

சுகந்தா என்னை விட்டு சத்தியமாகப் போகவே மாட்டேனென்று மட்டும் சொல்லவில்லை. ராம்குமார் என்ற கடலோடுதான் சுகந்தா என்ற நதி வந்து கலந்து ஒன்றாகும் என்று கொஞ்சம் உணர்வு மேலிட்டும் கூறினாள்.

ஆனால், அவள் தான் என்னை விட்டுப் பிரிந்தாள். திசை மாறிய நதியாக வேறொரு கடலில் போய் விழவும் செய்தாள்...!

—இப்போது அவை எல்லாமே வெறும் நினைவுப் படிமங்கள் தானேயன்றி விசனங்கள் அல்ல !

இன்றைக்கு அந்த சுகந்தாவையோ, ரோஸ்மேரி யையோ அல்லது ரோஸ்மேரியின் அறிமுகம் எனக்குக் கிடைப்பதற்கே காரணமான அவளின் மூத்த சகோதரியான ஸீலியாவையோ நினைத்துப் பார்க்கிறபோது என்னுள் எந்த உணர்வுச் சார்பும் எழாமல், ஏதோ எனக்குச் சம்பந் தமே இல்லாத ஒரு நாடகத்தின் மேடைக் காட்சிகளைக் கவனித்துக் கொண்டிருக்கிற கவனம் மட்டுமே ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் அன்றைக்கு ?

காதலாலும் இழப்பாலும் கோபத்தாலும் மூர்க்கத்தனத் தாலும் பொங்கி, முட்டி மோதி உராய்ந்து வீழ்ந்த அந்த நாட்கள் அன்றைய கணங்களில் எத்தனை குரூர மானவை... எவ்வளவு அவலமானவை !

அங்கும் இங்குமாக வானத்தில் நட்சத்திரம் ஒளிர்வது போல் என்னுள் மின்னிய நினைவுத் துணுக்குகள் ரோஸ் மேரியின் மூத்த சகோதரி ஸீலியா எனக்கு அறிமுகம் ஆகிய சம்பவத்தை அடைந்து ஒரு ஒழுங்கான நினைவுத் தொடரா கவே நீட்சி கொள்கிறது...

அப்போது என்னுடைய தொழில் பட்டறையும் அலுவல கமும், ஒன்றாக இணைந்ததாக கிண்டியில் இருந்தது. மருத்துவமனைகள், ஹோட்டல்கள் மற்றும் தனி நபர்களின் வீட்டு உபயோகங்களுக்கான ஸ்டீல் பீரோ, கட்டில், மேஜை, நாற்காலி போன்ற தயாரிப்புகளில் ஈடுபட்டிருந்த அந்தச் சிறிய நிறுவனத்தை, தனியொரு முதலாளியாக அந்த மிக இளமையான வயதிலேயே நான் நிர்வகித்துக் கொண்டிருந்தேன்.

ரோஸ்மேரியின் சகோதரி ஸீலியா ஜேஸ்மின், சிறிதுமுன் பணம் செலுத்தி என்றைக்கோ ஒரு பெரிய ஸ்டீல் பீரோ வுக்கும் ஒரு பெரிய கட்டில் ஒன்றுக்கும் ஆர்டர் கொடுத்து விட்டு, குறிப்பிட்ட தேதியில் வந்து முழுத் தொகையையும் செலுத்தி டெலிவரி எடுத்துக் கொள்ள ஒப்புக் கொண்டு போயிருக்கிறாள். ஆனால், அவள் டெலிவரி பெற்றுக்

கொள்ளச் சம்மதித்துப் போயிருந்த அந்தக் குறிப்பிட்ட தேதிக்கு மேல் ஒரு வாரம் ஆகியும் ஸீலியா பொருட்களை வாங்கிக் கொள்ள வராததால், இவ்விஷயம் எனக்குத் தெரிவிக்கப்பட்டது. பாக்கிப் பணத்தையும் செலுத்தி உடனே பொருட்களை வந்து டெலிவரி எடுத்துக் கொள்ளச் சொல்லி ஸீலியாவுக்குக் கடிதம் எழுதினோம். ஸீலியா வரவில்லை. கடிதத்துக்குப் பதிலும் எழுதவில்லை.

பத்து தினங்கள் கழித்து ஸீலியா பணத்துடன் டெலிவரி எடுத்துக் கொள்ள வந்தபோது, அவளுக்காகத் தயார் செய்யப்பட்டிருந்த பீரோ அவசரமாகக் கேட்டு வந்திருந்த வேறொருவருக்கு இரண்டு நாட்களுக்கு முன் தவிர்க்க முடியாமல் டெலிவரி செய்யப்பட்டிருந்தது. தனக்கு உடனே பீரோ வேண்டுமென்று முறையிட்ட ஸீலியாவைப் பணியாட்கள் என்னிடம் தயக்கத்துடன் அழைத்து வந்தார்கள்.

பணம் சம்பாதிப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு பணப் பெட்டியின் அருகில் அழுக்குப் படிந்து கிடக்கும் ராம்குமார் என்னும் ஒரு தொப்பை பெருத்த முதலாளியை மனத்தில் கற்பனை செய்தபடி என்னுடைய அறைக்குள் பிரவேசித்த ஸீலியா என்ற கவர்ச்சியான அந்த இளம் ஆங்கிலோ இந்தியப் பெண், கச்சிதமான உடையில் மிகச் சுத்தமான கம்பீரத்துடன் சிகரெட் புகைத்தபடி அமர்ந்திருந்த இளைஞனான என்னைப் பார்த்துச் சில விநாடிகள் திக்கு முக்காடிப் போனாள்! அதே திகைப்பு எனக்குள்ளும் ஏற்பட்டது. அவளோடு கலந்து வந்த நறுமணம் சட்டென என்னுடைய அறையின் சூழலைப் புதுப்பித்து விட்டது.

''ஐ'ம் ஸீலியா ஜேஸ்மின் சார்— குட் ஈவினிங்!''

''குட் ஈவினிங்! ப்ளீஸ், உட்காருங்க.''

''ஸாரி சார்! ஐ வாஸ் இன் நர்ஸிங் ஹோம்... ஸோ— நா வந்து டெலிவரி எடுத்துக்க முடியாமப் போச்சு...''

''எங்க லெட்டருக்காவது உங்க வீட்ல இருந்து யாராவது லெட்டர் போட்டிருக்கலாமே? யாருமே வரலை? பதிலும் இல்லை... நாங்க என்ன பண்றது, சொல்லுங்க...?''

''ஸாரி சார்... வீட்ல ஒல்ட் ஆண்ட்டியைத் தவிர வேற யாருமில்லை... நர்ஸிங் ஹோம்ல இருந்து டிஸ்சார்ஜ் ஆகி வந்த அப்புறம்தான் நா உங்க லெட்டரையே பார்த்தேன்...''

அவளுக்கு நான் என்ன பதில் சொல்லலாமென்று சில விநாடிகள் யோசித்துக் கொண்டிருந்த போது, ஸீலியாவே தணிந்து சொன்னாள்:

''பரவால்ல சார். நீங்க வேற ஒரு டேட் சொல்லுங்க. கரெக்ட்டா வந்து டெலிவரி எடுத்துக்கறேன்— பணம் இப்பவே பண்ணிடறேன்...''

''பணம் இப்ப கட்ட வேணாம். டெலிவரி எடுக்கும் போது குடுங்க, போதும்...'' என்றேன்.

மிக விசித்திரமாக ஸீலியாவின் சிறிய கண்கள் என்னுடைய கண்களை விடா முயற்சியுடன் சந்தித்தன. என்ன செய்யலாம் என்ற பொய்யான பாவனையில் நானும் அவளுடைய கண்களையே பார்த்தபடியே அமர்ந்திருந்தேன்.

எழுந்து கொண்ட ஸீலியா உவகையுடன் என்னைப் பார்த்து, ''தேங்க்யூ வெரி மச்!'' என்றாள்.

நானும் எழுந்து நின்றேன். ''பரவாயில்லே...''

''வெரி ஹேப்பி டு ஹேவ் மெட் யூ'' என்றபடி என்னை நோக்கிக் கையை நீட்டினாள்.

இதை எதிர்பாராத நான் விருட்டென அவளுடன் கை குலுக்கினேன். ஸீலியாவின் வாசனைத் திரவியம் அதீதமாகக் கமழ்ந்த நெருக்கத்தில், அவளின் எதிர்பாராத கை குலுக்கலின் ஒரு ரகசியமான சாகசத்தில் என்னுடைய இளமை சற்றே மயக்க முற்றுவிட்டது! அந்த ஆண்மையின் பலவீனத்தை அப் பெண்மையின் பலம் கண்டு கொண்டது போலும்!

# 2

ஸீலியா என்னைச் சந்தித்துச் சென்ற இரண்டு தினங்களுக்குப் பின் ஆபீஸில் என்னுடைய அறையில் இருந்தேன். சிகரெட் புகையப் புகைய நாற்காலியில் அமர்ந்தபடி ஸீலியாவைச் சிறிது நேரத்துக்கு நினைவில் கொண்டு வந்தேன். முன்பு படித்த டி. எச். லாரென்ஸின் 'விமென் இன் லவ்' நாவலை ஒரு பொருத்தமான புத்துணர்வுடன் மீண்டும் எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். அப்போது டெலிபோன் ஒலித்தது.

ரிஸீவரை எடுத்து ''ஹலோ !'' என்றேன்.

''ஹலோ ராம்ஜி... !''

—சுகந்தா பேசினாள். அந்தக் கணத்தில் என் உணர்வுகளில் பரிவு நீர் ஊற்றுப் போலப் பீரிட்டது.

''என்னம்மா, காலங்காத்தாலேயே போன் பண்ற ? எதுவும் விசேஷமா ?''

''சும்மா தான் ரிங் பண்ணினேன். பிஸியா இருக் கேளா ?''

''பிஸியாவது கிஸியாவது. சும்மா கதை படிச்சிட்டி ருக்கேன்.''

''எனக்கு ஒர்க் ஒண்ணும் இல்ல. ஒங்க நெனப்பு வந்தது. அதான் போன் பண்ணினேன்...''

''சரி, இன்னிக்கு ஈவினிங் எங்கேயாவது போக லாமா ?''

''இல்லை ராம்ஜி. இன்னிக்கு ஜானகியோட வீட்ல அவ குழந்தையோட பர்த்டே. என்னை அழைச்சிருக்கா. நீங்க ளும் வாங்க ராம்ஜி. ரெண்டு பேருமா போயிட்டு அப்படியே சாப்பிட்டுட்டு வந்துடலாம்...''

''ஐயையோ ! நான் வரலையம்மா அந்த அறுவை விட்டுக்கு...''

''ப்ளீஸ் ! எனக்காக வாங்கோ. நீங்களும் வந்தா ஜாலியா இருக்கும்.''

''என்னமோ உன்னோட புள்ளைக்கு பர்த்டே மாதிரி தான் கூப்பிடறே !''

சுகந்தாவிடமிருந்து பதில் இல்லை. சிரமத்துடன் சிரிப்பை அவள் கட்டுப்படுத்திக் கொண்டிருப்பதை என்னால் கற்பனையில் காண முடிந்தது.

''ஏய் ! என்ன பேச்சு மூச்சைக் காணோம் ?''

''போன்ல இந்த மாதிரியெல்லாம் அறுத்தேள்னா அப் புறம் ஒரு நாளும் உங்களுக்குப் போன் பண்ணவே மாட்டேன் ராம்ஜி...''

''சரி, அப்ப இன்னிக்கு ஈவினிங் உன்னை மீட் பண்ண முடியாது...''

''சீரியஸாவே கூப்பிடறேன். நீங்களும் வாங்கோ.''

''இல்லை சுகந்தா, நான் வரலை...''

''ஏன், வேற எங்கேயும் போறேளா ?''

''நோ நோ. அதெல்லாம் இல்லை. ஆனா, அவ வீட்டுக்கு நான் வரலை.''

''ஏன் வரலை ?''

''வரலேன்னா வரலேதான் !''

''உங்களைத் திருத்தவே முடியாது, அப்போ வச்சிடட்டுமா ?''

''நாளைக்கு ஈவினிங் பார்ப்போம்...''

''நோ !''

''ஏன், நாளைக்கும் ஜானகி புள்ளைக்கு பர்த்டேயா ?''

''யெஸ் !''

''போய்த் தொலை.''

வழக்கத்துக்குப் புறம்பாக அன்று மாலை வரை ஆபீஸிலிருந்து விட்டு செயிண்ட் தாமஸ் மவுண்ட் பகுதி வரை வாக்கிங் போய் வரலாமென்ற நினைப்புடன் மெதுவாக நடந்து சென்று கொண்டிருந்தேன். ஒரு வீட்டின் காம்பவுண்டுச் சுவரில் உட்கார்ந்து உற்சாகமாகச் சில நீக்ரோ இளைஞர்கள் கிடார்களில் கார்டுகளை விரித்துக் கொண்டிருந்தார்கள். உயர்ந்த மரங்களில் இலைகளின் மறைவில் குயில்கள் ஒற்றை ஒற்றையாகக் கூவிக் கொண்டிருந்தன.

அகன்ற மைதானத்தை நோக்கித் திரும்பிய சிறிய பாதையில் நடந்தேன். இடது புறம் ஐந்தாவது வீட்டின்முன் தோட்டத்தில் ஸீலியா ஜேஸ்மின் நின்று யாருடனோ பேசிக் கொண்டிருந்தாள். சட்டென்று திரும்பி நடந்து விடலாமா என்று நினைத்தேன். ஆனால் ஸீலியா என்னைப் பார்த்து விட்டாள். ஒரு வசீகரமான வலைக்குள் பிரவேசிக்கிற நூதன உணர்வுடன் வேறு வழியின்றி நேராகவே நடந்தேன். என்னை வரவேற்பது போல, அவள் தோட்

டத்தின் குட்டையான கதவுகளைத் திறந்து வெளியில் வந்து நின்று என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள். பொதுவாக நான் பெண்களைப் பார்த்துப் புன்னகை செய்வதே இல்லை!

அதனால் வெறுமே "குட்-ஈவினிங்!" என்றேன்.

"குட் ஈவினிங் மிஸ்டர் ராம்குமார்! இதுதான் என்னோட வீடு. ப்ளீஸ் கம்!" என்றாள்.

நான் தயங்கினேன். "பரவாயில்ல— இன்னொரு நாள் வரேன்!" என்றேன்.

"நோ நோ. யு மஸ்ட் கம் ப்ளீஸ்...!"

நான் மேலும் தயங்கினேன். பஞ்சும் நெருப்பும் நெருங்குவது போன்ற ஒரு விபரீத எண்ணம் எனக்குள் தோன்றியது.

"ப்ளீஸ் கம் இன் சார்!"

விபரீத் எண்ணம் கலைந்தது. அந்த வலைக்குள் நுழைந்துதான் பார்ப்போமே என்ற இருமாப்புடன், திறந்து கொண்ட மரக் கதவுகளினூடே ஸீலியாவுடன் நுழைந்து அவளின் வீட்டுக்குள் சென்றேன்— உடன் வந்த நறுமணத்தை சுவாசித்தபடியே...

ஹாலில் இரண்டு நீண்ட செவ்வக வடிவமான கண்ணாடித் தொட்டிகளில் பல வண்ண மீன்கள் சலனமற்று ஊர்ந்து கொண்டிருந்தன.

அவளின் அறைக்குள் என்னை அழைத்துச் சென்றாள். அழகிய சோபாவில் என்னை உட்கார வைத்தாள். உயரமான அவளின் படுக்கை விரிந்த கட்டிலின் சட்டங்களில் அவளின் சில உள்ளாடைகள் அவசியமற்றுக் கிடந்து என்னுடைய இளமை உணர்வுகளைப் பார்த்துக் கண் சிமிட்டின.

சமையல் அறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த வயதான ஓர் அம்மாள் வந்து எட்டிப் பார்த்தாள். ஓவல் கலந்து கொண்டு வரும்படி ஸீலியா அந்த அம்மாளிடம் கூறினாள்.

''மதரா ?''— ஏதாவது கேட்க வேண்டுமே என்பதற்காகக் கேட்டு வைத்தேன்.

''நோ நோ... எங்க ஆண்ட்டி.''

''உங்க ஃபாதர் மதர் எல்லாம் எங்கே இருக்காங்க ?''

''டாடி இஸ் நோமோர். மம்மி இஸ் இன் லண்டன்...''

''அந்தப் போட்டோவில் இருக்கறது ?''

''அது என்னோட யங்கர் சிஸ்டர். குன்னூரில் அங்கிள் கூட இருக்கு.''

ஓவல் வந்தது. ஓவலைத் துளித் துளியாக உறிஞ்சிக் கொண்டிருந்த போதும், கட்டிலில் கிடந்த ஸீலியாவின் உள்ளாடைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''டு யூ லைக் ம்யூஸிக் ?''— என்னை நெடு நேரத்துக்கு அங்கு இருக்கச் செய்கிற உத்தியை ஸீலியா கையாள்கிறாள் என்பதை உடனே என்னால் உணர முடிந்தது.

காலிக் கோப்பையை அவளிடம் நீட்டிய படியே, ''என்ன ம்யூஸிக் ?'' என்றேன்.

''ராக், பாப், ஜாஸ்...''

நான் எழுந்து விட்டேன். ''ஓகே ஸீலியா... ஸீயூ !''

திடுதிப்பென்று இப்படி எழுந்து விடுவேன் என்பதை நினைத்துப் பார்த்திராத ஸீலியா கொஞ்சம் திகைத்துப் போனாள். இன்னும் சிறிது நேரம் இருந்து விட்டுப் போங்களேன் என்று அத்தனை வெளிப்படையாக என்னிடம் அவள் உரிமை கொண்டாடவா முடியும்...! கட்டிலின் சட்டத்தில் ஒரு கவர்ச்சிகரமான இளம் பெண்ணின் உள்ளாடைகளைப் பார்த்துக் கொண்டே, அருகிலேயே அவளிடமிருந்து மெலிதாக அலையடிக்கிற நறுமணத்தையும் சுவாசித்துக் கொண்டே ஒரு படுக்கையறையில் என்னால் பொய்யாக உரையாடிக் கொண்டிருக்கவா முடியும் ? அவளை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் வேகமாக அந்த வீட்டிலிருந்து வெளியேறி விட்டேன்.

இரவு தூக்கம் வராமல் படுக்கையில் வெகுநேரம் விழித்திருந்தேன். ஸீலியாவின் வீட்டுக்குள் நுழைந்தது மிகப் பெரிய பிழையாகத் தெரிந்தது. ஆனால் மறுகணமே அவளின் நறுமணத்தை இன்னும் கொஞ்சம் நெருங்கியே சுவாசித்துப் பார்த்திருக்கலாமோ என்ற மோகமும் மனத்துள் மூண்டது ! மோகம் முப்பது நிமிடம் தானோ என்னவோ— முப்பது நிமிடங்களுக்குப் பின் கடிகாரத்தின் ரேடிய முட்களை நான் உணரவில்லை.

மறுநாள் மாலை.

நானும் சுகந்தாவும் கடற்கரையில் உட்கார்ந்திருந்தோம். ஏறக்குறைய ஒரு வருடமாக இப்படிச் சந்தித்துக் கொண்டிருக்கிறோம்.

''என்ன, நேத்திக்கு பர்த்டே பார்ட்டியெல்லாம் ரொம்ப தடபுடலா ?''— சுகந்தாவைக் கேட்டேன்.

''அதெல்லாம் கிடையாது. ரொம்ப சிம்பிள்தான். ஆனா, நீங்கள்தான் வரமாட்டேன்னு சொல்லிட்டேளே... பட் ராம்ஜி, நீங்க வராதது கூட ஒரு விதத்துல நல்லதாத் தான் போச்சு...''

''ஏன், என்ன ஆச்சு ?''

''திடீர்னு ஜானகியோட வீட்டுக்கு என்னோட தங்கையும் வந்திட்டா !''

''பாத்தியா... எனக்குத் தெரியும், உன்னோட் தங்கை திடீர்னு அங்கே வந்து நிப்பாள்னு...!''

''ரொம்பத்தான் வழியறது... அதோ சாக்கோ பார் வரான்... வாங்கலாமா ?''

''ஓயெஸ் ! கூப்டு கூப்டு...''

''சாக்கோ பாருக்கு நாந்தான் பே பண்ணுவேன்.'' —சுகந்தா அவளுக்கே உரிய காதல் முறையில் சொன்னாள்.

''ரொம்பத் தங்கமா போச்சி ! என்னோட எல்லா செல வுக்குமே நீயே பணம் தந்திடு; பேசாம என் பிசினெஸை யெல்லாம் க்ளோஸ் பண்ணிடறேன். வாழ்க்கையிலேயே எனக்குப் பிடிக்காத விஷயம்— இந்த ஆபீசுக்குப் போறது தான் ! பெரிய்ய பேஜார்...''

சாக்கோபாருக்கு சுகந்தா காசு கொடுத்தாள்.

''சாக்கோபார் எப்படியிருக்கு ராம்ஜி ?''

''கேக்கணுமா, டாப் !''

''சரி, நேத்திக்கு ஈவினிங் நீங்க என்ன செஞ்சேள் ?''

''இரு; இந்த சிகரெட்டைப் பத்த வச்சிட்டுச் சொல்றேன்.''

காற்றில் மூன்று குச்சிகள் வீணாகி விட்டன.

''குடுங்கோ நான் பத்த வைக்கிறேன்... இப்படித் திரும்பி உக்காருங்கோ...''

''போன ஜென்மத்தில் நீ பெரிய செயின் ஸ்மோக்கரா இருந்திருப்பேன்னு நெனைக்கிறேன் ! எவ்வளவு ஜோரா பத்த வைக்கிறே...!''

''சரி, அதெல்லாம் இருக்கட்டும். நேத்திக்கு என்ன பண்ணினேள்— அதைச் சொல்லுங்கோ.''

''நேத்திக்கா ? ரைட். நேத்திக்கு செயின்ட் தாமஸ் மவுண்ட் பக்கம் போயிருந்தேன்.''

''எதுக்கு ?''

''சும்மாதான். ஆபீஸ்ல இருந்து அப்படியே கிளம்பி ஒரு வாக் போனேன்...''

''வாக் போய்... ?''

''வாக் போயிட்டே இருந்தேனா— அப்ப ஒரு வீட்டு வாசல்ல ஒரு ஆங்கிலோ இண்டியன் லேடி நின்னுட்டிருந்தா. ஒரு மாதிரி என்னைப் பாத்தா... !''

''ஐயையோ! தெரிஞ்சவளா உங்களுக்கு?''

''நோ நோ... அவளை எனக்குத் தெரியவே தெரியாது! என்னை அவ ஒருமாதிரி பார்த்தது மட்டுமில்லாமே ஒரு மாதிரி சிரிக்க வேற செஞ்சா!''— சுகந்தா சீரியஸாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''போனாப் போறதுன்னு ஒரு மரியாதைக்காக நானும் அவளைப் பாத்துச் சிரிச்சேன்! அவ்வளவுதான்; வீட்டுக் குள்ள வாங்களேன்னு கூப்ட்டுட்டா! தப்பிச்சா போதும்னு அவளைத் திரும்பிக் கூடப் பார்க்காமே ஓடி வந்துட் டேன்...''

சுகந்தா மௌனமாக மணலைக் கிறுக்கிக் கொண்டிருந் தாள். நான் உல்லாசமாக சிகரெட்டைப் புகைத்தபடி மணலில் சாய்ந்திருந்தேன். சில கணங்கள் சுகந்தா தயக்கத் துடன் என்னையும் கடலையும் மாறி மாறிப் பார்த்தாள். அவளின் பார்வையில் சிறிது வருத்தம் வந்திருந்தது.

''நீங்க பொய் பேசறேள் ராம்ஜி!'' என்றாள் மெல்லிய குரலில்.

'சுள்' ளென்று விரல்களின் இடுக்கில் கரைந்திருந்த சிகரெட் சுட்டது. மிகவும் செயற்கையாக அவளைப் பார்த்தபடி கேட்டேன், ''பொய்யா, நானா பொய் சொல்றேன்னு சொல்றே?''

''அவளை நீங்க திரும்பிப் பாக்காமே ஓடி வரலை!''— சொல்லிவிட்டு சுகந்தா தலையைக் குனிந்து கொண்டாள். அவளின் அழகிய உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. அவளுடைய அறிவுக்கூர்மையின் எதிரில் நான் வெட்கத் துடன் தலையைத் தாழ்த்திக் கொண்டேன். வானிலை நிசப்தமாக இருந்தது.

''ஒப்புக்கறேளா, இல்லையா?''

அவளுடைய பார்வையும் என்னுடைய பார்வையும் சந்தித்து ஸ்தம்பித்தன. சுகந்தாவின் பார்வையில் பரிவு இருந்தது, தாட்சண்யம் இல்லை.

''பொய் தானே நீங்க சொன்னது?''— மறுபடியும் கேட்டாள்.

மௌனமாக தலையை அசைத்து ஒப்புக் கொண்டேன்.

''இன்னுமா என்கிட்டே பொய் பேசறேள்?''- சுகந்தாவின் குரல் சிறிது உடைந்தது. கண்கள் லேசாகச் சிவந்தன. வருத்தத்துடன் அவளின் கையைப் பற்றிக் கொண்டேன்.

''ஸாரி சுகந்தா! உன்னை ஏமாத்தனுங்கற'இண்டென்ஷன்ல நான் பொய் சொல்லலை...''

சுகந்தா விருட்டென்று குறுக்கிட்டுச் சொன்னாள்: ''என்னை நீங்க ஏமாத்தறதா நானும் சொல்லலை. ஏன் பொய் பேசறேள்னுதான் கேட்டேன்...''

''உண்மையைச் சொல்லறதுக்குத்தான் வந்தேன். ஆனா, அதுக்குள்ளே ஏன்னு எனக்கே தெரியாம பொய் சொல்லிட்டேன்...''

சுகந்தா கைக்குட்டையை எடுத்துக் கண்களில் சுரந்திருந்த நீரைத் துடைத்துக் கொண்டாள். அவளுடைய மனத்தின் மென்மை என்னை நெகிழச் செய்தது. புதிதாக ஒரு சிகரெட்டை எடுத்து உதட்டில் பொருத்தி நானே பற்ற வைத்துக் கொண்டேன். சிறிது நேரம் இருவருமே மௌனமாக இருந்தோம்.

''சரி, இப்ப உண்மையைச் சொல்லிடட்டுமா— நேத்திக்கி ஆக்சுவலா என்ன நடந்ததுன்னு?''

அவளைச் சமாதானப்படுத்துவது போலக் கேட்டேன். பதில் சொல்லாமல் வெகு தொலைவில் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ஸாரி சுகந்தா ! அந்த ஆங்லோ இண்டியன் பொம்பளையோட வீட்டுக்குள் நான் போகத்தான் செஞ்சேன். ஆனா...''

விருட்டென்று சுகந்தா அவளுடைய விரல்களால் என் வாயை மூடினாள்.

நான் அவளுடைய விரல்களை விலக்கி விட்டுச் சொல்ல முயன்றேன். ''இரு இரு, நடந்ததை சுருக்கமா அப்படியே சொல்லிடறேன்...''

சுகந்தா மறுபடியும் அவளுடைய விரல்களால் என் வாயை இறுக்க மூடி விட்டாள்: ''உங்களைப் பத்தின உண்மை ஒவ்வொண்ணையும் என்கிட்டே நீங்க சொல்லிடணும்னு நான் சொல்லலை. என்கிட்ட நீங்க பொய் பேசாம இருந்தா போறும்... !''

சில நிமிட மௌனங்களில் சூழல் இளகித் தணிந்து விட்டது. காற்றில் சுகந்தாவின் நெற்றிக்குமேல் இறுக்கம் தளர்ந்திருந்த கூந்தல் மெலிதாகப் படபடத்துக் கொண்டிருந்தது.

''சுகந்தா... !''

''உம்... !''

''ஒனக்கு அழுகை வரும்போதுதான் நீ ரொம்ப அழகா இருக்கே...!''

''இருப்பேன் இருப்பேன்...! ஏன் சொல்லமாட்டேள். மனுஷியை இம்சை பண்றது இல்லாமே— இது வேறயா ?''

சிகரெட்டை மணலில் நெரித்துப் புதைத்துவிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

''வந்ததுமே உன்கிட்ட சொல்லணும்னு நெனைச்சேன் சுகந்தா. மறந்துட்டேன். நேத்திக்கு நைட் நான் ஒரு கனவு கண்டேன்— ரொம்ப அருமையான கனவு... சொல்லட்டுமா ?''

''அந்தக் கனவுல நான் வரேனா ?''

''நீ இல்லாம கனவு வருமா எனக்கு ?''

''அப்போ சொல்லுங்கோ...''

''அந்தக் கனவுப்படி— ஒன்னை நான் இதுவரைக்கும் பார்த்ததேயில்லை. நீ யார்னே எனக்குத் தெரியாது. ஒன் பேர்கூடத் தெரியாது. இப்படி இருக்கும்போது நம்ம கடவுள் ஒருத்தர் வந்து என் முன்னாடி லட்சம் பொண்ணுங் களை நிக்கவைக்கிறார். அந்த லட்சம் பொண்ணுங்கள்ள நீயும் ஒருத்தியா நிக்கறே...''

''லட்சத்துல ஒருத்தியா ?''

''ஆமா... அப்ப கடவுள் என்கிட்ட இந்த லட்சம் பொண்ணுங்கள்ள ஒருத்தி கிட்டேயும் ஒரு வார்த்தைகூடப் பேசாம ரொம்ப உத்தமமான பொண்ணை ஒன்னோட மனைவியா ஒன்னால செலக்ட் பண்ண முடியுமான்னு கேக்கறார். உடனே எனக்கு ரொம்ப ரொம்ப ஜாலியா யிடுது ! இது எனக்கு ரொம்பப் பிடிச்ச வேலையாச்சே ! ஓயெஸ், முடியும்னு சொல்றேன். எனக்கு எதிர்த்தாப்ல லட்சம் பொண்ணுங்க வரிசையா நிக்குதுங்க! அதில நீ நாலாவதோ அஞ்சாவதோ நிக்கறே... ஒன்னைப் பார்க்க றேன் நான். அவ்வளவுதான். அந்த நிமிஷமே கடவுள் கிட்டே சொல்றேன்— இந்த அம்மாதான்ப்பா நம்ம செலக் ஷன்னு...! அதுக்கு அந்த கடவுள் 'என்னடா நீ ஃபூலா இருக்கே. முதல்ல லட்சம் பொண்ணையும் பார். இவளை யும் விட அபாரமான பொண்ணு இருந்தாலும் இருப்பா— அப்புறமா செலக்ட் பண்ணு'ன்னு திட்றார் ! அதுக்கு நான் சொல்றேன்— நோ மேன் ; இன்னும் நீ பத்துக் கோடி பொண்ணுங்களை அழைச்சிட்டு வந்து நிறுத்தினாலும்— ஐ டோண்ட் கேர் ! இவதான் என்னோட ஃபைனல் செலக் ஷன்னு அடிச்சி சொல்லிடறேன் ! எப்படிக் கனவு !''

காதலாலும் ஆனந்தத்தாலும் என் சுகந்தாவின் கண்கள் என்னைப் பார்த்தவாறு ரம்மியத்துடன் ஜொலித்துக் கொண்டிருந்தன. செவி ஓரங்களில் அவளின் கூந்தலை சரிபண்ணியபடியே மெல்லிய குரலில் சொன்னேன்:

"சுகந்தா, உன் கிட்ட நான் லட்சம் பொய் சொன்னாலும்— இந்த ஒரே ஒரு கனவுக்காக என்னை நீ மன்னிச்சிடலாம்— இல்லையா?"

"நிச்சயமா!"

காதலுடன் என் கையைத் தன்னுடைய கன்னத்தில் அழுத்திக் கொண்ட சுகந்தாவுக்குத் தெரியாது— அப்படியொரு கனவை நான் கண்டதாகச் சொன்னதே பெரும் பொய்தானென்று...!

∴

3

மறுநாள் அதிகாலையில் ஒற்றையாக நான் கடலின் எதிரில் நின்றேன். நீர்ப் பிரவாகம் அனைத்திலும் சமுத்திரம் ஆச்சரியம் மிகுந்தது. பிரமிக்கக்கூடியது. விரிந்த மணலில் கடல் அலை வீச்சின் பரவல் ஒரு ஆனந்தச் சித்திரம். கடற்பரப்பில் மனிதனுக்கு ஏதோவொரு செய்தி தளும்பிக் கொண்டிருப்பதாக நான் மயங்கியதுண்டு. இதுவரை கடலையே பார்த்திராத பல கிராமத்துச் சுற்றுலாப் பயணிகள், சுடும் வெயிலில் மெரீனா கடற்கரை நோக்கி ஓடி வருகிற பரவசங்களைக் கண்டு பல சமயங்களில் நான் மனம் கனிந்தது உண்டு. உயிர் பிரியும் தருணத்தில் என் உடல் கடலுக்குள் வீசி எறியப்பட்டு அந்த உப்புச் சுவையை ருசித்துக் கொண்டே நான் மாண்டு

போக வேண்டுமென்ற உருக்கத்துக்கு ஆளாகிப் போயிருக்கிற அளவுக்கு கடல் என்னுள் குடியேறி இருப்பதால் தானோ என்னவோ, சுகந்தாவோடு எனக்குக் கிடைத்திருந்த காத லுறவின் சுக சோகச் சம்பவங்கள் எல்லாமே கடற்கரையில் தான் நடந்து முடிந்தன. 'இன்னுமா என்கிட்டே பொய் பேசறேள் ?' என்று அவள் மனம் வெதும்பிக் கேட்டாளே— அதற்குக் காரணமான ஒரு பெரிய பொய்யை இதே கடற் கரையில் தான் அவள் முன்னிலையில் சில மாதங்களுக்கு முன்னால் போட்டு உடைத்திருந்தேன் ! அந்த அதிகாலை யில் அச்சம்பவம் என் நினைவில் தெரிந்தது...

சுகந்தாவின் நட்பு எனக்கு எதிர் பாராமல் கிடைக்க நேரிட்ட பரவசச் சிலிர்ப்பில், என்னை அவள் மிஸ்டர் ராம்குமார் என்று அழைத்துக் கொண்டிருந்த ஆரம்ப நாட்களில், அவள் பி. ஏ. பட்டதாரி என்று தெரிந்தபோது என்னுடைய கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற நடுக்கத்தில் வெறும் பி. ஏ. பட்டதாரி கூட இல்லாத நான் அவளிடம் எம். ஏ., பட்டதாரி என்று பெரிய பொய்யாகச் சொல்லிவிட்டேன் ! நட்பு அற்புதக் காதலாகி, மிஸ்டர் ராம்குமார் சுகந்தாவின் ராம்ஜியாகி, எனக்கு அவள் சிகரெட் பற்ற வைக்கும் ஆப்த சிநேகிதியாக நெருங்கிவிட்ட பிறகும் என்னால் அந்தப் பொய்யைச் சுமந்து கொண்டிருக்க முடியவில்லை. வெளியில் ஒரு நாள் கொட்டிவிடத் தருணம் பார்த்துக் கொண்டே இருந்தேன். ஒரு நாள் கடற்கரையில் வானிலை அதற்கு ஏற்றாற் போலிருந்தது ! கோடை காலத்து சாயங்கால வெயில் சுகந்தாவின் முகத்தில் இதமாகப் படிந்திருந்ததைப் பார்த்தபடியே ஆரம்பித்தேன்.

''சுகந்தா !''

''உம்... !''

தயக்கமாகவே இருந்தது. மறுபடியும், ''சுகந்தா...'' என்றேன்.

''சுகந்தாவுக்கு என்னவாம் ?''

''சுகந்தா...''

''ஏன் இப்படி அறுக்றேள்— சுகந்தா சுகந்தான்னு...''

''ஒரு விஷயம் கொஞ்ச நாளா உன்கிட்ட சொல்லணும் சொல்லணும்னு தோணுது. ஆனா, அதை உன்கிட்ட சொல்றதுக்குப் பயமா இருக்கு.''

''அவ்வளவு பெரிய விஷயமா ?''

''பெரிய விஷயமா நீ எடுத்துப் பியோன்னுதான் பயமா இருக்கு !''

''நீங்க இப்படிச் சொல்றதைப் பார்க்கறச்சேதான் எனக்குப் பயமாருக்கு !''

சிறிது நேரம் வெகுதூரத்துக் கப்பலையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''சொன்னா என்னைத் தப்பா நெனைச்சுக்க மாட்டியே ?''

''கண்டிப்பா மாட்டேன்... சொல்லுங்கோ...''

ஒரு கணம் சுகந்தாவின் அந்த நேசம் என்னை உணர்ச்சிவசப்படுத்தியது. அவளைக் கேட்டேன்: ''சுகந்தா, நீ எதுவரைக்கும் படிச்சிருக்கே ?''

''பி. ஏ., தான். அதுக்கென்ன இப்போ ?''

''சரி. நான் எதுவரைக்கும் படிச்சிருக்கேன் ?''

''நீங்க எம். ஏ. !''

ஒரு பெரிய அலையை மோதிச் சிதறச் செய்கிற தொனியில் சொன்னேன்:

''நோ சுகந்தா. நான் எம். ஏ. பட்டதாரி இல்லை !''

குப்பென்று என் உடல் வியர்த்து விட்டது. அனைத்தும் ஒடுங்கிவிட்டாற் போலிருந்தது. காட்சிகள் ஊமைச் சித்திரமாகத் தெரிந்தன. சுகந்தா என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். என் பார்வை அலைந்தது. சொல்லாமலேயே இருந்திருக்கலாம் போலிருந்தது ! சுகந்தாவின் முகம் சிவந்து கண்களில் சினம் வந்திருந்தது.

''அப்போ இதுவரைக்கும் எம். ஏ. க்ராஜுவேட்னு சொல்லி என்னை ஏமாத்தியிருக்கேள் ?''

நான் வருத்தத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். சுகந்தா சில விநாடிகள் கண்களை வேதனையுடன் மூடியிருந்தாள். ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டாற்போன்ற ஓர் இறுக்கம் அவளில் தளர்வது தெரிந்தது.

''ஒகே ! மே ஐ ஸே குட்-பை ?'' என்றாள்.

சட்டென அவளுடைய கண்களை என் கண்கள் கலவரத்துடன் சந்தித்தன. என் கண்களிலிருந்து நீர் உதிர்ந்து விடாமல் இருக்க நான் மிகப் பிரயாசையுடன் பல்லைக் கடித்தபடி அமர்ந்திருந்தேன். எனக்கும் சுகந்தாவுக்கும் இடையே பரிச்சயமே இல்லாதது போல நெடு நேரத்துக்கு இருவருமே பேசாமல் இருந்தோம். சுகந்தா கண்களை மூடியபடி நெற்றியைத் தேய்த்துக் கொண்டே இருந்தாள்.

''சொல்லுங்கோ. உங்களுக்கு ஒரு குட்-பை சொல்லிட்டு இந்த நிமிஷமே எழுந்து போயிடட்டுமா ?''

அந்த நிமிஷமே எனக்குத் தெரிந்து விட்டது— சுகந்தா எனக்கு குட்-பை சொல்லி விட்டு உடனே எழுந்து போகப் போவதில்லையென்று ! அவளின் கோபம் துளித் துளியாக வடிந்து விடுமென்ற தந்திரமான எதிர்பார்ப்போடு நான் காத்துக் கொண்டிருந்தேன்.

''என்னத்துக்கு இத்தனை பெரிய பொய் சொன்னேள்...?''— குரல் கம்மக் கேட்டாள்.

''தப்புத்தான்.''

''ரொம்ப ஈஸியா சொல்லிட்டேள் தப்புத்தான்னு ! உள்ளுக்குள்ள நான் என்ன பாடுபடறேன்னு தெரியுமா ?''

மௌனமாக இருந்தேன்.

''இன்னும் என்னென்ன பொய்யெல்லாம் சொல்லியிருக்கேளோ ?''

அவமானத்துடன் பேசாமலேயே இருந்தேன்.

''பொய் பேசினா மட்டும் எனக்குப் பிடிக்கவே பிடிக்காது— அது யாராயிருந்தாலும் சரி !''

நான் பதில் சொல்லாமல் மெதுவாக சிகரெட் பெட்டியைத் திறந்தேன். சட்டென சிகரெட்டைப் பறித்துக் கொண்டாள்: ''முதல்ல எனக்குப் பதில் சொல்லுங்கோ. அப்புறமா ஸ்மோக் பண்ணலாம் !''

என்னுடைய உணர்வுகள் சிறிது படபடத்தன. இனி பதில் சொல்லியே ஆக வேண்டுமென்ற அகந்தை எனக்குள்ளும் ஏற்பட்டு விட்டது !

''வெயிட் ! ஒன்னை ஏமாத்தறதுதான் என்னோட மோட்டிவ்வா இருந்தா இப்ப உண்மையைச் சொல்லியிருக்க மாட்டேனே...?''

''அப்போ அந்தப் பொய்யைச் சொல்லாமலேயே இருந்திருக்கணும் ! ஏன் சொன்னேள் ?''

எனக்குள் சுகந்தாவின் மேல் இருக்கும் காதல் சிலிர்த்துக் கொண்டது.

''நீ ஒரு க்ராஜுவேட்டா இருக்கறப்ப நான் ஒரு சாதாரண க்ராஜுவேட்கூட இல்லேங்கிறதை சொல்லிக்க வெக்கமா இருந்துச்சி. நீ என்னை லவ் பண்ணமாட்டியோன்னு பயமா இருந்தது. ஸாரி, அதனாலதான் அப்படி பொய் சொல்லிட்டேன் !''

சுகந்தா பட்டென்று சொன்னாள்: ''இப்போகூட உங்களை நான் லவ் பண்றதா யார் சொன்னது ? நான் ஒண்ணும் உங்களை லவ் பண்ணலையே !''

—எங்கள் இருவரிடையே என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் நான் திகைப்புடன் அவளைப் பார்த்தேன். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு சொன்னாள் :

''இப்போ நான் பொய் சொன்னது மட்டும் உங்களுக்கு எப்படி இருக்கு... அப்படித் தானே இருக்கும் எனக்கும்... ?''

சுகந்தாவின் குரல் நெகிழ்ந்து உடைந்தது. அவளின் நெஞ்சு விம்மியது. மேலான காதலும் கண்ணியமும் அவளுடைய கண்களில் நீராகத் ததும்பித் தெரிந்தன.

ஒருவிதக் குற்ற உணர்வோடும் ஒரு புதிய இன்பத்தோடும் சுகந்தாவைப் பார்த்து நன்றியுடன் சிரித்துவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டேன்.

''சிரிங்கோ வெக்கமில்லாமே !''— பொருமினாள்.

''ஸாரி சுகந்தா ! வெக்கத்தோட த்தான் சிரிக்கிறேன் !''

''சொல்லுங்கோ... நீங்க எம். ஏ. படிச்சிருந்தாத்தான் உங்ககிட்டே பழகுவேன்னு சொன்னேனா ?''

''இல்லை !''

''அப்புறம் ? நீங்க எம். ஏ. படிச்சவர்னா நித்திக்கும் ஆபீஸ் முடிஞ்சதும் கொஞ்ச நாழியாவது உங்களோட பேசிண்டு இருந்துட்டுப் போகலாம்னு பித்துப் பிடிச்சவ மாதிரி இப்படி ஓடி ஓடி வந்திண்டிருக்கேன்... ?''

அதற்கு மேல் பேசமுடியாமல் சுகந்தாவின் கண்களிலிருந்து நீர் சரசரவென்று வடிந்தது. அதீத கனமடைந்து விட்ட அந்தச் சூழ்நிலை என்னால் தாங்க முடியவில்லை. மார்போடு மார்பாக சுகந்தாவை இறுக அள்ளி அணைத்துக் கொள்ள என் உணர்வுகள் பரபரத்தன. இயலாமையில் பேசாமல் குறுகிப் போயிருந்தேன்.

சுகந்தா கொஞ்சம் கொஞ்சமாக அமைதி அடைந்தாள். முகத்தை நன்றாகத் துடைத்துக் கொண்டாள். சிறிது நேரம் அவளுடைய கையில் வைத்துக் கொண்டிருந்த என்னுடைய சிகரெட் பாக்கெட்டைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ''சிகரெட் வேணுமா ?'' என்றாள்.

''குடு. அப்படியே நீ ஒண்ணு வேணும்னாலும் எடுத்துப் பத்த வச்சிக்க !''

''போறும் ! இதிலெல்லாம் ஒண்ணும் குறைச்சல் கிடையாது... இன்னும் எனக்கு மனசு சமாதானமாகலை—தெரிஞ்சிக்கோங்க...''

சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகையை ஆழமாக உறிஞ்சி ஊதியதும் நெஞ்சின் கனமெல்லாம் பறந்து விட்டது.

''சுகந்தா... இவ்வளவு கேடித்தனமான பொய்யை உன் கிட்ட சொன்னதுக்கு எனக்கு நீ என்ன தண்டனை குடுத்தாலும் ஏத்துக்கறேன்— ஒரு மாசம் உன்னைப் பார்க்கக் கூடாதுன்னு சொல்லு— பார்க்காமலேயே இருக்கேன், சரியா ?''

''தண்டனை உங்களுக்கு மட்டும்தான் தராப்பல இருக்கணும். இப்போ நீங்க சொல்றது எனக்கும் சேர்த்துன்னா மாதிரி இருக்கு... ?''

பளிச்சென நான் சுகந்தாவின் கண்களை உணர்வு வயப்பட்டுப் பார்த்தேன். உலகத்தின் அத்தனை கோடி பெண்களின் காதல் தன்மையும் அவளின் கண்களில் சொட்டிக் கொண்டிருந்தது. உலகத்தின் அத்தனை கோடி பெண்களின் சாகஸக் குணமும் அவளின் கண்களில் கசிந்து கொண்டிருந்தது ! சிகரெட்டைத் தூக்கி எறிந்து விட்டுச் சொன்னேன் :

''சுகந்தா இப்ப எனக்கு எப்படி இருக்கு தெரியுமா ? உன் ஒருத்தி கூட உக்காந்து பேசிட்டு இருக்றது உலகத்ல இருக்ற அத்தனை பொம்பளைங்க கூடேயும் உக்காந்து பேசிட்டு இருக்ற மாதிரி இருக்கு !''

''இருக்கும் இருக்கும் ! இத்தோட விட்டேன்னு நெனைச்சுட வேணாம் ! வட்டியும் முதலுமா ஒரு நாள் சேர்த்து வாங்கிடுவேன் !'' என்றாள்.

—அதே போல் மிகப் பல மாதங்கள் கழித்து சுகந்தா வட்டியும் முதலுமாக அவளுடைய ராம்ஜியிடம் வாங்குவதாக எண்ணி அவளின் மொத்த முதலைத்தான் இழந்து நின்றாள்.

''சரி, இப்போ உண்மையைச் சொல்லுங்கோ— நீங்க எதுவரைக்கும்தான் படிச்சேள் ?''

''பி.எ., ஒரு வருஷம் போனேன். அத்தோட சரி. தூக்கி எறிஞ்சிட்டேன்.''

''ஏன் திடீர்னு நட் கழண்டுடுத்தா ?''

''எனக்கு ஏம்மா கழல்றது ? எங்க காலேஜ் வாத்தியா னுக்குத்தான் மேல் மாடி காலியா இருந்தது. ஒரு நாள் க்ளாஸ்ல அவன் என்னவோ லெச்க்சர் குடுத்துட்டு இருந் தான்—ஹேம்லெட் பத்தி. அப்ப நான் சீரியஸா நம்ம டி.எச். லாரென்ஸ் இல்ல—அவனோட 'சன்ஸ் அண் லவர்ஸ்' புக்கைப் படிச்சிட்டிருந்தேன். அவன் சொல்றதைக் கேக்காம நான் என்னவோ படிச்சிட்டிருந்ததைப் பார்த்துட்டு வேகமா வந்து 'என்னடா படிக்கிறே ?'ன்னு கோவமா கேட்டான். இதைத் தான் படிக்கிறேன்னு சொல்லி புக்கை எடுத்துக் காட்டினேன் ! 'ச்சீ ! போர்னோக்ராப்பியா படிச்சிட்டு இருக்கே க்ளாஸ் ரூமிலே ? எந்திருச்சி வெளியில போய் படிரா'ன்னு துரத்தி விட்டுட்டான். அன்னிக்கி வெளியில வந்தவன்தான் நான். திரும்பி காலேஜ்குள்ளாறேயே போகலை ! பாவிப்பய ! அவனும் பெரிசா இங்கிலீஷ் லிட்ரேச்சர்தான் படிச்சிருக்கான். ஆனா லாரென்ஸ் பத்தித் தெரிஞ்சுக்கலை. அவன் படிச்சி என்ன செய்ய ? அதான் கோவம் எனக்கு... ராஸ்கல் பொய் பேசறான் !''

சுகந்தா இகழ்ச்சியுடன் சொன்னாள்: ''ஆமாமா, நீங்க எல்லாம் உண்மையாகத் தான் பேசறேள் !''

''நான் ஒரு அருமையான பொம்பளையோட காதலை அடையறதுக்குப் பொய் சொன்னேன் !''

''அப்போ காதலுக்காகப் பொய் சொல்லலாம்னு சொல்றேள் ?''

''அது எனக்குத் தெரியாது ! நான் பொய் சொன்னேன்! ஆனா, இனிமே சொல்ல மாட்டேன்.''

''இன்னமே சொன்ன தெரியும் சேதி.''

''அப்ப இன்னிக்கு என்னை மன்னிச்சிட்டே ?''

''இந்த ஒரு தடவை.''

''அப்பா, தப்பிச்சேன்...!''

செயின்ட் தாமஸ் மவுண்ட்டில் அந்த ஸீலியா ஜேஸ்மின் என்ற ஆங்கிலோ இண்டியன் பெண்ணின் அழகான மீன் தொட்டி போன்ற வீட்டுக்குள் சில நிமிடங்கள் அமர்ந்திருந்து விட்டு சட்டென எழுந்து வெளியேறி வந்து விட்டேனே— அந்தச் சின்னஞ்சிறிய சம்பவம் ஏனோ எனக்குள் ஓர் இசைத் தட்டு போல் சுழன்று கொண்டேயிருந்தது. என்னுடைய ஏதோ ஒரு உணர்வுக்கு ஸீலியாவின் வாசனை மிக்க அருகாமை உவப்பாக இருந்தது. வேறொரு உணர்வுக்குக் கசப்பாக இருந்தது. உவப்பைச் சுவைத்து விட்டுக் கசப்பைத் துப்பி விடு என்று அறிவு எனக்கு யோசனை சொன்னது! தற்காலிகமாக அந்த யோசனையை நான் நிராகரித்தேன்; ஆனால், விதி அதை நிராகரிக்கவில்லை!

இரண்டு தினங்கள் கழித்து விதி, ஸீலியா ஜேஸ்மின் என்ற பெண்ணின் உருவில் எனக்கு டயல் பண்ணியது...

''ஹலோ...!''

''ஹலோ, இஸிட் மிஸ்டர் ராம்குமார்?''

''யெஸ்...!''

''குட்மார்னிங் பாஸ்! ஸீலியா ஜேஸ்மின் ஸ்பீக்கிங்...''

எனக்கு மேஜைமேல் ஏறி அமர்ந்து கொள்ளலாம் போலிருந்தது! ஒரே ஒரு நாள் ஐந்து நிமிடம் வீட்டுக்குள் போய்விட்டு வந்திருக்கிறேன்— அதற்குள் பாஸ் என்கிறாள்! சிவப்பு விளக்கை சிக்னலில் கண்டு நின்று விடும் வாகனம் போல— சில விநாடிகளுக்கு ஐ வாஸ் ஆஃப்! பின், தெரியாதது போல் கேட்டேன்: ''விச் ஸீலியா ஜேஸ்மின்?''

''ஓ காட்! மறந்துட்டீங்களா? உங்களிடம் ஸ்டீல் பீரோ ஆர்டர் கொடுத்த ஸீலியா ஜேஸ்மின்...''

''ஓ... நிஜம்மா மறந்துட்டேன்... ஸாரி!''

''அன்றைக்கு எங்கள் வீட்டிலிருந்து வேகமா எழுந்து போயிட்டீங்களே— ஏதாவது நான் தப்பா நடந்திட்டேனா ?''

''நோ நோ... அதெல்லாம் இடையாதுங்க... எனக்கு அவசரமா வெளியே போக வேண்டியிருந்தது. அதனால தான் உடனே கிளம்பிட்டேன்.''

''நான் ரொம்ப பயந்துட்டேன்— உங்க மனசு எதுவும் ஹர்ட்டாயிடுச்சோன்னு...''

''சே சே ! அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே...''

''இதைத் தெரிஞ்சிக்கிறதுக்காகத்தான் உங்களுக்கு ரிங் பண்ணினேன். தாங்க்யூ...''

''ரொம்ப தாங்ஸ் !''

ரிஸீவரை வைத்து விட்டேன். ஸீலியா என்னை அணுக விரும்புகிறாள் என்பது தெரிந்தது. ஒருவிதச் செருக்குடன் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டேன். உவப்புச் சுவைக்காகச் சற்று அவளை நெருங்கிப் பார்க்கலாமா என்ற யோசனை வந்தது ! அந்த யோசனையைக் கலைப்பது போல மீண்டும் டெலிபோன் ஒலித்தது.

''ஹலோ...!''

''சே ! ஏன் ராம்ஜி, இத்தனை நேரம் யாரோட வள வளன்னு பேசிண்டிருந்தேள் ?''

''நீதானா ! ஒரு கஸ்டமர்கூடப் பேசிட்டிருந்தேன் ! தொணதொணன்னு பேசி அந்த ஆள் கழுத்தை அறுத்துட்டான். சரி, நீ காலங்கார்த்தால போன் பண்ற வேகத்தைப் பார்த்தா ஏதோ விஷயம் இருக்கு... சரிதானா நான் சொல்றது ?''

''ரொம்ப ரொம்ப சரி. இன்னிக்கி நைட் நான் பங்களூர் போறேன்.''

''பங்களூரா ? போச்சுடா. யாரோட போறே... ?''

''எங்க பெரியப்பா வந்திருந்தார் இல்லையா, இன்னிக்கி நைட் கிளம்பறார். என்னையும் வாயேன்னார். ஒரே ஒரு வாரம் போயிட்டு வந்துடறேன்...''

''திடீர்னு என்னை இப்படி அம்போன்னு விட்டுட்டுப் போறே !''

''நீங்க மட்டும் என்னை விட்டுட்டு விட்டுட்டு உங்க ஊருக்கு எத்தனை தடவை போறேள்...''

''சரி...ஜோரா போயிட்டுவா! ஆனா ஒரு கண்டிஷன்!''

''சொல்லுங்கோ...''

''ஒரே ஒரு வாரம்தான். அதுக்கு மேலே இருந்தே—தாங்காது !''

''எனக்கும் அதேதான் ! அப்போ இன்னிக்கி நைட் கிளம்பறேன்...''

''ரெண்டு நாள் கழிச்சி எனக்கு லெட்டர் போடு.''

''ஓயெஸ்.''

''பங்களூர்ல இப்ப கொஞ்சம் குளிர் ஜாஸ்தியா இருக்கும். ஸ்கார்ப் இல்லாம வெளியில போவாத...''

''ஓயெஸ்...''

சிறிது நேரம் பிடரியில் கைகளைக் கோத்தபடி யோசித்துக் கொண்டிருந்தேன். ஸீலியாவைச் சற்று நெருங்கிப் பார்க்கலாமா என்று நினைத்துக் கொண்டிருக்கும் போதே சுகந்தா ஒரு வாரம் பங்களூர் போய்விடப் போகிறாள் என்ற செய்தி ஒரு சுதந்திர உணர்வை அவிழ்த்து விட்டாற் போலிருந்தது. வெகு நேரம் மூக்கைத் தடவிக் கொண்டே இருந்தேன். ஆனால் மனம் முற்றிலும் கட்ட விழ்ந்து விடவில்லை ! என் உணர்வுகளில் எங்கேயோ ஏதோ ஒன்று திறந்து கொள்ள மறுத்தது !

# 4

சுகந்தா பங்களூர் போய் விட்டாள் என்ற உணர்வுடன் பொழுது விடிந்தது. குளித்து விட்டு பங்களூர் பற்றிய செய்திகளை பேப்பரில் ஆர்வத்துடன் படித்தேன். மனம் படிப்பில் லயிக்கவில்லை. எனக்குள் ஸீலியா ஜேஸ்மின் பற்றிய நினைவு ஒரு நீர் மூழ்கிக் கப்பல் போல மிக ஆழத்தில் ஊர்ந்து கொண்டிருந்தது! பேப்பரைத் தூக்கி எறிந்துவிட்டு ஆபீஸ் புறப்பட்டேன். பஸ் ஸ்டாப்களில் நின்ற பெண்களை யெல்லாம் 'நீங்கள் என் சுகந்தா அல்ல' என்ற செருக்கோடு, சிகரெட்டில் சாம்பலைத் தட்டி உதிர்கிற அலட்சியத்தில் பார்வையாலேயே உதிர்த்து விட்டு மாம்பலம் ஸ்டேஷனை நோக்கி நடந்தேன்.

தன்னுடைய ஸ்டீல் பீரோவை டெலிவரி எடுக்க ஸீலியா, ஆபீஸுக்கு வந்திருந்தாள். என்னைக் கண்டதும் எழுந்து ''குட்மார்னிங் பாஸ் !'' என்றாள்.

''குட் மார்னிங் !''

சொல்லி விட்டு என் அறைக்குச் சென்றேன். நாற்காலியில் அமர விருப்பமில்லாமல் சில விநாடிகள் நின்று கொண்டிருந்தேன். சற்று எலும்பு தூக்கலாகத் தெரியும் ஸீலியாவின் கன்னம் என் உணர்வுகளைத் தொந்தரவு செய்தது. யோசித்தபடியே உட்கார்ந்தேன். ஒரு பெண்ணை அடைகிற உன்மத்தம் என் புஜங்களில் வியாபித்துப் பரவியது. சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்ட போது ஸீலியா கதவைத் திறந்து கொண்டு, ''மே ஐ கமின் ஸார்?'' என்றாள்.

''யெஸ், கமின்...''

நன்றி சொல்லி என் எதிரில், உட்கார்ந்தாள். நான் வேண்டுமென்றே,

''ஓகே. எனக்கு கொஞ்சம் வேலை இருக்கு... பார்க்கலாம்'' என்றேன்.

''ஓகே சார்... ஸியூ.''

''ஸி யூ...''

''இன்னொரு நாள் என் வீட்டுக்கு நீங்க வரணும் !'' என்றாள் ஒரு தூண்டில் போடுகிற தொனியுடன், பார்வையுடன்...

ஒரு கணம் எனக்கு அவளுடைய அறையின் கட்டில் சட்டத்தில் பார்த்த அவளின் உள்ளாடைகள் நினைப்பில் வந்து போயின !

''ஓயெஸ்... கண்டிப்பா வரேன்...!''

''ப்யூட்டிஃபுல் ரிக்கார்ட்ஸ் வச்சிருக்கேன். கண்டிப்பா நீங்க அதையெல்லாம் கேட்கணும்...''

''கண்டிப்பா கேக்கறேன் !''

"தாங்க்யூ வெரி மச்..."

ஸீலியா சென்ற பிறகு நறுமணம் அறையில் பரவி இருந்தது. ஒரு சாதாரண உரையாடல் என்ற தோற்றத்தில் ஸீலியா ஏதோ பேரம் நடத்திவிட்டுப் போகிறாள் என்பது என்னுடைய இளமைக்கு இம்சையாக இருந்தது. ப்யூட்டி ஃபுல் ரிக்கார்ட்ஸ் வைத்திருக்கிறாளாம். கண்டிப்பாக நான் கேட்க வேண்டுமாம்! அதற்குத்தானே நான் பிறந்து வளர்ந்திருக்கிறேன்! பிறந்து வளர்ந்திருக்கும் அந்தக் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமாவென்று கொஞ்சம் சோம்பலுடன் நினைத்துப் பார்த்தேன்.

திரும்பத் திரும்ப அன்று முழுவதும் இந்த விஷயத்தைக் கிளறிக் கிளறிப் பார்த்தேன்! கடைசியில் கிளறுவதற்கு இனி ஒன்றுமே இதில் இல்லையென்று தீர்மானம் தான் வந்தது! மனைவி என்ற ஸ்தானத்துக்கு சுகந்தாதான் என்று நிச்சயித்துப் பல மாதங்களாகிவிட்டன. அந்த நிச்சயத் துக்கு வருவதற்கு முன்பு எத்தனையோ பெண்களைச் சந்திக்கவில்லையா? அதேபோல், சுகந்தாவுக்குப் பிறகு ஒன்றிரண்டு பெண்களைச் சந்திக்க வேண்டாமா?

மதியம் ஒரு மணிக்கே புறப்பட்டு என்னுடைய அறையை அடைந்தேன்.

தியாகராய நகர் சரோஜினி தெருவில் ஒரு பெரிய வீட்டின் மாடியில் சிறிய அறை ஒன்றில் நான் தனியாகத் தங்கியிருந்தேன்.

அறையைத் திறந்தபோது ஒரு பக்கச்சுவர் முழுவதும் புத்தகங்களாக அடுக்கப்பட்டிருந்ததை ஆயாசத்துடன் பார்த்தேன். கட்டிலை ஒட்டிய ஷெல்ஃபில் வரிசை யாகப்பட்டிருந்த இசைத்தட்டுக்களை ஓய்வின்மையோடு கவனித்துக் கொண்டே இருந்தேன். அந்தப் புத்தகங் களிலும் சில இசைத் தட்டுக்களின் பின்னணியிலும் படிந்திருக்கிற காதல் அநுபவங்களைக் கட்டிலில் சாய்ந்தபடி

நினைத்துப் பார்த்தேன். மிகப்பல காதலர்களின் வாழ்க்கையில் சோகம்தான் கனமாக எஞ்சிப் போயிருந்தது மனத்தை உறுத்தியது. ஏதேனும் ரூபத்தில் எனக்கும் சுகாந்தாவுக்கும் இடையே துயரம் வந்து நுழைந்து விடுமோ என்ற சன்னமான பயம் வந்தது. அருகில் இருந்த இசைத்தட்டை எடுத்தேன். பித்தோவன்! சுகந்தாவை வருடுகிற மயக்கத்தில், அந்த இசைத்தட்டின் அகன்ற உறையைத் தடவிக் கொண்டிருந்தேன். பித்தோவனை, காதல்தான் மிகமிகச் சந்தோஷத்திலும், அதே காதல்தான் மிகமிகத் துக்கத்திலும் ஆழ்த்தியதாம்.

காதலின் ஆனந்தத்தை அள்ளித் தெளிக்கிற பித்தோவனின் சிம்பனி பிஃப்ளாட் இசைக்கோவையின் சுநாதம் அறையில் நீர் ஊற்றாகத் தெறிக்கத் துவங்கியது. அதன் ஒவ்வொரு துளியிலும் பித்தோவனின் காதல் பெண் ஆஸ்திரிய ராஜரீக தெரஸே தெரிந்தாள். காதல் போதையும் இசை மயக்கமும் ஒன்றாக என்னை மொய்த்தன. ரோமியோ ஜூலியட் காவியத்தின் ஆளுமையில் இசை அவதியுற்று ஒரு இசை கனபரிமாணத்தைத் தொடுத்த ஷைக்காவ்ஷ்கியை எடுத்தேன். அவள் இல்லாத வாழ்க்கை வெறுமையானதேயென்று கண்ணீர் விட்ட அவனை வெள்ளமாகக் கண்ணீரைக் கொட்ட வைத்து வேறொருவனை மணந்து விலகிக் கொண்ட அந்த டெஸிரியை நினைத்துதேன். காதல் அநுபவங்கள் சோகத்திலேயே முடிந்து போயிருந்த உண்மை என்னைக் கவலைப்படுத்தியது. கொஞ்சம் பயப்படச் செய்தது.

அந்தக் கவலையும் பயமும் பின்னால் உண்மையாகவே நிகழ்ந்து ஒரு வீழ்த்தப்பட்ட பறவையாக நான் தனிமை கொண்டிருந்தபோது என் துக்கத்தின் இழப்பின் எதிரொலியாகத்தான் மொஸார்ட்டின் ஜி மைனர் சிம்பனி எனக்கு ஒலித்ததென்றால் அது மிகையில்லை...

அவசரமாக இரண்டு விரற்கடை கருஞ்சிவப்புத் திரவத்தைக் குப்பியில் கச்சாவாக ஊற்றிப் பருகினேன்.

மறுகணம் வாழ்க்கை சூடாகியது! பங்களூரில் சுகந்தா தூங்கிக் கொண்டிருப்பாளென்று நினைத்தேன். அருகில் அவள் இல்லாத வெறுமையை இட்டு நிரப்பிக் கொள்கிற சன்னமான ஏக்கத்துடன் பீரோவைத் திறந்தேன். என்னுடைய ஷர்ட்டுகளுக்குக் கீழ்ப் பத்திரமாக வைத்திருந்த சுகந்தாவின் மென்மையான ஃபுல்வாயல் புடவையைத் தன்னிரக்கத்துடன் எடுத்தேன். காதலுடன் முகத்தில் ஒற்றிக் கொண்டேன். கட்டிலில் சாய்ந்து புடவையை மார்பில் பரப்பிக் கொண்டேன்! சுகந்தாவின் புடவை என்னிடம் வந்து சேர்ந்த சம்பவம் மனத்தில் திரவச் சித்திரமாகத் தளும்பத் துவங்கியது...

''அதென்னமா அது, பெரிசா பேப்பர் பொட்டலம்?''

''ஒண்ணுல்ல சுவாமி! என்னோட ஸாரி...''

''ஸாரியா? ஆபீஸ்க்கு எதுக்கு எடுத்துட்டுப் போனே? மத்தியானத்துக்கு மேலே ஆபீஸ்லயே வேற ஒரு புடவை மாத்திக்க ஆரம்பிச்சிட்டியா?''

சுகந்தா பலமாக என்னை கிள்ளி விட்டுச் சொன்னாள்: ''ச்சீ! புத்தி போறதே உங்களுக்கும்! ஜானகி ஒரு நாள் சினிமாவுக்குப் போறச்சே என்னோட இந்த ஸாரியை ஒரே ஒரு தடவை கட்டிட்டுத் தரேன்னு கேட்டா, சரின்னு குடுத்தேன். இன்னிக்கு அதை ஆபீஸ் வரச்சே கொண்டு வந்து குடுத்துட்டா... அதான்...''

எனக்கு கோபம் வந்தது: ''உங்களுக்கெல்லாம் மண்டையில ஏதாச்சும் மூளை கீளை இருக்கா? ஒருத்தர் யூஸ் பண்ற துணியை இன்னொருத்தர் யூஸ் பண்ணலாமா?''

சுகந்தா பயந்து போய்ச் சொன்னாள்: ''ஸாரி ராம்ஜி! ஜானகிதான் கேட்டா ரொம்ப ஆசையா...''

''கேட்டா குடுத்துடறதா?''

''ஸாரி...! முடியாதுன்னு சொல்ல முடியலை...''

''நோ, யார் கேட்டாலும் நீ முடியாதுன்னுதான் சொல்லணும்! தெரியுதா?''— சுகந்தாவை மிரட்டினேன்.

''சரி ராம்ஜி!''

''நீ என்னோட வுட்பி! ஞாபகம் வச்சிக்க. உன்னோட துணி எதையும் எந்தக் காரணத்தாலேயும் எவ கட்றதுக்கும் குடுக்கக்கூடாது! அது எனக்குப் புடிக்கவே புடிக்காத விஷயம். புரியுதா? எப்படி நீ எனக்கு மட்டும் சொந்தமோ அதே மாதிரி உன்னோட புடவைகளும் எனக்குத்தான் சொந்தம்! பி கேர்ஃபுல்...''

கொஞ்சம் காதல் பூர்வமாக இவ்விஷயத்துக்கு முற்றுப் புள்ளி வைத்ததும் சுகந்தா என்னைச் செல்லமாகக் கிள்ளி விட்டுச் சொன்னாள்: ''யப்பா! ஓரே பொஸஸ்ஸிவ்!''

''நீ கிள்றதா இருந்தாக்கூட என்னை மட்டும்தான் கிள்ளணும்!''

''அப்படியா! வசமா ஒரு நாள் கிள்ளி வச்சா அப்போ தெரியும்.''

''சரி, ஜானகி புடவையை நல்லா வாஷ் பண்ணிக் குடுத்திருக்காளா இல்லே சும்மா அவிழ்த்த உடனே வாரிச் சுருட்டி எடுத்திட்டு வந்துட்டாளா?''

''விடுங்களேன் அந்த மேட்டரை!''

''அதைத் தெரிஞ்சுக்காம வுடமாட்டேன் சுகந்தா!''

''வெறும் த்ரீ அவர்ஸ்தானே கட்டியிருந்தா! அதனால வாஷ் பண்ணலை.''

''கட்றது ஒசி! இதுல வாஷ் பண்ணாம வேற தரா! சரி; என்கிட்ட குடு. நான் என்னோட துணிகளைப் போடற லாண்டரியில போட்டு ஜோரா வாஷ் பண்ணி ப்ரெஸ் பண்ணித் தரேன்!''

சுகந்தாவின் முகம் சங்கோஜத்தால் சிவந்து விட்டது.

''நீங்க ஒண்ணும் லாண்ட்ரில கொண்டு போய்ப் போட வேணாம் ! சும்மா இருந்தா போறும்'' என்றாள்.

''குடுன்னா குடுத்திடு ! எடுத்திட்டுப் போய் நானா வாஷ் பண்ணப் போறேன் ! லாண்ட்ரிலதான் போடப் போறேன்.''

''அதான் வேண்டாம்ங்கிறேன் !''

''நீ மட்டும் இன்னிக்குப் புடவையைக் குடுக்காம போயிடு... பார்க்கலாம்.''

''கஷ்டம் கஷ்டம் ! இந்தாங்கோ''—தலையில் அடித்துக் கொண்டே தந்தாள்.

அன்றைக்கு வாங்கி வந்த அந்தப் புடவையை லாண்ட்ரியில் போட்டுச் சலவை பண்ணிப் பத்திரமாக என்னுடைய பீரோவுக்குள் வைத்துப் பூட்டிவிட்டு, லாண்ட்ரிக்காரன் புடவையைத் தொலைத்து விட்டா னென்று சுகந்தாவிடம் பொய் சொல்லிவிட்டேன்.

சுகந்தா அதை நம்பிவிட்டாள். மிகமிக வருத்தப் பட்டாள். ஜோரான புடவையைப் படுபாவி லாண்ட்ரிக் காரன் தொலைத்து விட்டானேயென்று அழுதே விட்டாள் ! எனக்குக்கூடக் கண்ணம்மாவை ஏமாற்றுகிறோமே என்று கஷ்டமாகத்தான் இருந்தது. விளையாட்டுக்காக அப்படிச் சொன்னதாகச் சொல்லி மறுநாள் கொண்டு போய்க் கொடுத்து விடலாமா என்றுகூட நினைத்தேன்... ஆனால், மனம் 'இருக்கட்டுமே— கல்யாணத்துக்கு அப்புறம் தீடீ ரென்று ஒரு நாள் அவளை அசரவைத்து விடலாம்' என்று கணக்குப் போட்டது ! லாண்ட்ரிக்காரனை உதைத்துப் புடவைக்கு உரிய பணத்தை வாங்கி விட்டதாக உபரியாக ஒரு பொய்யைச் சொல்லி என்னுடைய பாக்கெட்டிலிருந்து பணத்தை எண்ணிச் சுகந்தாவிடம் கொடுத்துவிட்டேன். பொய் அதோடு முடியவில்லை. சுகந்தாவின் வீட்டில்

விஷயத்தைச் சொல்ல வேண்டுமே! அதற்காக வேறொரு பொய். புடவையை ஜானகிதான் தொலைத்து விட்டதாக; அதற்கு அவள் உடனே பணம் தந்து விட்டதாக...!

—இந்தப் புடவை விளையாட்டை நினைக்க நினைக்க சுகந்தாவின்மேல் எனக்குள் இருந்த காதல் பொங்கி வழிவது போலிருந்தது! புடவையை அவளாக நினைத்தபடி முத்தமிட்டேன். புடவையை அவளாக நினைத்து அணைத்துக் கொண்டேன்... இறுதியாக, சுகந்தாவாக நினைத்து ஸீலியாவைக் கட்டித் தழுவிக் கொண்டால் என்னவென்ற ஒப்பீட்டைக் கருஞ்சிவப்புத் திரவம் உணர்வுக்குள் விதைத்துப் பார்த்தது. விதை முளைக்க ஆரம்பித்துவிடும் போல் தெரிந்தது!—

மறுபடியும் மனம் சஞ்சலித்தது. மேலும் சிறிது கருஞ்சிவப்புத் திரவத்தைப் பருகினேன். படிப்படியாக எனக்குள் கிரஹணம் பிடிக்கத் துவங்கியது. என்னுடைய சில பெருமைகளுக்கு சுகந்தா ஏற்றவள்போல என்னுடைய சில சிறுமைகளுக்கு ஸீலியா ஜேஸ்மின் வேண்டியிருந்தாள்!

மறுநாள் ஆபீஸ் போனதும் பன்னிரண்டு மணி அளவில் ஸீலியா பணிபுரியும் நிறுவனத்துக்கு டெலிபோன் செய்தேன். சில நிமிடங்களில் ஸீலியா கிடைத்தாள்.

''நெஜமாவே மிஸ்டர் ராம்குமார், நீங்கதானா பேசறது?''

—ஸீலியாவின் பரவசம் அவளின் குரலில் ஒலித்தது.

''ஏன், ராம்குமார் உங்களுக்கு போன் செய்து பேசக்கூடாதா?''

''நோ நோ. ரொம்ப சர்ப்ரைஸா இருக்கு— அதனால அப்படிக் கேட்டேன்.''

''ஒரு நாள் நான் உங்க வீட்டுக்கு வந்து ரிக்கார்ட்ஸ் கேக்கணும் ஸீலியா! ம்யூஸிக்ல எனக்கு ரொம்ப ரொம்ப இண்ட்ரெஸ்ட் உண்டு. என்னிக்கி வரலாம்—சொல்லுங்க?''

''இன்னிக்கி ஈவினிங் வாங்க ராம்குமார்...''

''இன்னிக்கு ஈவினிங் எனக்கு வேற ஒரு அப்பாய்ன்ட் மெண்ட் இருக்கே...''

''நோ நோ, உங்க அப்பாய்ன்ட்மெண்ட்டை யெல்லாம் கேன்ஸல் பண்ணிடுங்க...!''

''அப்படியா?''

''ஃபைவ் தர்ட்டிக்கு கரெக்டா வந்திடுங்க! நான் வெயிட் பண்றேன்.''

''அப்படியா?''

''கண்டிப்பா நீங்க வந்துதான் ஆகணும்!''

''சரி, உங்க இஷ்டம்...''

''நாட் ஒன்லி தட். நைட் என் வீட்ல நீங்க டின்னர் சாப்பிட்டுத்தான் போகணும்!''

''அப்படியா?''

''ஆமா...''

ரிஸீவரை வைத்ததும் என் புலன்கள் அனைத்தும் மிகக் கூர்மையாக இயங்கத் துவங்கின. என்னருகில் ஒற்றையாக ஒரு நீக்ரோ இளைஞன் இடைவிடாமல் 'பேங்கோஸ்' வாசிப்பது போலிருந்தது. ஒரு ரம்மியமான மிதமான வர்ணம் கொண்ட கொசுவலைக்குள் நான் அமர்ந் திருப்பது போலிருந்தது! என்னுடைய இயல்பில் இது ஒரு விநோதம்— கொசுவலைக்குள் பிரவேசித்தாலே எனக்குள் பாலுணர்வு தளும்பத் தொடங்கிவிடும்!

மாலை குளித்து நன்றாக உடை அணிந்து கொள்ள பீரோவைத் திறந்த போது சுகந்தாவின் புடவை கண்களை நெருடியது. புடவையைக் கண்டு கொள்ளாமல் ஒரு ஷர்ட்டையும் பேண்ட்டையும் எடுத்து அணிந்து கொண் டேன். மெண்டெல்ஸோன் இசைத்தட்டுகள் இரண்டை எடுத்துக் கொண்டு போர்ட்டிகோவில் நின்ற என்

ஸ்கூட்டரைப் பார்த்தபடியே மாம்பலம் ஸ்டேஷனை நோக்கி நடந்தேன்...

செயின்ட் தாமஸ் மவுண்ட்டின் மாறுபட்ட கலாசாரம் படிந்திருந்த பல வீடுகளின் கூரைகளைக் கண்டு கொண்டே மிக மெதுவாக நடந்து அழகிய கொசுவலை போல் தெரிந்த ஸீலியாவின் வீட்டுக்குள்— வாசலில் அவள் நின்று வரவேற்க —நான் நுழைந்தேன்...

அன்றைக்கு ஸீலியாவின் கவனம் மிக்க கவர்ச்சிகரமான அலங்கரிப்பு, என்னை வசீகரிக்கத்தான்! அன்றைக்கு அவளுடைய அறை மிகத் துல்லியமாகச் சுத்தப்படுத்தப் பட்டிருந்தது, என் மனத்தைத் திருப்திப் படுத்தத்தான்! பக்குவம் தவறாமல் கோழியின் துடைகள் போதுமான சுவையுடன் தயாரிக்கப்பட்டிருந்தது, என்னைச் சாந்தப் படுத்தத்தான்! நான் சாந்தமாகி விட்டேன்! தேவைக்கும் மேலாகவே திருப்தியடைந்து விட்டேன்!

உணவு தயாராகிப் பரிமாறித் தானும் சாப்பிட்டபின் ஸீலியாவின் ஆண்ட்டி என்ற வயோதிகப் பெண்மணி, பட்ரோட்டில் இருந்த வேறொரு உறவினர் வீட்டில் இரவு படுத்துக் கொள்கிற வழக்கத்தில் இரவு எட்டரை மணி அளவில் புறப்பட்டுச் சென்று விட்டது! இதை நான் எதிர் பார்க்கவில்லை. ஒரு அழகான தாமரைக்குளத்தின் கரையில் தாமரைப் பூ ஒன்றைப் பார்த்தபடி தனியாக உட்காந்திருப்பது போலிருந்தது!

—அப்படி உட்கார்ந்திருக்கிற போது எனக்குத் தாமரைப் பூவின் மேல் கல் எறிய வேண்டும் போலிருக்கும்! ஆசை என்ற கல்லை ஸீலியாவின் மேல் எறிய என்னுடைய உணர்வுகள் தயாராகிக் கொண்டிருந்தன. ஆஷாபுத்லியின் ஆங்கில கானத்தைச் சன்னமாக ஒலிக்க விட்டபடி ஸீலியாவின் அசைவுகளும் கதி மாறிக் கொண்டிருந்தன. நடனமாடிக் கொண்டிருந்த அவளைக் கண்டபடி நான் எழுந்து நின்றேன். ஸீலியாவின் கொஞ்சம் வற்றிப் போன

வாசனை மிக்க தோள்களை ஒரு ஆக்டோபஸ் போல் பற்றிய போது— வாசல் மணி ஒலித்தது ! சட்டென்று கொசு வலை அறுந்து விழுந்தாற் போலிருந்தது !

ஸீலியா எரிச்சலுடன், "யார் அது ?" என்ற பலத்த குரலில் கேட்டாள்.

"நாகராஜ் !"— பதிலும் உரக்கவே வந்தது.

ஸீலியா வெறுப்புடன் வேகமாகப் போய்க் கதவைத் திறந்தாள்.

"நான்தான் இன்னிக்கி உன்னை வரவேண்டாம்னு கண்டிப்பா சொல்லிருந்தேனே !" — ஸீலியா.

"ஏன் வரவேண்டாம்னு சொன்னேன்னு தெரிஞ்சிட்டுப் போகத்தான் வந்தேன் ! யார் உள்ள ?"— வந்த 'நாகராஜ்' குரல் !

—அறைக்குள் குற்றவாளி போல நின்று கொண்டிருக்க என் மனம் ஒப்பவில்லை ! உள்ளே நிற்பது நான்தானென்று கூறி வெளிப்படவும் மனம் விரும்பவில்லை. ஆனால், எதையும் எதிர்நோக்க நான் தயாராகி விட்டேன்.

"குன்னூர்ல இருந்து கெஸ்ட் வந்திருக்குது நாகராஜ். ஸாரி !"

ஸீலியா பரவாயில்லை. என்னை மாதிரிதான் அவளும் ஜோராகப் பொய் பேசுகிறாள் !

நாகராஜ் மிகவும் கிண்டலாகக் கேட்டான் : "குன்னூரா, உள்ளூரா ?" ஸீலியாவிடமிருந்து பதில் இல்லை.

"இன்னொரு நாள் வந்து ஒன்னைக் கவனிக்ற விதத்ல கவனிச்சிக்கிறேன்"— படாரென்று கதவு சாத்தப்படும் சப்தம் கேட்டது. எனக்குள்ளும் திறந்து கொண்டிருந்த ஒரு கதவு படாரென்று சாத்திக் கொண்டது ! சிறிதுகூட யோசிக்காமல் அந்தக் கொசு வலையை விட்டு வெளியேறி

விட்டேன் ! ஸீலியா என்னென்னவோ சமாதானம் சொன்னாள் ; கெஞ்சினாள் ; திரும்பத் திரும்பக் கெஞ்சினாள். என் உணர்வுகள் மறுத்தது மறுத்ததுதான் ! தோட்டத்துக் கதவின் அருகில் வந்தும் என் கையைப் பற்றிய ஸீலியாவின் கைகளை உதறிவிட்டு, இருள் கவிந்திருந்த தெருவில் கிண்டி ரயில்வே ஸ்டேஷனை நோக்கி மிக வேகமாக நடந்தேன்.

நடக்க நடக்க எனக்குள் உச்சத்தை அடைந்திருந்த சினம், என் அறைக் கதவைக் காலால் உதைத்துத் திறந்து கட்டிலில் விழுந்து சிறிது நேரத்துக்குப் பிறகே குறையத் துவங்கியது. சிறுமை உணர்வுகள் அத்தனையும் ஆவியாகிப் போயிருக்க பீரோவைத் திறந்து என் சுகந்தாவின் புடவையை எடுத்துக் கட்டிலில் பரப்பி முகம் புதைத்துக் கொண்டேன் !

# 5

மறு நாள் கண்டிப்பாக ஸீலியா எனக்கு டெலிபோன் செய்வாளென்று எதிர்பார்த்தேன். நான் எதிர்பார்த்தது பலிக்கவில்லை. இந்த ஏமாற்றம்கூட என் அகங்காரத்தைத் தாக்கியது. உடனே எனக்கு ஸீலியா போன் செய்ய வேண்டும்! அன்று நடந்த சம்பவத்துக்காக என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்! மறுபடியும் கண்டிப்பாக நான் அவளின் வீட்டுக்கு வந்தே ஆகவேண்டுமென்று அவள் கெஞ்ச வேண்டும்! அதெல்லாம் முடியாது என்று நான் அவளைத் தூக்கியெறிந்து பேச வேண்டும். உடனே அதற்கு அவள் டெலிபோனில் அழவேண்டும். அவள் அழஅழ ரிஸீவரை நான் தடாலென்று வைத்துவிட வேண்டும்...!

என்னுடைய இந்தச் சிறிய ஆசை நான்காவது நாள் தான் பலித்தது! ஆனால், ஸீலியா கெஞ்சக் கெஞ்ச அவளைத் தூக்கியெறிந்து பேசவில்லை நான். அவள் அழ அழ நான் ரிஸீவரையும் தடாலென்று வைத்து விடவில்லை!

''ஹலோ ஸீலியா...! அன்னிக்கு நடந்ததில என் நெலைமையில இருந்தா நீங்க எப்படி ஃபீல் பண்ணியிருப் பீங்க சொல்லுங்க?''

''தப்புத்தான் பாஸ்.''

''மறுபடியும் எப்படி என்னலா உங்க வீட்டுக்குள் வர முடியும்— சொல்லுங்க!''

''நீ அப்படிச் சொல்லக் கூடாது பாஸ்! அந்த ஈவெண்ட்டை மறந்து மறுபடியும் என் வீட்டுக்கு நீ வந்தாத் தான் என் மனம் சமாதானம் ஆகும்.''

''என் மனசுக்கு இன்னும் சமாதானமாகலையே ஸீலியா!''

''எனக்கு ஒரே ஒரு சான்ஸ் தா பாஸ்! கண்டிப்பா உன் மனசை நான் சமாதானம் பண்ணிடுவேன்!'' என்றாள்.

எனக்கும் மனம் சமாதானம் ஆக வேண்டும் போலிருந் தது! நான் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுச் சொன்னேன்:

''நீ வேற யார் கிட்டேயும் எவ்வளவு நன்றிக் கெட்டத் தனமா வேணும்னாலும் நடந்துக்கலாம். ஆனா, என்கிட்டே நீ அப்படி நடந்தே... அந்த நிமிஷமே உன்னோட நட்பை கட் பண்ணிடுவேன்...''

''அந்த நிலமையே உனக்கு வராது பாஸ்.''

''ரைட்! அப்ப இன்னிக்கு ஈவினிங் உன் வீட்டுக்கு வரேன்— ஆனா, டின்னர் கின்னரெல்லாம் ஆகாது. சும்மா

கொஞ்ச நேரம் உன் கூடப் பேசிட்டு இருந்துட்டு கிளம்பிடு வேன்...!''

''ஒரு சின்ன ரிக்வெஸ்ட் பாஸ்...''

''சொல்லு...''

''குன்னூர்ல என் தங்கை இருக்கு...''

''பேரு ?''

''ரோஸ்மேரி பாஸ். அவளுக்கு நீ உன் சிபாரிசுல ஒரு ஜாப் வாங்கித் தரணும்...''

''என்ன படிச்சிருக்கா ?''

''ஸ்கூல் ஃபைனல் தான். டைப்ரைட்டிங் எதரியும். ஆனா அது கொஞ்சம் இன்னஸென்ட் ! ரொம்ப சைல்டிஷ். ஸம் டைம்ஸ் ஹிஸ்டிரிக்கல்... ! நீதான் அதுக்கு ஹெல்ப் பண்ணணும்...''

''பண்றேன். முதல்ல லெட்டர் போட்டு அவளை மெட்ராஸ் வரச் சொல்லு. ஒரு மாசத்துல கிண்டி இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்லேயே ஏதாவது ப்ரைவேட் யூனிட்ல வேலை வாங்கிடலாம்...''

''ரொம்ப தேங்க்ஸ் பாஸ். அப்ப ஈவினிங் சீக்கிரமா வந்திடு பாஸ்...''

''சீக்கிரமா வந்துட்டு சீக்கிரமாவே போயிடுவேன் சரியா ?''

''ச்ரி பாஸ்...''

ரிஸீவரை வைத்தபோது அன்றைய தபால்கள் வந்தன. என் தங்கை தமிழரசியின் கடிதத்தை முதலில் பிரித்துப் படித்தேன். இருபது நாட்களில் அவளுடைய பிறந்த நாள் வருவதை நினைவு படுத்தி எழுதியிருந்தாள். பிறந்த நாளுக்கு வழக்கம் போல ஒரு பட்டுப் புடவை வாங் கித் தரவேண்டும் என்பதையும் எழுதி அதன் கீழ் கோடிட்

டிருந்தாள். உடனே காலண்டரைப் புரட்டி, தமிழரசியின் பிறந்த நாளுக்கு நான்கு தினங்கள் முன்பாகவே பெரிய குளம் போகத் தேதியைக் குறித்துக் கொண்டேன். மாலை ஐந்தரை மணிக்கு மறக்காமல் செயின்ட் தாமஸ் மவுண்ட்டில் இருந்தேன்.

''உன்ன மிரட்டிட்டுப் போனானே நாகராஜ்னு ஒருத்தன்... வந்தானா மறுபடியும்?''

''நேத்திக்கு வந்தான்!''

''மறுபடியும் வருவானா?''

''இன்னிக்கு வரமாட்டான்.''

''ஸீலியா... எனக்கொரு விஷயம் தோணுது... சொல்லட்டுமா?''

''சொல்லு பாஸ்!''

''நீ கொஞ்சம் சரியில்லேன்னு தோணுது எனக்கு! சம்திங் ராங் வித் யூ!'' என்றேன்.

ஸீலியா மௌனமாக இருந்தாள். சில நிமிஷங்கள் கழித்துக் கேட்டாள்: ''எப்படி சொல்றே பாஸ்?''

''அளவுக்கு மிஞ்சி நீ செண்ட் யூஸ் பண்றதை வச்சிச் சொல்றேன்! சரிதானா நான் சொல்றது?''

ஸீலியாவின் முகத்தில் லேசாக வருத்தம் வந்து போனது. சிறிது நேரம் கழித்துச் சொன்னாள்: ''நீ சொல்றது சரிதான் பாஸ்!''

''முதல் தடவை நான் இங்கே வந்திருந்தப்ப நீ சொன்னே— உன்னோட டாடி இப்ப உயிரோட இல்லைன்னும் உன்னோட மம்மி லண்டன்ல இருக்கறதாகவும். அதைப் பத்திக் கொஞ்சம் சொல்லேன், தெரிஞ்சுக்கறேன்...''

''அது ரொம்ப க்ரூயல் ஸ்டோரி பாஸ். எனக்கும் சரி, என்னோட யங்கர் சிஸ்டர் ரோஸ்மேரிக்கும் சரி; குடும்பம்னு சொல்ற ஒரு ஃபௌண்டேஷன், வாழ்க்கையிலே இல்லாம போச்சு பாஸ்! ஃபாதர்னு சொல்ற செக்யூரிட்டியும் இல்லை. மதர்னு சொல்ற அஃபெக்ஷனும் இல்லை. இதனால எங்க இன்செக்யூரிட்டியும் வேற வேற விதத்துலே எங்களை அஃபெக்ட் பண்ணிடுச்சி. ரோஸ்மேரியைப் பொறுத்த வரைக்கும் ஒரு ஸார்ட் ஆஃப் ஹிஸ்டீரியா மாதிரி வந்துடிச்சி. அவளால தனியா இருக்கவே முடியாது. எப்பவும் அவகூட யாராவது பக்கத்ல இருக்கணும். யாரும் இல்லேனா பயப்படுவா... என்னோட ப்ராப்ளம் வேற மாதிரி! சொல்லிடட்டுமா அதையும். சொன்னா என்னை நீ மோசமா நெனைக்கக் கூடாது...!''

''நீ சொல்லப் போறது எவ்வளவு மோசமான விஷயமா இருந்தாலும் அதுக்காக ஒன்னை மோசமா நெனைக்க மாட்டேன், சொல்லு...''

ஸீலியா உரிமையுடன் எனக்கு மிக நெருக்கமாக வந்து உட்கார்ந்து கொண்டாள்.

''எந்த விஷயத்லேயும் எனக்குள்ள ஒரு அப்நார்மல் மனி வந்திருச்சி பாஸ். எது மேலேயும் எனக்கு ஒரு அடிக்ஷன் மாதிரி! எத்தினி ரிக்கார்ட் வாங்கறேன் பார். அப்படியும் திருப்தி கிடையாது! எத்தினி ட்ரெஸ் வாங்க றேன்... பர்ட்டிகுலர்லி ப்ரா! சொன்னா நீ நம்பமாட்டே பாஸ். ரியலி ஹண்ட்ரட் ப்ரா வச்சிருக்கேன்! ஒரு வாரம் புதுசா ப்ரா வாங்காம இருந்தா போச்சி— தலை வெடிச்சிப் போறாப்பல இருக்கும். ரொம்ப ரெஸ்ட்லெஸ்ஸா ஆயிடு வேன்! அதே மாதிரிதான் செக்ஸும்! அதுலேயும் நான் ஒருவித அடிக்ட்.''

மிக நெருக்கமாக அமர்ந்து கொண்டு ஒரு வாசனை மிகுந்த இளம் பெண், தன்னைப் பாலுறவு மோகம் கொண்டவள் என்கிற கலவரமான உண்மையைச் சொல்லிக்

கொண்டிருப்பதை, ஒரு இளம் வாலிபன் கேட்டுக் கொண்டிருப்பது எத்தனை துர்பாக்கியமான அபாயம் ?

ஒரு முடிவுக்கு வந்தவனாக, திடீரென்று நான் புறப்படு வதற்கு எழுந்தேன்.

''அப்ப நான் வரட்டுமா ஸீலியா ?''

''நாளைக்கு வா பாஸ் !''

''நாளைக்கு என்னால் வரமுடியாது...''

''நாளைக்கு மறுநாள்... ?''

''அன்னிக்கும் முடியாது. பங்களூர் போயிருக்கிற என் டார்லிங் வந்திடுவா— அவ வந்திட்டா அவளைப் பாக்கற துக்குப் போயிடுவேன்...''

ஸீலியாவின் கண்களில் பாவனை மாறியது, என் ஷர்ட்டில் கழண்டிருந்த ஒரு பட்டனைச் சரி செய்தபடியே கேட்டாள் : ''டார்லிங் மீன்ஸ் ?''

''மை வுட்பி !''

ஸீலியா ஒருவிதத் தன்னிரக்கத்துடன் என்னை மெலி தாக அணைத்தபடி கேட்டாள் : ''உன் வுட்பி நேம் என்ன பாஸ்... ?''

''சுகந்தா... !''

''லக்கி வுமன்... !''

''சரி, நீ மறந்திடாம உன் சிஸ்டர் ரோஸ்மேரிக்கு லெட்டர் எழுது— உடனே அவளைப் புறப்பட்டு வரச் சொல்லி. பத்துப் பதினைஞ்சி நாள்லேயே அவளுக்கும் இண்டியிலேயே ஒரு வேலை பாத்துடலாம்.''

''நளைக்கே எழுதிர்றேன் பாஸ். ஆனா, உடனே ரோஸி கிளம்பி வர நீதான் ஹெல்ப் பண்ணனும்...''

''என்ன பண்ணனும் சொல்லு? டயமாகுது...''

''ஹண்ட்ரட் ருபீஸ் தா பாஸ், அதை ரோஸிக்கு மணியார்டர் பண்ணிட்டா அது வர்றதுக்கு ஈஸியா இருக்கும்... !''

ஒருகணம் ஸீலியா என்னிடம் பணம் கேட்டது கொஞ்சம் விகற்பமாக இருந்தாலும், தயங்காமல் பணத்தை எண்ணி அவளிடம் கொடுத்தேன். நன்றி சொல்லி வாங்கிக் கொண்டாள்.

''பாஸ், நீ மார்னிங் கூடப் போகலாம் !'' என்றாள். மீண்டும் கைகளால் என் கழுத்தைப் பின்னியபடி.

''இல்லை ஸீலியா. ப்ளீஸ் ! நான் போகணும்.''

ஆனாலும் ஸீலியாவின் கைகள் என்னை விட்டு விலகிக் கொள்ளவில்லை. கண்கள் என் கண்களை விட்டு நீங்க வில்லை. ஸீலியாவின் மிகப் பெரிய வாயின் சாயம் பூசப்பட்ட உதடுகள் உலர்ந்து ஓர் தேவையுடன் சற்றே பிரிந்தன. ஸீலியாவின் கைகள் என் பிடரியை அழுத்தித் தாழ்ந்த முயன்றன. சில விநாடிகள் என் மனம் முரண்டு பின் இணங்கியது. ஒரு பெண்ணிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது, அவளுடன் முத்தம் பகிர்ந்து கொள்வது உறவின் அன்பான வெளிப்பாடு தான் என்ற இலக்கணத்தில், ஸீலியாவின் உதடுகளுக்கு என்னுடைய உதடுகள் பணிந்து விட்டன.

அடுத்த சில நாட்கள் ஸீலியாவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். என் அபிமான எழுத்தாளன் லாரென்ஸ் நினைப்பும், அவனின் படைப்புகளும் ஞாபகத்தில் வந்து போயின. ஹென்றி மில்லரின் சில பாலுணர்வுச் சொற்றொடர்களும் வன்முறைகளும் நினைவில் தோன்றின. வக்ரத்தன்மை கொண்ட ஸீலியாவுடன் அவ்வுறவு எனக்குச் சாத்தியம் தானா என்ற யோசனை வந்தது. சீக்கிரமே என் சுகந்தா பங்களூரிலிருந்து வந்து விட்டால் நல்லது என்று மனம் எண்ணியது. என்னிடம் ஸீலியாவுக்கு எது தேவைப் படுகிறதோ அதை அவளுக்கு அளிப்பது ஒரு மனிதாபிமானம்

தான்! ஒரு வேளை என் மனிதாபிமானத்தின் வெளிப் பாடுகளை அவள் துஷ்பிரயோகம் செய்ய நேர்ந்தால் அப்போது என்னைக் கத்தரித்து அவளை நிராகரித்து விடலாம்.

தொடர்ந்து ஐந்து நாட்கள் புத்தகங்கள் படித்துக் கொண்டும், இசையில் லயித்த படியும் என் ஓய்வு நேரத்தை நான் தனிமையிலேயே கழித்தேன். ஒவ்வொரு நாளும் ஸீலியா மட்டும் எனக்கு போன் செய்து பேசிக் கொண்டிருந் தாள். சுகந்தாவிடமிருந்து வரப் போகிற செய்தி குறித்து லெட்டரும் இல்லை. வந்து சேர்ந்து விட்டதாக போன் அறிவிப்பும் இல்லை. எரிச்சலுடன் நானே ஒருநாள் ரிங் பண்ணினேன் :

''ஹலோ!''

''...!''

யாரோ ஆண் குரல்.

சிறிது கோபத்துடன் கேட்டேன்: ''மிஸ் சுகந்தா இல்லையா?''

''நீங்க யார்?''— இந்தப் பதில், கேள்வியின் தொனி யிலேயே தெரிந்து விட்டது ஆள் வந்து சேர்ந்திருப்பது...!

''சுகந்தாவோட ஃபாதர்!'' — சிறிதும் தயங்காமல் சொன்னேன்.

''கொஞ்சம் வெயிட் பண்ணுங்க சார் அவங்க ஸீட்ல இல்ல— இதோ கூப்பிடறேன்...''

சுகந்தாவின் குரலை வரவேற்க நான் உல்லாசமாக நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்தேன். இரண்டு நிமிட நிசப்தத்துக்குப் பின் வளையல்களின் அரவம் கேட்டது...

''அப்பா...!''

நான் பேசாமல் இருந்தேன்.

"அப்பா... கூப்பிட்டேளா?"

"ஏய்...!"

சுகந்தா குரல் சிறிது தயங்கியது. "ஹலோ...! பேசறது யாரு?"

"உங்க அப்பன்!"

"ராம்ஜி, நீங்க தானா?"

"என்னிக்கு வந்தே? போய்ச் சேர்ந்து ஒரு லெட்டர் கூட எழுதலை. திரும்பி வந்து கல் மாதிரி ஆபீஸ்ல உக்காந்துக்கிட்டே. போன் போடாமவேற இருக்கே. என்னம்மா விஷயம், ஆளை மறந்திட்டியா?"

"இன்னிக்கு மார்னிங்தான் ராம்ஜி வந்தேன். வந்ததும் போன் பண்ணணும்னு நெனைச்சேன். ஒரே பிஸி..."

"சரி, ஸீட்ல இல்லாம எங்கே போனே?"

"பி. எம். ரூம்ல ஒரு சின்ன டிஸ்கஷன். அப்பறம்... பங்களூர்ல இருந்து உங்களுக்காக ஒண்ணு வாங்கிண்டு வந்திருக்கேன்."

"வெரிகுட் வெரிகுட்! இந்த மாதிரி யாராவது எனக்கு ஏதாச்சும் ஓசியா வாங்கித் தந்தா ரொம்ப இன்ட்ரெஸ்ட்டா இருக்கும். சரி, என்னம்மா வாங்கிட்டு வந்திருக்கே?"

"சஸ்பென்ஸ்!"

"உன் சஸ்பென்ஸ் என்னன்னு ஈவினிங் தெரிஞ்சிட்டுப் போகுது— ஈவினிங் வருவேல்லியா?"

"வராம?"

மாலை ஐந்து பதினைந்து. இருவரும் மெரீனாவில் உழைப்பாளர் சிலைக்கு நேர் பின்னால் மணலில் உட்கார்ந்திருந்தோம்.

"ஸோ, பங்களூருக்கு என்னை வுட்டுட்டு நீ மட்டும் தனியா ஜம்னு போயிட்டு வந்திட்டே. சரி; எனக்கு

என்னவோ பங்களூர்ல இருந்து வாங்கிட்டு வந்திருக்கிறதா சொன்னியே... என்ன அது, காட்டு பார்க்கலாம்...''

சுகந்தா அவளுடைய 'பேக்'கிலிருந்து முதலில் ஒரு சிவப்பு வர்ணப் பெட்டியை எடுத்தாள்.

''பெட்டிக்குள்ள என்ன இருக்குன்னு சொல்லுங்கோ பார்க்கலாம்...?''

''பெட்டியைப் பார்த்ததுமே தெரிஞ்சி போச்சு என்னன்னு !''

''என்ன ?''

''நிரோத் !''

சட்டென்று சுகந்தாவின் முகம் சிவந்து விட்டது. ''இப்படியெல்லாம் பேசினா நான் எழுந்து போயிடுவேன்...''

''சும்மா தமாஷ்ம்மா...''

''தமாஷா ? கர்மம் ! நாக்கை இழுத்து வச்சு ஒருநாள் அறுத்தா தெரியும்...''

''சரி, பெட்டியைத் திறந்து நீயே காட்டிடேன்—என்னன்னு...''

சுகந்தா என் முகத்தைப் பார்த்துக் கொண்டே பெட்டியைக் கொஞ்சம் கொஞ்சமாகத் திறந்தாள்.

பெட்டியில் இருந்தது ஒரு அழகிய மான்கொம்பு போன்ற டுபாக்கோ பைப் ! ஒரு அழகான உறையில் பதப் படுத்தப் பட்ட புகையிலை ! எனக்குள் வார்த்தையால் விவரிக்க முடியாத உணர்வுகள் மன, உடல் ஆழத்திலிருந்து பொங்கிச் சிலிர்த்தது என்றே சொல்லலாம். என் மேல் அவளுக்கு இருக்கும் காதலில் என்னுடைய புகை பிடிக்கிற கம்பீர சுபாவத்தைக் கூட எத்தனை பெண்மையுடன் அங்கீகரித்து ஏற்றுக் கொண்டிருக்கிறாள்.

சுகந்தாவின் கையில் இருந்த பெட்டியைப் பெற்று மணலில் வைத்து விட்டு, நன்றியுடன் மென்மையான அவளின் கையைப் பற்றிக் கொண்டேன். பரவசத்துடன் அவளின் புறங்கையில் நான் தந்த முத்தத்தைச் சில விநாடிகள் ஒப்புக்கொண்டு அவள் கையை விலக்கிக் கொண்டாள். நாணத்தோடும் சந்தோஷ உணர்வோடும் மையலுடன் சுகந்தாவின் கண்கள் என்னை நோக்கின. என் பார்வையில் தெரிந்த புதியதொரு உணர்வைக் கண்டு அதுவரை அவளில் நான் பார்த்திராத வேறொரு நாணம் உடல்பூராவும் வந்து மொய்த்து விட, கண்களைத் தாழ்த்தியபடி மணலில் ராம்ஜியென்ற என் பெயரை எழுதிக் கொண்டிருந்தாள். அந்த காதல் வெளிப்பாட்டை வெறுமே கண்டு கொண்டு மட்டும் அமர்ந்திருக்க முடியாமல், மீண்டும் என் கைவிரல்கள் தவிப்புடன் அவளின் கையைப்பற்றிக் கொள்ள முயன்றதை சுகந்தாவின் கைகள் சம்மதிக்கவில்லை.

''ப்ளீஸ், வேணாம் ராம்ஜி...!''

''இல்லை சுகந்தா. ஒரே ஒரு கிஸ்— உன் கைல !''

''ப்ளீஸ், வேணாம் ராம்ஜி !''

''ப்ளீஸ், ஒரே ஒரு தடவை''

சுகந்தா பேசாமல் இருந்தாள்.

''என்னோட நன்றியைத் தெரிவிச்சுக்க வேண்டாமா சுகந்தா ?''

மௌனமாகவே இருந்தாள். அந்த மௌனம், பெண்மைக்கே உரிய சம்மதமாகக் காணக் கிடந்தது.

தளிர் போன்ற சுகந்தாவின் கையைப் பற்றி முத்தமிட்டு என் எச்சலை நன்றாகத் துடைத்துவிட்டேன். மறுகணம் எங்கள் இருவரிடையேயும் மூண்டிருந்த உணர்வின் இறுக்கம் தளர்ந்து இருவரும் சமனமானோம்...

''யப்பா...! முடிஞ்சுதா உங்களோட நன்றி ?''— அவளும் ஒருவிதமான நன்றியுடன் தான் கேட்டாள்.

''இப்போதைக்கு முடிஞ்சது !''

சுகந்தா மீண்டும் சிறிது நாணம் கொண்டு என்னைச் செல்லமாகக் கிள்ளினாள்.



நான் சப்பணம் போட்டு உட்கார்ந்து கொண்டேன். அட்டைப் பெட்டிக்குள் இருந்த பைப்பை எடுத்தேன்.

''என்ன விலை இது ?''

''அது என்னத்துக்கு உங்களுக்கு ?''

''சும்மா ஒரு ஆசை தான் ! நம்ம ஆள் நமக்காக எவ்வளவு செலவு பண்ணியிருக்காள்னு பார்க்கத்தான் ?''

''நன்னாயிருக்கா ?''

''கன ஜோர் ! அது சரி; இதை எப்படி அவ்வளவு டேரிங்கா— ஒரு கல்யாணமாகாத பொண்ணு ஒரு கடையில போய்க் கேட்டு வாங்கினே...?''

6

''எங்க எம்.டி. பைப் ஸ்மோக் பண்றதைப் பார்த்திருக்கேனே... ! எனக்கு சில திங்ஸ் வாங்கிக்கறத்துக்காக ஷாப்பிங் போயிருந்தேன்,

அப்போ ஷோ பாக்ஸில் இந்த மாதிரி ஏழெட்டு பைப்ஸை டிஸ்ப்ளே பண்ணி வச்சிருந்தான் கடைக்காரன். உங்க ஞாபகம் வந்தது— வாங்கி உங்களுக்கு ப்ரஸெண்ட் பண்ணணும்னு தோணித்து. உடனே வாங்கிட்டேன்...''

''சரி, பைப் வாங்கினே. டுபாக்கோ எப்படி செலக்ட் பண்ணினே ?''

''கடைக்காரனே நாலைஞ்சி வெரைட்டீஸ் காட்டினான். நீங்க எப்பவும் கோல்ட்ஃப்ளேக்தானே ஸ்மோக் பண்ணுவேள். ஆனா கோல்ட்ஃப்ளேக் இல்லை— சரின்னு இந்த ப்ளேயர்ஸ் வாங்கினேன். ராம்ஜி, பைப்பை பத்தவையுங்களேன் பார்க்கலாம்...''

''பத்த வைக்கிறதுதான் பெரிய பேஜார். உறிஞ்சி உறிஞ்சி எச்சிலா வரும் கொஞ்ச நாளைக்கு. நாக்கு தொண்டை யெல்லாம் எரியும்...''

வெகு நேரம் முயன்றும் காற்று அதிகமாக இருந்ததால் பைப்பைப் பற்ற வைக்க முடியவில்லை.

''மேரேஜுக்கு அப்புறம் நீங்க பைப்தான் ஸ்மோக் பண்ணணும்...''

''நீ சொல்லியாச்சின்னா அதுக்கு அப்பீல் ஏது ? ஆனா ஒண்ணு— பைப் குடிக்கிறதா இருந்தா அதுக்கு முன்னாடி மொதல்ல ஒரு கார் வாங்கணும். கார்லதான் பைப் ! சும்மா தெருவுல பைப் அடிச்சிக்கிட்டுப் போனா— அர்த்த ராத்திரியில் குடை பிடிக்கிறான்னு கண்டவனும் பேசுவான்...!''

''ரொம்பத்தான் திமிர்!''

''ஒன்னை மாதிரி ஒரு கண்ணம்மா இந்த மாதிரி பைப்பெல்லாம் வாங்கித் தந்தா திமிர் வராம என்ன செய்யும் ? சரி, ஒரு வாரத்துக்கு சிகரெட் கிடையாது; பைப்தான். ஆனா, வரும்போதுதான் சிகரெட் ரெண்டு

பாக்கெட் வாங்கினேன். தெரிஞ்சிருந்தா வாங்கியிருக்க மாட்டேன்.''

''வேணாம்னா சிகரெட் பாக்கெட்ஸை என்கிட்ட தந்திடுங்கோ...''

''எதுக்கு ?''

''சும்மாதான் ! என் பேக்லேயே வச்சிருக்கேன் ! ஒங்களுக்கு வேணும்ங்கற சமயத்ல ஒவ்வொண்ணா எடுத்துத் தரேன்...''

''வேணாம் வேணாம். சிகரட் உன் பேக்ல இருக்கறதை யாராவது பார்த்துட்டா ?''

''ஒருத்தரும் என்னோட பேக்கைத் தொடக்கூட மாட்டா !''

''எனக்கென்னமோ சந்தேகமா இருக்கு !''

''என்ன சந்தேகம் ?''

''டாய்லெட்டுல உட்கார்ந்து சிகரெட் குடிச்சி பார்க்கப் போறியோன்னு !''

''ச்சீ ! அப்போ வேணாம். நீங்களே எடுத்திட்டுப் போங்கோ...''

''இல்லை இல்லை. சும்மா தமாஷ். தாராளமா எடுத்துட்டுப் போ...''

''தேங்க்ஸ்...''

மிகவும் முயற்சி செய்து பைப்பைப் பற்ற வைத்துக் கொண்டேன். அப்போது தான் ஞாபகத்துக்கு வந்தது. ''ஆமா, காலையில நான் ஒனக்கு போன் பண்ணப்ப பிராஞ்ச் மானேஜர் ரூம்ல ஏதே டிஸ்கஷன்னு சொன்னியே... நான் தான் சொல்லியிருக்கேனே— அந்தப் பய ரூமுக் குள்ளல்லாம் போகக் கூடாதுன்னு... எதுக்காகப் போனே ?''

''நன்னாயிருக்கே நீங்க சொல்றது... ஆபீஸ் மேட்டர் கூட அவரோட பேசப்படாதா ?''

''அதுக்கப்புறம் அவன், கோத்ரம் கீத்ரம்னு ஏதாவது பேச்சை எடுத்தானா ?''

''எடுப்பாரா ? எடுக்க முடியுமா அவரால் ?''— சுகந்தா நெஞ்சை நிமிர்த்தியபடி கேட்டாள்.

அந்த மிகச் சிறிய உப நினைவை சுகந்தாவின் நேர்மைக்கும் தைரிய சுபாவத்துக்கும் அத்தாட்சியாக இங்கே நினைத்துப் பார்க்கலாம்...

சுகந்தா பணிபுரிந்த நிறுவனத்தின் இந்தியப் பிரிவின் தலைமை அலுவலகம் கல்கத்தாவில் இருந்தது. அங்கே உதவி மானேஜராகப் பணியாற்றிக் கொண்டிருந்த 32 வயதான ரெங்கராஜன், மானேஜராக பதவி உயர்வு பெற்று சென்னைக் கிளைக்கு மாற்றலாகி வந்தான். வந்து சேர்ந்த அன்றைக்கே சுகந்தாவைப் பார்த்து மனம் பிரமித்துவிட்டது அவனுக்கு. திருமணத்துக்காகப் பெண் பார்த்துக் கொண்டிருந்த அவனுக்கு, சுகந்தாவும் தன் குலத்தில் பிறந்தவள் என்பதை அறிந்தும் இனிய அதிர்ச்சி யாக இருந்தது. உடனே அவள் மேல் காதலாகி விட்டான். சுற்றி வளைத்துப் பேசி அவளின் கோத்ரமும் தெரிந்து கொண்டான். போதாதா ? ஒரே குலம், வேறு வேறு கோத்ரம் ! ரெங்கராஜனுக்குத் தன் ஒருதலைக் காதல், கல்யாணத்தில் மங்களமடையப் போவதாக மகிழ்ச்சி ஏற்பட்டுவிட்டது.

தன்னுடைய அப்பாவின் மூலம் சுகந்தாவின் அப்பாவை அணுகி, தனக்கு அவளைப் பெண் கேட்டான்— வரதட் சணை ஒரு பைசா கூட வேண்டாமென்ற பெரிய மனசோடு. சுகந்தாவின் அப்பாவுக்கு, ரெங்கராஜனுக்கு சுகந்தாவை மணம் செய்து கொடுப்பதில் துளிக்கூட ஆட்சேபணை இல்லை. ஜாதகங்கள் கூடப் பொருந்தி இருந்ததாம் !

ஆனால், ஒரே ஒரு நெருடல், இன்னும் சுகந்தாவின் அக்கா கௌசல்யாவுக்கே திருமணமாகாமல் இருக்கிறது. முதலில் அந்தக் கல்யாணம் முடிய வேண்டும். அப்புறம் இதைப் பற்றி பேசலாம் என்று சொல்லி விஷயத்தை ஒத்தி வைத்து விட்டார்.

இந்த விஷயத்தில் சுகந்தாவின் அப்பா துரைஸ்வாமி ஒரு தவறு செய்து விட்டார். சுகந்தாவிடம் அவளுடைய மானேஜருக்கு அவளைப் பெண் கேட்டார்கள் என்ற விஷயத்தை அவளிடம் சொல்லி விட்டார். தன் மேல் மானேஜருக்கு இந்த அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது என்ப தைத் தெரிந்தபின் ஒரு பெண் எத்தனை தர்ம சங்கடத் துடன் ஆபீஸில் வேலை பார்க்க நேரிடும் என்பதை அவர் நினைத்துப் பார்க்கவில்லை. இதை ஒரு நாள் சுகந்தா என்னிடம் சொல்லி விட்டாள். எனக்குப் பயங்கரமான கோபம் வந்து விட்டது.

''ஒங்கப்பாவுக்கு மண்டையிலே மூளையே கெடை யாதும்மா! என்னமோ ரெங்கராஜன் அவனோட அப்பா கிட்ட சொன்னனாம். அதை வந்து இவரு தன் பொண்ணு கிட்ட சொன்னாராம். இன்னும் முதல் பெண்ணுக்கே முடி யலை. அப்புறம் தான் இந்தக் கல்யாணம்னு கரெக்டா அவன் கிட்ட பதில் சொல்லிட்டு அறிவு கெட்டதனமா உன் கிட்ட வந்து வாயைப் பிளந்து கிட்டு ஏன் உங்க அப்பா இப்படியெல்லாம் சொல்றார்? உங்கப்பா தலையிலே மூளை தான் இருக்கா; இல்லே ஏதாவது களிமண் இருக்கா?''

''எங்க அப்பாவைத் திட்டாதீங்கோ!''

''உதைக்கணும் அந்த ஆளை! என் வாயில கெட்ட கெட்ட வார்த்தையாத்தான் வருது! பெத்த தகப்பன் பண்ற வேலையம்மா இது?''

''ப்ளீஸ்...!''

''என்ன ப்ளீஸ்? அறைஞ்சிருவேன் ஒன்னையும் சேத்து! நீ வேலைக்குப் போனதெல்லாம் போதும்.

பேசாம ரிஸைன் பண்ணு. நாளைக்கே கட்ன புடவை யோட கிளம்பி வந்திரு. இம்மீடியட்டா ஏதாவது ஒரு கோயில்ல வெச்சி ஒனக்குத் தாலியைக் கட்டிடறேன். அப்புறம் வர்ற விஷயங்களை அப்புறம் பார்ப்போம். கொஞ் சம் ஏமாந்தா அயோக்கியப் பசங்க ஒன்னைத் தூக்கிட்டுப் போனாலும் போயிடுவானுங்க...!''

''ப்ளீஸ்... ராம்ஜி... ஏன் இதுக்குப் போய் இவ்வளவு ஆத்திரப் படறேள். இப்போ என்ன ஆயிடுத்து ?''

''என்ன ஆயிடுச்சா ? ஆபீஸ்ல அந்தப் பயலை எப்ப டியம்மா ஃபேஸ் பண்ணுவே நீ— இந்த மாதிரி அவனோட மனசில ஒரு ஆசை இருக்குன்னு தெரிஞ்ச அப்புறமும் ?''

''அவரோட ஆசை அவருக்குள்ளே. எனக்கென்ன ராம்ஜி ?''

''திடீர்னு மனசு தாங்காம அவனோட ஆசையை ஒன்னைத் தனியா ஒரு நாள் கூப்பிட்டுச் சொல்லிட்டான்னா அப்ப என்ன பண்ணுவே ?''

''எனக்கு அவர் கிட்ட ஆசையில்லேன்னு சிம்ப்பிளா சொல்லிடுவேன்...''

''விட மாட்டானே ! ஒன்னோட மானேஜர் ஆச்சே... ஏன் ஆசையில்லைன்னு திருப்பிக் கேப்பானே?''

''ஏன்னாக்கா ! நான் வேற ஒத்தர்கிட்ட ஆசை வெச்சிருக்கேன்னு சொல்லிட்டு கம்னு இருந்திடுவேன்...''

நான் நிதானத்துக்கு வந்து விட்டேன்.

''என்ன ராம்ஜி...இதெல்லாம் பெரிய விஷயமா எனக்கு. ஜாதி விட்டு ஜாதில ஒங்களை மேரேஜ் பண்ணிக்கிறதா நான் முடிவு பண்ணி ரொம்ப நாளாச்சு. இந்த ரெங்கராஜன் வந்து என்னை என்ன பண்ணிட முடியும் இனிமே ? நூறு ரெங்கராஜன் வந்தாலும் நான் ஒங்களுக்குத்தான். இந்த ஒரு விஷயத்ல மட்டும் என்னை இனிமே யாரும் எதுவும் செஞ்சிட முடியாது. போறுமா ?''

அன்று என் கண்களில் கலங்கித் தளும்பிய நீர் என்னுடைய நன்றிக் கடன் அன்றி வேறென்ன ?

அந்த நிகழ்ச்சி நடந்த சில தினங்கள் கழித்து ரெங்கராஜன் தாங்க முடியாமல் சுகந்தாவைத் தனியாக அழைத்துத் தன் மனத்தைத் திறந்து காட்டி விட்டான். சுகந்தா தயங்காமல் கண் இமைக்காமல் அவனுடைய காதலை ஏற்க மறுத்து, ''ஸாரி சார். ஆல்ரெடி ஐம் எங்கேஜ்ட்...'' என்று தைரியமாக ரெங்கராஜனை எதிர் நோக்கி அவ்விஷயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள்.

''பாவம் ராம்ஜி. ரெங்கராஜன் அழுதுட்டார்... நான் அப்படிச் சொன்னதும்.''

''நல்லா அழட்டும். ராஸ்கல் ! ஆபீஸ்ல மானேஜர் வேலை பார்க்க வந்தானா ; வேலை பார்க்கற பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறியான்னு கேக்கறதுக்கு வந்தானா ? இனிமே என்னிக்காவது மறுபடியும் இதைப் பத்தி வாயைத் தெறந்தான்னா சொல்லு ; சுட்டுப் பொசுக்கிடறேன்...''

''அதெல்லாம் ஒண்ணும் கேக்க மாட்டார்...''

''ஒனக்குத் தெரியாது. ஆம்பளைப் பயல்களுக்கு சூடு சொரணையே கெடையாது ! மறுபடியும் என்னிக்காவது லேசா வாலை ஆட்டிப் பாப்பானுங்க, சான்ஸ் கெடைச்சா...''

''அதெல்லாம் ஒண்ணும் வராது... வந்தா நான் பார்த்துக்கறேன்... நீங்க பயப்பட வேண்டாம்...''

அந்த ரெங்கராஜன் என்ற மானேஜரின் அறைக்குள் தான் இவள் ஒரு டிஸ்கஷனுக்காகப் போயிருந்தாள் !

''எதுக்கும் ஜாக்ரதையா இருந்துக்க !''

''ஒயெஸ்...!''

''ஸோ ; பங்களூர் போய் வந்துட்டே — இப்ப என்னோட சிகரெட் பாக்கெட்ஸை எடுத்திட்டு போகப் போறே ?''

''யெஸ்...''

''என்னோட சிகரெட் பாக்கெட்ஸை ஏன் உன்கிட்ட வெச்சுக்கறும்னு ஒனக்குத் தோணுதுங்கறதைக் கொஞ்சம் ஸைக்கோ அனலைஸிஸ் பண்ணிப் பார்ப்போமா ?''

''ஐயையோ ! வேணவே வேணாம். உங்க ஃப்ராய்ட் சைக்காலஜின்னா எனக்கு ஒரே அலர்ஜி !''

''சரி விடு ! கௌசல்யா கல்யாண விஷயமா உங்கப்பா ஏதாவது வரன் கிரன் பார்க்கறாரா ? இல்லே செக்ரடேரி யட்ல ஃபைல் பார்க்கறேன்னு சொல்லிட்டு தூங்கி வழிஞ்சிக் கிட்டிருக்காரா ?''

''அலைஞ்சிதான் பார்க்கறார். சரியான ஜாதகமா எதுவும் காணோம்.''

''நீங்க என்ன கோத்ரம் ?''

''ஸ்ரீவத்ஸ கோத்ரம். ஏன், நீங்க போய் ஏதாவது வரன் கிரன் பார்க்கப் போறேளா ?''

''நாலு பேர் பார்த்தா தானே நல்லது.''

''உங்க தங்கை தமிழரசி கல்யாணமும் ஒண்ணும் தெரியலையா ராம்ஜி ?''

சுவாரஸ்யம் இல்லாம சொன்னேன் : ''ஒண்ணும் தெரியலை. சே! இந்த தேசத்ல ஒரு பொண்ணுக்கு கல்யாணம் பண்றதுன்னா பெண்ணைப் பெத்தவன் காவடி எடுக்கிறான் ! எத்தனை காவடி எடுத்தாலும் ஒரு பயலுக்கும் புத்தியும் வரமாட்டேங்குது. யாரை வேணுமானாலும் கல்யாணம் செஞ்சுகிட்டு போயிட்டே இருங்கடான்னு அவிழ்த்தும் விடமாட்டேங்கிறான் ! செக்குமாடா சுத்றான் கழுத்ல கயிறை மாட்டிக்கிட்டு...''

''இதெல்லாம் சொல்றதுக்கு ஈஸியா இருக்கும் ராம்ஜி.''

''செய்யறதும் ஈஸிதான். ஸ்பெஷல் மேரேஜஸ் ஆக்ட் இருக்கவே இருக்கு. என் பக்கம் ரெண்டு ஃப்ரெண்ட்ஸ். உன் பக்கம் ரெண்டு ப்ரெண்ட்ஸ். நான் உனக்குத் தாலி கட்டிடறேன். இல்லே, நீ வேணும்னாலும் எனக்குத் தாலி கட்டு! சும்மா ஒன்னை மீட் பண்ணிட்டு பண்ணிட்டு தனியா கிளம்பிப் போறப்பல்லாம் எனக்கு மூடே கெட்டுப் போயிடுது சுகந்தா. அவஸ்த்தைப்படறேன் நான்.''

''நான் மட்டும் சந்தோஷமாவா போறேன்னு நெனைக்கிறேள்?''— சுகந்தாவின் குரல் வித்தியாசமாகியது.

''ஒங்க கௌசல்யா கல்யாணம் எப்ப வேணுமானாலும் நடந்திட்டுப் போகட்டும். அதே மாதிரி எங்க தமிழரசிக்கும் கல்யாணம் எப்ப வேணுமானாலும் நடக்கட்டும்— அதுக்கெல்லாம் காத்திட்டு இருந்தா ஒனக்குத் தலை நரைச்சுப் போயிடும்! எனக்குத் தலை மொட்டையா ஆயிடும்...!''

''அதெல்லாம் ஒண்ணும் ஆயிடாது! எல்லாம் கொஞ்ச நாள்ல நல்லபடியா முடிஞ்சிடும். மொதல்லேயே டிஸைட் பண்ணிண்ட மாதிரி நாமும் உங்க ஊர்ல போய் அட்லீஸ்ட் உங்க பேரெண்ட்ஸ் முன்னாடி ஸிம்ப்பிளா நாம்ம கல்யாணத்தை பண்ணிப்போம்.''

''ஒனக்கென்ன— ரொம்ப ஈஸியா சொல்லிட்டு எழுந்து போயிடுவே! இங்கே மனுஷன் என்ன பாடுபடறான்னு ஒனக்கென்ன தெரியும்?''

''எல்லாம் தெரியும்.''

''என்ன தெரியும்...?''

''தெரியும்!''

''தெரியாது ஒனக்கு. தெரிஞ்சா இப்படிப் பேசிட்டுப் பேசிட்டு எழுந்து போயிட்டிருக்கமாட்டே! தெரியுதா?''

நான் என்ன சொல்கிறேனென்று சுகந்தாவுக்குத் தெரிந்துவிட்டது !

''சரி... சரி, வாங்கோ கிளம்பலாம்...!''

''என் ரூமுக்கு வர்றீயா ?''

''ரொம்பதான் தைரியம் ! எழுந்துக்கலாம்— டைம் ஆயிடுத்து. எங்கம்மா சீக்கிரமா வாடின்னா... இப்பவே ஆறரை ஆயிடுத்து.''

நான் ஏக்கத்துடன் கேட்டேன், ''அவ்வளவுதானா ?''

''அவ்வளவுதான் ! கிளம்புங்கோ, கெட்டிங் லேட்...''

''நீ வேணா போ... நான் வரலை...''

சுகந்தாவுக்குக் கோபம் வந்தது. ''வெளையாண்டது போதும் வாங்கோ.''

''நான் வரலை போ...''

''ப்ளீஸ்... வாங்கோ ராம்ஜி. சேந்தே போயிடலாம்...''

''சேந்தே போகணும்னு சட்டமா ? ஒனக்கு போகணும்னு தோணுச்சுன்னா எழுந்து போயிட்டே இரு...''

சுகந்தாவின் நாசி விறைத்தது. சிறிது சிவந்தது. ''என்னைப் பார்த்து சொல்லுங்க'' என்றாள்.

''ஒன்னைப் பார்த்துத்தான் சொல்றேன் ! போ— நான் வரலை.''

''ஆல்ரைட்...!''

சுகந்தா எழுந்து நின்றாள். புடவையைச் சரிசெய்து கொண்டாள். சில கணங்கள் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். மெல்லிய குரலில் குட்நைட் சொல்லி விட்டு நகன்றாள். திரும்பிப் பார்த்தேன். தலை குனிந்த படி மெதுவாக நடந்து கொண்டிருந்தாள். போனால்

போகிறான் என்ற சலிப்பு வந்தது. இரவு சாப்பிட்டு விட்டு செயின்ட் தாமஸ் மவுண்ட் போய்விட வேண்டியது தானென்ற வெறுப்பு வந்தது! அயர்வுடன் மணலில் சாய்ந்து படுத்தேன், பாலுணர்வுக் கிளர்ச்சியால் மனமும் உடலும் இம்சைப்பட்டன.

சட்டென என்மேல் நிழல் கவிவது போலிருந்தது. கண்களைத் திறந்தேன். நிலா உதயமாகியது போல், என் சுகந்தாவின் அழகான முகம் என் எதிரில், உயரத்தில், இயல்பான சிரிப்புடன் மலர்ந்திருக்க வாஞ்சையுடன் பார்த்த படி நின்று கொண்டிருந்தாள்.

''வாங்கோ போகலாம்.''

எழுந்து கொள்ளக்கூட முடியாத உணர்வுகளின் ஸ்தம்பிதத்தில் படுத்தே இருந்தேன். நான் எழுந்து கொள்ளும்படி வசதியாக என்னை நோக்கி சுகந்தாவின் கரம் நீண்டது— உணர்வுக் கிலேசம் அத்தனையும் விநாடியில் அணைந்து போக, அவளுடைய கையைப் பற்றிக் கொண்டு நான் எழுந்தேன்.

''சுகந்தா, வந்ததுமே உன்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்னு நெனச்சேன். என் தங்கை தமிழரசியோட பர்த் டே வருது... அதுக்கு ஒரு அருமையான பட்டுப் புடவை எடுத்திட்டுப் பெரியகுளம் போயிட்டு வரலாம்னு இருக்கேன்...''

''கொஞ்ச நாளா ஊருக்குப் போகக் காணோமேனு பார்த்தேன்...''

''புடவை வாங்கப் போறப்ப நீயும் வர்றீயா ?''

''வரேன் ராம்ஜி. ஆனா, நீங்க ஊருக்குப் போனா ஒரே வாரத்ல திரும்பிடணும்...''

''நாலே நாள்ல ஓடி வந்திடுவேன்...''

''சரி, ரொம்ப லேட்டாயிடுத்து, எங்கம்மா கத்துவா. வேகமா நடங்கோ...''

''ஓயெஸ்...!''

# 7

எனக்கும் சுகந்தாவுக்கும் இடையே மலர நேரிட்ட இந்தக் காதலுறவின் துவக்கத்திலே ஒரு விசித்திர சிக்கலை நாங்கள் இருவருமே மனப்பூர்வமாக முடிந்து விட்டிருந்தோம்.

வழி வழியாக ஆசாரம் மிகுந்த பிராமண குடும்பத்தில் பிறந்தவள் சுகந்தா. அவளுக்கு ஒரு மூத்த சகோதரியும், இரண்டு இளைய சகோதரர்களும், ஒரு இளைய சகோதரியும் உடன் பிறந்தவர்கள். வேற்று ஜாதிப் பையனை மணந்து வீட்டை விட்டு ஓடிப் போவற்கு முன்னால் தன் மூத்த சகோதரி கௌசல்யாவுக்குத் திருமணமாகி விடுவது நல்லது என்று சுகாந்தாவுக்கு ஒரு உண்மையான நியாய உணர்வு ஏற்பட்டது. அவளுடைய உணர்வு நியாயமானதுதான்என்று எனக்கும் தோன்றியது.சிறிதும் அழகற்ற, எந்த

வேலையிலும் அமர்ந்திராத கௌசல்யா, இருபத்தைந்து வயதாகியும் திருமணமாகாத நிலைமையில் வீட்டில் இருக்கையில் சுகந்தா ஒரு பிராமணன் அல்லாத மனிதனுடன் வீட்டைவிட்டு வெளியேறி விடுவது, மேலும் கௌசல்யாவின் திருமண பாக்கியத்தை வெகுவாகத் தள்ளிப் போகச் செய்துவிடலாம், அல்லது முற்றிலுமாகவே அந்த பாக்கியத்தை அழிந்து போக வைத்துவிடலாம். அதனால் கௌசல்யா கல்யாணம் முடிந்துவிட்டால்— மறுநாளே என்னுடன் வந்துவிட சுகந்தாவுக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. ஆனால், அப்போது எனக்கும் ஒரு இறுமாப்பு வந்துவிட்டது! எனக்கும் என் தங்கை தமிழரசியின் திருமணம் பற்றி பெரிய ஆதங்கம் இருப்பது போல நானும் காட்டிக் கொண்டேன். ஆனால் என்னுடைய ஆதங்கம் பொய்!

தமிழரசி என் கடைசி தங்கை. அவளுக்கு முன் என்னுடைய இரண்டு தங்கைகளுக்குத் திருமணமாகி விட்டது. அவர்களும் பெரியகுளத்திலேயே வாழ்க்கைப் பட்டிருந்தார்கள். என்னுடைய இரண்டு சகோதரர்கள், ஊரில் அப்பாவுடன் பஞ்சு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார்கள். பக்கத்து ஊரான தேனியில் ஒரு ஜின்னிங் ஃபேக்டரி வேறு வைத்து ஏராளமாகப் பணம் திரட்டிக் கொண்டிருந்தார்கள். என் அப்பா மேலக்காடு மாடசாமி பெயரைச் சொன்னாலே அந்த வட்டாரத்தில் பிறந்த குழந்தை வாயை மூடும்! ஆனால் நான் ஒரு நிமிடம்கூட வாயை மூடியதில்லை! பிறந்த ஜாதி; பெற்ற தகப்பன் என்ற உறவு முறைகளின் நிர்பந்தங்கள் சிறு வயதிலேயே என்னிலிருந்து உதிர்ந்து விட்டன. பெற்றவர்கள், உடன் பிறந்தவர்கள் என்ற அபிமானங்கள் என்னை விட்டு விலக வில்லை. ஆனால் ஏதோ ஒரு இழையில் நான் அவர்களிடமிருந்து விலகி வந்து விட்டேன், அவர்களின் பஞ்சுக் கடையில் சில காலம் நானும் உட்கார்ந்திருந்தாலும் என்னுடைய கையில் இருந்தவை சார்லஸ் டிக்கன்ஸும் தாஸ்தாவஸ்கியும்தான்! மனத்தில் இருந்தவை தாமஸ் ஹார்டியும் ஜீன்பால்சாத்ரேயும்தான்!

என் இருதயத்தின் ஒரு முக்கியமான பரிமாணம் உலகத்தின் பல்வேறு திசைகளாலும் மிகமிக மென்மை கொண்டிருந்தது. பெரியகுளம் பெண்களுக்கு என் மென்மை புரியவில்லை! சென்னை நகரத்துப் பெண்களுக்கு என் வலிமை பிடிக்க வில்லை. சுகந்தாவுக்குப் பிடித்து விட்டது. பிறந்த ஊரிலோ, சொந்த ஜாதியிலோ எனக்குப் பெண் தேவை யில்லை யென்று பெரியகுளத்தில் நான் நோட்டீஸ் அச் சடித்துச் சுவரெல்லாம் ஒட்டி வைத்தது சுகந்தாவுக்கு அதை விடப் பிடித்து விட்டது!

''நீங்க செஞ்ச மாதிரி இதுவரைக்கும் யாருமே செஞ்சிருக்கமாட்டா! ரொம்பதான் தைரியம் ராம்ஜி ஒங்களுக்கு...'' என்றாள் சுகந்தா.

''நீதான் சொல்ற தைரியம்னு. எங்க ஊர்க்கானுங்க கிராக்குத்தனம்னு சொல்றாங்க! தெரியுமா ஒனக்கு?''

''அவாளுக்குக் கிராக்குத்தனமாத்தான் தோணும்!''

''ஒரு வழியில அப்படி அவனுங்களுக்குத் தோணினது எனக்கு வசதியாகத்தான் போச்சு!''

''அப்படியா?''

''என்னை ஒரு மாதிரி கேஸ்னு ஒதுக்கி வெச்சிட்டானுங் களே! இல்லாட்டா இந்த மாதிரியெல்லாம் இஷ்டத்துக்கு மெட்ராஸ்ல என்னை சுத்தவிட்டிருப்பானுங்களா? அன்னிக்கே ஒரு அமுக்கு அமுக்கி எவளையாவது எனக்குக் கட்டி வெச்சிருப்பாங்க. நானும் அவளை ஞாயிற்றுக்கிழமை வைகை டேம் கூட்டிட்டுப்போய் நல்லா புளியோதரை தின்னுக்கிட்டு இருந்திருப்பேன். அதுல இருந்து தப்பிச்சது எவ்வளவு நல்லதா போச்சு பார்! ஜோரா மெரீனா பீச்! பக்கத்துல என்னைவிட அதிகமா படிச்ச ஒரு அழகான பொண்ணு! சாப்பிடறதுக்கு ஃபர்ஸ்ட் க்ளாஸ் சாக்கோ பார்... எவ்வளவு ப்யூட்டிஃபுல்லா இருக்கு இந்த லைஃப்...!''

''நீங்க இப்படி அவாளயெல்லாம் விட்டுட்டு வந்ததுக்கு ஒங்க அப்பா அம்மா ஒண்ணும் சொல்லலையா ராம்ஜி ?''

''இது உருப்படாத கேஸ்னு தலை முழுகிட்டாங்க— வித் ஒரே ஒரு கண்டிஷன்''— இது பொய் !

''என்னது கண்டிஷன் ?''

''நான் எவளை வேணுமானாலும் எந்த ஜாதியில பொறந்தவளை வேணும்னாலும் கல்யாணம் பண்ணிக்கலாம். ஆனா அப்படி நான் பண்ணிக்கிறது எங்க தமிழரசிக்குக் கல்யாணம் முடிஞ்ச அப்புறம்தான் ! இந்த கண்டிஷனை எங்க அம்மாவுக்காகவும் தமிழரசிக்காகவும் தான் ஒத்துக்கிட்டேன்.''

''அவா சொல்றதும் நியாயம்தானே ராம்ஜி ? அதே மாதிரி என்னால எங்க கௌஸி கல்யாணமும் நின்னுப் போயிடக்கூடாது...''

''கரெக்ட், அதனால நாம ரெண்டு பேரும் ஒரு அக்ரிமெண்ட் மாதிரி போட்டுக்கலாம்...''

''ஓயெஸ்...''

அந்த ஒப்பந்தம் தான் சுகந்தா— ராம்குமார் இவர்களின் திருமணத்தின் குறுக்காக ஒரு சங்கடமான சுவராக எழுப்பப் பட்டிருந்தது. ஆரம்பத்தில் கடற்கரையில் குழந்தைகள் கட்டும் விளையாட்டு மண் சுவர் போலத்தான் இந்தச் சுவரும் எழுப்பப்பட்டாலும், நாளடைவில் இதுவே ஓர் இரும்புச் சுவராக இறுதி உயர்ந்துவிட்டது.

பஸ்ஸிலிருந்து இறங்கி சரோஜினி தெருவில் நடக்கத் தொடங்கிய போதுதான் சுகந்தா பரிசளித்த பைப்பை கடற்கரை மண்ணிலேயே விட்டு விட்டு வந்து விட்டது தெரிந்தது. ஒரு நிமிஷம் என்ன செய்வதென்று தெரியாமல் தெருவிலேயே நின்றேன், எரிச்சலாக வந்தது. உடனே

திரும்பிப்போய்த் தேடிப் பார்க்கலாமாயென்ற யோசனை வந்தது. வேகமாக அறைக்குப் போனேன். பக்கத்து அறை மாணவன் ராஜசேகரையும் அழைத்துக்கொண்டு ஸ்கூட்டாில் வெறிபிடித்தவன் போல மெரீனா நோக்கிப் பறந்தேன்.

இருட்டில் மணலில் துழாவித் துழாவிப் பார்த்தோம்; டைப் கிடைக்கவில்லை. எங்கேயோ தொலைந்து விட்டது. இது எனக்குப் பெரிய அபசகுனமாகத் தெரிந்தது. எந்தச் சிறு விஷயத்துக்கும் உணர்ச்சிப் பிழம்பாகி விடுகிற நான் உடனே அமைதி இழந்து விட்டேன்.

மறுநாள் ஆபீஸுக்குப் போனதும் சுகந்தாவுக்கு போன் செய்தேன்.

''என்ன ராம்ஜி ?''

''நீ நேத்திக்குக் குடுத்த பைப்பைக் காணோம் சுகந்தா.''

''வெளையாடாதேள்!''

''வெளையாட்டு இல்லை சுகந்தா. நெஜமாத்தான் சொல்றேன்— நல்லா தேடிப் பார்த்துட்டேன். காணவே காணோம்.''

என் குரலில் இருந்த பதட்டம் அவளுக்குத் தெரிந்து விட்டது.

''போனாப் போறது. வேறே வாங்கித் தரேன் ! ஓகே ?''

சுகந்தா போனை வைத்து விட்டாள். தடாலென்று ரிஸீவரை வைத்தேன். பஸ்ஸரை அழுத்தினேன். கண்ணன் வேகமாக வந்தான்.

''கண்ணன், முனுசாமி இல்லே ?''

''இருக்கான் சார்...''

''அவனை சிகரெட் பாக்கெட் ஒண்ணு வாங்கிட்டு வரச் சொல்லு... அப்புறம் நீ ஒரு வேலை பண்ணணும் கண்ணா...''

''சொல்லுங்க சார்...''

''தூத்துக்குடி எக்ஸ்ப்ரஸ்ல எனக்கு ஒரு டிக்கெட் ரிசர்வ் பண்ணணும்...''

''கொடைக்கானல் ரோடுக்குத்தானே சார்?''

''யெஸ். பத்தாம் தேதிக்குப் பண்ணிடு...''

''ஓகே சார்...''

''வைத்தியலிங்கம் பாங்க் போயிட்டு வந்துட்டாரா?''

''இன்னும் வரலை சார்...''

''வந்ததும் எனக்கு ஒரு ஆயிரம் ருபாய் வேணும். கொண்டாந்து தரச் சொல்...''

''சொல்றேன் சார்...''

''அவ்வளவு தான்...''

''ஓகே சார்...''

சிகரெட் பாக்கெட் வந்தது. ஒன்றை எடுத்துப் பற்ற வைத்தேன். டெலிபோன் ஒலித்தது.

''ஹலோ... யாரு?''

''ஸீலியா பேசறேன் பாஸ்...''

''என்ன விஷயம்?''

''ரோஸ்மேரி எய்ட்த் அன்னிக்குக் கிளம்பி வருது பாஸ்— அஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடி தான் லெட்டர் வந்தது...''

''உடனே கிளம்பிட்டாளா? ரைட், வரட்டும்... ஒரே வாரத்ல அவளுக்கு ஒரு ஜாப் பார்த்துடலாம்...''

''உன்னை ரொம்ப விசாரிச்சு எழுதியிருக்கு பாஸ்.''

''ஏன்... என்னைப் பத்தி அவளுக்கு எழுதியிருந்தியா நீ?''

''நெறய எழுதியிருந்தேன்... இன்னிக்கு வர்றீயா பாஸ் வீட்டுக்கு ?''

''வந்தாலும் வருவேன். நிச்சயமா சொல்ல முடியாது...''

பைப் காணாமல் போன பதட்டம் முற்றிலும் உணர்வுகளிலிருந்து வடிந்திருந்தது. ரோஸ்மேரி என்ற மற்றொரு இளம் பெண்ணைச் சந்திக்கப் போகிறோம் என்ற உவகை மனத்தில் பரவி இருந்தது. நாற்காலியில் சிகரெட்டைப் புகைத்தபடி சாய்ந்து உட்கார்ந்தேன்.

வைத்தியலிங்கம் வந்து பணிவுடன் ஆயிரம் ரூபாயை நீட்டினார். வாங்கி பேண்ட் பாக்கெட்டில் வைத்துக் கொண்டு கிளம்பிவிட்டேன். மயிலாப்பூர் ராசி மாளிகையில் என் தங்கைக்குப் பிறந்த நாள் பரிசாக எண்ணூறு ரூபாயில் அழகான பட்டுப் புடவையைத் தேர்வு செய்து வாங்கிக் கொண்டேன். பிறந்த நாளுக்காக மட்டுமல்லாமல், மாதம் ஒரு முறை நான் என் அம்மாவையும் தங்கை தமிழரசியையும் பார்த்து வரப் பெரியகுளம் போகிறபோதெல்லாம் தமிழரசிக்கு அருமையான புடவைகளை வாங்கிப் போவது வழக்கம்.

சுகந்தாவுடன் எனக்குக் காதலுறவு மலரத் துவங்கிய ஆரம்ப கட்டத்தில் எது வாங்கிப் போகாவிட்டாலும் தங்கைக்குப் புடவைகள் மட்டும் வாங்கிப் போகத் தவறாத என் சுபாவம், சுகந்தாவின் பெண் மனத்தை மிகவும் நெகிழச் செய்து விட்டது. சில சமயங்களில் என் தங்கைக்கு நான் புடவை வாங்கப் போயிருக்கிற வேளைகளில் சுகந்தாவும் என்னோடு வந்திருக்கிறாள். புடவை தேர்ந்தெடுக்கும் என் ரசனையே அவளை மிகவும் சந்தோஷப்படுத்தும்.

''இவ்ளோ ஜோரா புடவை செலக்ட் பண்ண எங்கே கத்துண்டேள் ?''

''இதெல்லாம் கத்துக்கிட்டு வர விஷயமா, சுகந்தா ?''

''எப்படி உங்க கடைசித் தங்கைகிட்ட மட்டும் இவ்வளவு பாசம் வெச்சிருக்கேள் ராம்ஜி ?''

''உன் கிட்டே ஏன் இவ்வளவு பாசம் வெச்சிருக்கேன் ?''

''தெரியலையே...''

''அதே பதில்தான் நீ என்னைக் கேட்டதுக்கும்...''

''எனக்கு ஒவ்வொரு சமயத்ல தோணும்— பேசாம நானும் உங்களுக்கு தங்கையாவே பொறந்திருக்கலாம்னு...''

சுகந்தாவின் இந்த நூதன காதல் வெளிப்பாட்டில் உறைந்திருந்த அவளின் வாஞ்சை என் மனத்தை வெகுவாகக் கனியச் செய்துவிட்டது. ஏனோ அந்த நிமிஷம் என்னைக் கொஞ்சம் வதைத்து விட்டது.

''சுகந்தா,, இப்படியெல்லாம் என்கிட்ட நீ அன்பு காட்டறதுக்கு எனக்கு யோக்யதை இல்லையோன்னு சில சமயத்துல ஏனோ மனசு வெக்கப்படுது...''

நான் இப்படிச் சொன்னதும் கண்ணம்மாவின் கண்களில் பரிவு நிலா வெளிச்சம் போல ஜொலித்தது.

''அப்படியெல்லாம் நீங்களா கற்பனை பண்ணிக்காதேள். சும்மா அது ஒரு இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸ் உங்களுக்கு ! வேற ஒண்ணுமில்லை...''

''இல்லை சுகந்தா. இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸ் மாதிரி கிடையாது... ஸம் ஸார்ட் ஆஃப் கில்ட்டி காம்ப்ளெக்ஸ் உன் எதிரில் வந்திடுது எனக்கு...''

''ஏதாவது தப்புப் பண்ணியிருந்தாத்தான் கில்ட்டி காம்ப்ளெக்ஸ் வரும் ! நீங்க என்ன பெரிசா தப்பு செஞ்சிருக்கேள் ?''

''செஞ்சிருக்கேன் சுகந்தா... மோசமான தப்பெல்லாம் செஞ்சிருக்கேன் நான். சொல்லிடட்டுமா அதையெல்லாம் ?''

''சொல்லக் கூடியதா இருந்தா மட்டும் சொல்லுங்கோ !''

''ஃபர்ஸ்ட் திங்— நான் ஒரு வர்ஜின் பாய் கிடையாது...''

குப்பென்று சுகந்தாவின் முகம் மாறுதலுற்றது.

''என்னோட சின்ன வயசிலே நான் தப்பு பண்ணியிருக்கேன். அதுவும் கண்ட கண்ட பொம்பிளைங்க கிட்டே யெல்லாம்...''

சுகந்தாவின் விரல்கள் என் வாயை இறுக மூடிவிட்டன. நான் வலிந்து அவளின் விரல்களை விலக்கி விட்டுத் தொடர்ந்தேன்...

''...ப்ளீஸ் தடுக்காதே சுகந்தா... கொஞ்சமாவது என் மனசைத் தெறந்து இன்னிக்குப் பேசினாத்தான் மனசு ஆறும் எனக்கு... அந்த அளவுக்கு என் மனசு கெடந்து உள்ளுக்குள்ள கஷ்டப்படுது... இதுவரைக்கும் நான் சந்திச்சிருக்கிற எந்தப் பெண் கிட்டேயுமே எனக்குத் திருப்தி வந்தது கிடையாது. ஏதோ ஒண்ணு எனக்குப் பொம்பளைங்கக் கிட்டே பிடிக்கலை! ஏதோ ஒண்ணு அவளுங்ககிட்ட இல்லை சுகந்தா! அந்த ஏதோ ஒண்ணு எனக்கு உன்கிட்ட கெடைச்சிருச்சி! அது தெரிஞ்சிதான் உன்கிட்ட நான் பார்த்த நிமிஷத்திலேயே சுருண்டு விழுந்திட்டேன். ஆனா... ஸாரி முழுமையா நான் என்ன நெனைக்றேங்கறதை சொல்ல முடியலை...''

''எனக்குத் தெரியறது ராம்ஜி நீங்க என்ன நெனைக்கிறேன்னு...''

''அதான் சுகந்தா, எனக்கு வேண்டியது வர்ஜின் பாடியில்லை. வர்ஜின் மனசு! எந்தக் கறையும் படாத ஒரு அற்புதமான மனசுதான் வேணும் எனக்கு. உனக்கு இருக்கு அந்த மனசு. இந்த மாதிரியான ஒரு மனசைத்தான் நான் நாய் மாதிரி தேடி அலைஞ்சிக்கிட்டு இருந்தேன். ஆனா அப்பேர்ப்பட்ட மனசு கெடைச்ச அப்புறம் இப்பேர்ப்பட்ட மனசு எனக்குக் கிடைக்கறதுக்கு ஏதாவது யோக்யதை

இருக்கான்னு நினைச்சு ஒரு கில்ட்டி காம்ப்ளெக்ஸ் வந்திருச்சி எனக்கு...!''

''அந்த யோக்யதை ஒங்களுக்கு நிச்சயமா இருக்கு ராம்ஜி. சத்தியமா இருக்கு. அவ்ளோ ஈஸியா நான் என் மனசை யாருக்கும் தந்துட மாட்டேன். 'ஐ'ம் வெரிடஃப்! உங்ககிட்டே மட்டும் தான் எனக்கு ஈகோ கிடையாது! ஸ்டெல்லா மேரீஸ்ல நான் படிச்சிட்டு இருந்தப்ப ஹண்ட்ரட்ஸ் ஆஃப் பாய்ஸ் என் பின்னாடி சுத்தியிருக்கா! லட்டர் போட்டிருக்கா! மண்டி போட்டு அழக்கூடச் செய்திருக்கா! அவாள்ள ஒருத்தர் கூட என்னோட மனசைத் தொட்டதே இல்லை தெரியுமா? என் மனசைத் தொட்ட முதல் மனுஷர் நீங்கதான் ராம்ஜி! யூ ஆர் மை பர்ஸ்ட் அண்ட் லாஸ்ட் மேன்...! இந்த உண்மை தெரிஞ்சுக்காம சும்மா மனசைப் போட்டு வதைச்சுக்காதேள்... நீங்க எனக்குக் கெடைச்ச ஜெம்...! அவ்வளவுதான் எனக்கு சொல்லத் தெரியும்...''

சொல்லத் தெரிந்ததை சுகந்தா சொல்லி முடித்து விட்டாள். தொடர்ந்து எதுவும் சொல்லத் தெரியாமல் நானும் மௌனமாக இருந்து விட்டேன்... ஆனால் விதி மௌனமாக இருந்து விடவில்லை. மாதம் ஒரு முறை நான் என் தங்கைக்குப் புடவைகள் வாங்கிக் கொண்டு போன சம்பவங்களில் கூட அது புகுந்து நீச விளையாட்டு விளையாடி விட்டது!

8

ஒன்பதாம் தேதி. மத்யானம் சாப்பாட்டுக்குப் பின் குன்னூரிலிருந்து வந்திருக்கும் ரோஸ்மேரியைப் பார்த்து வரலாமென்று செயின்ட் தாமஸ் மவுண்ட் போய்ச் சேர்ந்தேன்.

தாமரைப் பூக்களால் ஒரு உயிருள்ள சிற்ப வடிவமாகச் சமைத்து வார்த்தெடுத்தது போன்ற மென்மையோடும் திண்மையோடும்— சற்று வயதுக்கு மீறி வளர்ந்து விட்ட ஆரோக்கியமான குழந்தையின் இனிய சாயலில்— ரோஸ்மேரி.

மரக் கதவுகளைக் விலகித் தோட்டத்தில் நான் நுழைந்ததுமே— ஹாலில் உட்கார்ந்த ரோஸ்மேரி வேகமாக எழுந்து வந்தாள்.

" 'ஐ' ம் ரோஸ்மேரி..."

''ராம்குமார்...''

மிக மிக் உண்மையாகச் சொல்வதென்றால்— திடுமென எனக்கு இருபது வயதில் ஒரு புதல்வி கிடைத்து விட்டாற் போலதான் இருந்தது ரோஸ்மேரியைப் பார்த்ததும்! என்ன குழந்தைத்தனமான கண்கள்... எத்தனை ரோஜா வர்ணத்தில் அவளுடைய நகங்கள்...எவ்வளவு அநாயசமான பொன் வண்ணக் கூந்தல்...

நான் அருகிலிருந்த சோபாவில் உட்கார்ந்தேன். ரோஸி கண்களில் வியப்பும் பயமும் கலந்து தெரிய ஒருவித பக்தி உணர்வுடன் என் எதிரில் நின்று கொண்டிருந்தாள்.

''உக்கார் ரோஸி, ஏன் நிக்கறே?'' என்றேன்.

''பரவால்ல பாஸ்...''

''நோ நோ. உட்கார்ம்மா. உக்கார்... நானென்ன ஒனக்கு முதலாளியா இல்லே வாத்யாரா? உட்கார்...''

தயக்கத்துடன் நாற்காலியின் விளிம்பில் உட்கார்ந்தாள்.

''நல்லா சாஞ்சு உட்கார்.''

சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

''நான் நெனைக்கவே இல்லை ரோஸி— நீ இவ்வளவு சின்னக் குழந்தை மாதிரி இருப்பேன்னு.''

ரோஸ்மேரியின் முகத்தில் சந்தோஷம் வந்தது. கவுன் பட்டனைத் திருகிக் கொண்டே சொன்னாள்:

''எனக்கு அதான் பாஸ் ஆசை. எப்பவும் சின்னக் கொழந்தையாகவே இருக்கணும்...''

''ஒன்னைப் பாத்த நிமிஷமே எனக்கு மனசில என்ன தோணுச்சு தெரியுமா ரோஸி? திடீர்னு கடவுள் இருபது வயசில எனக்கொரு டாட்டரைக் குடுத்துட்டாப் போலத் தான் இருந்துச்சி!''

ரோஸ்மேரி வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள். காலின் பெருவிரலால் தரையைக் கீறிக் கொண்டிருந்தவளைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். அந்தக் கணம் எனக்கு என்னுடைய இளமையும் வாலிபமும் கசப்பாக இருந்தது. என் தலைமுடியெல்லாம் நரைத்து ஒரு வயோதிகனாகத் தளர்ந்துவிட வேண்டும் போலிருந்தது. கைத்தாங்கலாக ரோஸ்மேரி எனக்குக் கனிவுடன் வழியுதவி செய்யவேண்டும் போலிருந்தது. என்றைக்காவது குறைந்த பட்சம் அவளை என் ஸ்வீகார புத்திரியாகவாவது இந்த உலகத்துக்குத் தெரிவித்துவிட வேண்டுமென்று எண்ணிக் கொண்டேன் !

''டென் டேய்ஸ்ல ஒனக்கு ஒரு ஜாப் வாங்கித் தந்துடறேன், என்ன ?''

''சரி பாஸ் !''

''ஆனா ஒரே ஒரு விஷயத்தை மட்டும் ஞாபகம் வச்சிக்க. எனக்குத் தெரிஞ்ச வரைக்கும் ஸீலியா சில விஷயங்கள்ல சரியில்ல ! அவளைத் தேடி வர்ற சில பசங்களும் சரியில்லை ! அதனால நீ கொஞ்சம் ஜாக்ரதையா இருக்கணும். புரியுதா ? ஒருவேளை நீ இங்க இருக்றது அவ்வளவு சரியில்லேன்னு எனக்கு எப்பவாவது தோணிச்சுன்னா ஒன்னைக் கொண்டு போய் ஏதாவது ஹாஸ்டல்ல சேத்துடுவேன், சரிதானா ?''

''சரி...''

ரோஸ்மேரி இன்னும் பயபக்தி கலையாமலேயே விரலில் நகத்தைக் கடித்தபடி உட்கார்ந்திருந்தாள்.

''நகத்தைக் கடிக்கக்கூடாது !''

உடனே நகம் கடிப்பதை நிறுத்திக் கொண்டாள்.

''ரோஸி, என்கிட்ட உள்ள முக்கியமான குணம் என்ன தெரியுமா ? என்னைக்குமே என் பேச்சை அப்படியே கேக்கறவங்களைத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும் !''

''நீ என்ன சொன்னாலும் நான் கேக்கறேன் பாஸ்''— ரோஸ்மேரி மகிழ்ச்சியுடன்தான் சொன்னாள்.

''வெரிகுட் ! குட்கேர்ள் !''

விகற்பமே இல்லாமல் கவுனைத் துடையிடுக்கில் செருகிக் கொண்டு உட்கார்ந்தாள்.

''ரோஸி, அப்படியே கொஞ்ச தூரம் வாக்கிங் போயிட்டு வருவோமா ?''

''ஓயெஸ்...''

''சரி, ஆண்ட்டிகிட்ட சொல்லிட்டு வா. ஒரு பதினைஞ்சி நிமிஷம் சின்ன வாக் போயிட்டு வருவோம்...''

''ஒன் மினிட்...''

நான் சிகரெட் பற்ற வைத்தபடி வெளியில் காத்திருந்தேன். ரோஸ்மேரி ஓடிவந்தாள். நிஜமாகவே என் மகள் ஓடி வருவது போலத்தான் இருந்தது எனக்கு. என்றைக் காவது இவளை அழைத்துப்போய் சுகந்தாவிடம் அறிமுகம் செய்து வைக்க வேண்டுமென்று நினைத்தேன். எனக்கு மகள் என் சுகந்தாவுக்கும் மகள்தானே !

உயர்ந்த மரங்கள் வளர்ந்த வீதியில் நடமாட்டம் இல்லை. மரக்கிளைகளில் குயில்களின் குரல்கள் கேட்டன. மரங்களை நிமிர்ந்து பார்த்தேன். உச்சியில் கொக்கு இனத்திலேயே சற்று மாறுபட்ட வக்கா பறவைகள் கும்பல் கும்பலாக அமர்ந்திருந்தன.

''வெரிகுட். இங்கே இவ்வளவு வக்கா இருக்குதுங்களா ? ஊருக்குப் போயிட்டு வந்ததும் ஒரு நாள் என்னோட துப்பாக்கியை எடுத்திட்டு வந்திடவேண்டியதுதான். சுட்டுச் சாப்பிட்டா ஏ ஒன்னா இருக்கும் !'' என்றேன். ரோஸியும் நிமிர்ந்து பார்த்தாள். தன்னுடைய இனத்தைப் பார்த்தாற் போல அவளின் கண் இமைகள் சிறகுகள் போல அடித்துக் கொண்டன...

''ப்ளீஸ்... வேணாம் பாஸ். பேர்ட்ஸை கொல்லக் கூடாது...''

''சாப்டறதுக்கு ரொம்ப ஜோரா இருக்கும் ரோஸி!''

''நோ பாஸ். பார்... எவ்ளோ ஹேப்பியா அந்த பேர்ட்ஸ் கத்திட்டு உக்காந்திருக்கு. ப்ளீஸ்... டோண்ட் கில்...''

''சரி வா. நடக்கலாம்...''

சிறிது தூரம் நடந்த பின் ரோஸ்மேரி கேட்டாள் :

''பாஸ், அந்த ஹண்ட்ரட் ருபீஸ் எப்ப நான் திருப்பித் தரணும் ?''

சட்டென்று ரோஸ்மேரியின் முகத்தைப் பார்த்தேன். அவளின் கண்களில், கடன்பட்ட நெஞ்சம் தெரிந்தது.

''சீச்சீ ! உன்கிட்ட நான் அந்தப் பணத்தைத் திருப்பியா கேட்டேன் ?''

''நீ கேக்காவிட்டாலும் அது உன் பணம் இல்லையா ?''— சிறுமிக்கு உரிய மருட்சியுடனே கேட்டாள். ஒரு நிமிடம் நான் உணர்ச்சி வசப்பட்டேன். ஆதரவுடன் ரோஸ்மேரியின் உச்சிதனை முகர வேண்டும் போலிருந்தது. பாரதியின் கண்ணம்மா பாடல்கள் அனைத்தும் என் நெஞ்சில் மோதின. அவளின் தோள்களில் அவளுக்கொரு பாதுகாப்புப் போல என் கைகளை அரவணைத்து நடந்து சென்றேன்...

என்னுடைய கை சொந்தத்துடன் அவளுடைய தோள்களில் படர்ந்து கொண்டதை உடனடியாக இணக்கத்துடன் ஆனந்தத்துடன் ஏற்றுக் கொண்ட தன்மையில், ஒரு பரிவுமிக்க ஆண் என்ற பாதுகாப்புக்கு ரோஸ்மேரியின் மனம் எத்தனை காலமாகக் காத்திருக்கிறது என்பதை என்னால் உணர முடிந்தது.

''உன் டாடி உயிரோடு இருந்து உனக்குப் பணம் தந்தாக்க அவருக்கு நீ பணத்தைத் திருப்பியா கொடுப்பே ?''

''இல்லை...''

''தட்ஸ் ஆல்...''

சிறிது தூரத்துக்குப் பேசாமல் நடந்தோம்.

''நல்லா சந்தோஷமாக இரு. ஜாலியா இரு. ஒனக்கு என்ன வேணும்னாலும் என்னைக் கேளு, நான் வாங்கித் தரேன். எங்கே போகணும்னாலும் சொல்லு. கூட்டிட்டுப் போறேன், எங்கே இப்போது போகணும் ?''

''லைட் ஹவுஸ்...?''

''சரி, வேற...''

''ம்யூஸியம்...''

''சரி, அடுத்து ?''

''மூர்மார்க்கெட்... மெரீனா பீச்... மிருகக்கண்காட்சிச் சாலை...''

''அப்ப ஒண்ணு பண்ண வேண்டியது தான் ரோஸி... நாளைக்கு நான் எங்க ஊருக்குப் போறேன்...''

''எப்ப வருவ பாஸ்...? ''

''ஒரே வாரத்ல வந்திடுவேன். வந்ததும் ஒரு வாரம் எல்லா இடத்தையும் சுத்திப் பார்த்திடலாம். சுத்திப் பார்த்த அப்புறம் வேலையில் ஜாயின் பண்ணு. ஜாயின் பண்ணிட்டு மூர்மார்கெட் பாக்கப் போறேன், மெரீனா பீச் பார்க்கப் போறேன்னு போய் லீவ் கேட்டா ஒன்னை வீட்டுக்குப் போயிடு தாயின்னு சொல்லிடுவான். தெரியுதா...?''

ரோஸ்மேரி 'சரி' யென்று தலையை ஆட்டினாள்.

''ரைட் வா, திரும்பிப் போகலாம்.''

நான் ஆபீஸை அடைந்ததும் கண்ணன் சொன்னான்: ''சுகந்தா போன் பண்ணினாங்க சார்.''

''எதுவும் சொன்னாங்களா...''

''உங்களை போன் பண்ணச் சொன்னாங்க...''

உடனே சுகந்தாவுக்கு போன் பண்ணினேன்.

''என்னம்மா, போன் பண்ணியா ?''

''பைப் கெடைச்சுதா, இல்லையா ?''

''அது அவ்வளவுதான். எந்தப் பய கையில கெடைச்சுதோ... நமக்கும் பைப்புக்கும் ராசியில்லை...''

''போனாப் போறது அது... நீங்க நாளைக்கி ஈவினிங் தானே ஊருக்குப் போறேள் ?''

''ஆமா, வாரியா நீயும் ?''

''எப்போ வரணுமோ அப்போதான் வருவேன். சரி, நாளைக்கு சனிக்கிழமை... அரை நாள் தான் ஆபீஸ்... மத்யானம் ரெண்டு மணிக்கு வந்துடறேளா ?''

''ஓயெஸ்...''

''பேசிண்டு இருந்துட்டு அப்படியே நீங்க ஈவினிங் ஊருக்குக் கிளம்பிடலாம்...''

''அப்ப நாளைக்கு சரியா ரெண்டு மணிக்குப் பார்ப்போம்...''

''ஓயெஸ்...''

மறுநாள் சரியாக மதியம் இரண்டு மணிக்கு தம்புச் செட்டித் தெருவின் முனையில் நின்றேன். சுகந்தா, அவளுடன் பணிபுரியும் ஜானகியுடன் வந்தாள்...

''ஹலோ ஜானகி! எப்படி இருக்கீங்க ?''— உடனே ஜானகி வெட்கப்பட்டாள்.

''நீங்க எப்படி இருக்கீங்க ராம்குமார் ? எப்பத்தான் ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கப் போறீங்க? ''— வெட்கப்பட்டுக் கொண்டே கேட்டாள்.



''அவளைக் கேளுங்க. அவ சரின்னு சொன்னா இப்பவேகூட தாலி கட்றதுக்கு நான் தயார்...''

அவ்வளவுதான். ஜானகிக்கு இன்னும் வெட்கம் வந்தது !

''அப்ப நான் வரேன் சுகந்தா...'' — ஜானகி விடை பெற்றாள்.

''நீயும் வேணா வாயேன் ஜானகி'' — சுகந்தா ஜானகியைக் கூப்பிட்டாள். எனக்கு எரிச்சலாக இருந்தது ! அறுவை !

''ஐயையோ ! நான் எதுக்கு, நீங்க ரெண்டு பேரும் போங்க...''

நானும் சுகந்தாவும் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்தோம்,

''ட்ரைவ் இன் போப்பா...''

டாக்ஸி கிளம்பியதும் சுகந்தாவை ஒரு கிள்ளு கிள்ளி னேன்.

''திமிரா ஒனக்கு ? அந்த அறுவையைப் போய்க் கூப்பிடறியே !''

''ஸாரி ஸாரி ! சும்மா ஒரு ஃபார்மாலிட்டிக்குக் கூப் பிட்டேன் ! உடனே அதைப் பெரிசா எடுத்துக்காதேள்... தமிழரசிக்குப் புடவை வாங்கிட்டேளா ?''

''நாலு புடவை வாங்கியிருக்கேன்...''

''பணம் காச்சுக் குலுங்கறது போல... ஜமாய்ங்கோ...!''

சிகரெட்டுக்காக பேண்ட் பாக்கெட்டில் கையை விட்டேன். சிகரெட் பாக்கெட்டை ஆபீஸிலேயே விட்டு விட்டு வந்திருந்தேன்.

''சே ! வரவர எனக்கு ஞாபக மறதி ரொம்ப ஜாஸ்தி யாயிடுச்சி,''

''எதிலேயும் கொஞ்சம் நிதானமா இருந்தாத்தானே—உடனே அவசரம். படபடப்பு. ஒரே கோவம்...''

டாக்ஸி சென்ட்ரலைத் தாண்டிக் கொண்டிருந்தது. சில நாட்களுக்கு முன் சுகந்தா என்னுடைய சிகரெட் பாக்கெட்களை எடுத்துக் கொண்டு போயிருந்தாளே—அந்த ஞாபகம் வந்தது.

''ஒரு சிகரெட் வேணும்.''

''சிகரெட் இல்லியே சார்!''—பட்டென்று டாக்ஸி டிரைவர் திரும்பிப் பார்த்துச் சொன்னான். நானும் சுகந்தாவும் குதூகலமாகி விட்டோம்.

''சிகரெட் உன்னைக் கேக்கலைப்பா. இந்த அம்மாகிட்டதான் நான் சிகரெட் கேட்டேன்! பெரிய செயின் ஸ்மோக்கர் இவங்க...''

சுகந்தா பலமாக என்னைக் கிள்ளினாள். ''நீங்க சொல்றதை நெஜம்னு நம்பிடப் போறார்!''

''நெஜம்தானே! சரி, ஒரு சிகரெட் குடு!''

தன்னுடைய பேக்கைத் திறந்து சுகந்தா சிகரெட் பாக்கெட்டை எடுத்தாள்.

''டிரைவர், இங்கே பாரப்பா! பாக்கெட் பாக்கெட்டா வெளியில வருது...'' டிரைவர் எங்களின் அந்நியோந்நியம் தெரிந்து சிரித்துக் கொண்டான்.

''நீ ஆயிரம் சொல்லிக்க சார். ஆனா நான் நம்பமாட்டேன்!''

''போச்சு. நீ ஏமாந்துட்டே இந்த அம்மா கிட்ட!''

''ஸ்மோக் பண்ற பொம்பளைங்க மூஞ்சி ஒன்னைவிட எனக்கு நல்லா தெரியும் சார்...''

''போறுமா?''—சுகந்தாவுக்கு ரொம்பவும் குஷி. இறங்கும் போது டாக்ஸிக்கு அவள்தான் பணம் கொடுத்தாள்.

''டிரைவருக்கு லஞ்சமா ?''

ட்ரைவ்-இன்னில் சப்போட்டா மரத்தின் கீழ் அமர்ந்தோம். உட்கார்ந்த நிமிடத்தில் சுகந்தாவின் முகம் மாறியது. எங்களுக்குச் சிறிது தள்ளி தன்னுடைய நண்பர்களுடன் சுகந்தாவின் உறவினர் ஸ்ரீவத்ஸன் உட்கார்ந்திருந்தான். சுகந்தாவின் காதலைப் பெறவும் அவளையே மணந்து கொள்ளவும் முறைப் பையன் என்ற வழியில் அவளை அணுகி அணுகித் தோற்றுப் போனவன்— அந்தத் தோல்வியின் புகைச்சல் கண்களில் வழிய எங்களையே பார்த்தான். 'ஓ, இவன் கூட சுத்தறியா?' என்பது போலச் செருக்காக நோக்கினான்.

இகழ்ச்சியான சிரிப்பை வரவழைத்தபடி சுகந்தாவைக் கேட்டான் : ''எங்க இப்படி ?''

அவசரமாக ஒரு புதிய சிகரெட்டைப் பற்ற வைத்தபடி மிகச் செருக்குடன் கேட்டேன் : ''நீ எங்கே இப்படி ?''

நான் இப்படிக் கேட்பேன் என்பதை அவனும் அவனுடைய நண்பர்களும் சிறிதும் எதிர்பாராததால் அதிர்ந்து போனார்கள். சில விநாடிகள் கழித்து ஸ்ரீவத்ஸனும் செருக்குடன் சொன்னான், ''நான் சுகந்தாவைக் கேட்டேன், உன்னை இல்லே.''

''இங்கேல்லாம் அவ ஒனக்குப் பதில் சொல்ல மாட்டா !''— கொஞ்சம் உரத்த தொனியில் அவனை எச்சரிப்பது போல் சொன்னேன். சுகந்தா அச்சத்துடன் என்னைத் தொட்டாள். பயப்படாதே என்பது போல, நானும் அவளை லேசாகத் தொட்டேன்.

ஸ்ரீவத்ஸன் அவனுடைய நண்பர்களுக்குச் சொல்வது போல எனக்குச் சொன்னான் : ''அவ எனக்கு உறவு !''

''அதெல்லாம் இங்கே வேணாம். வேற எங்கேயாவது போய் வெச்சுக்க !'' — நான் மிரட்டினேன்.

''நீயும் வேற எங்கேயாவதுபோய் வெச்சிக்க !''— திமிரோடு கொஞ்சம் பயத்தோடு சொன்னான் ஸ்ரீவத்ஸன்.

அடிபட்ட நாகம் போலச் சீறி எழுந்து விட்டேன் ; ''வேற எங்கேயும் வெச்சிக்க வேண்டாம். இங்கேயே வெச்சிக்கலாம். வாடா எந்திருச்சி !''

பலரும் திரும்பிப் பார்த்தார்கள். அந்த இடத்தின் நளினம் சலனம் அடைந்தது. சுகந்தா இரங்கத்தக்க வகையில் தலை குனிந்திருந்தாள். சினத்தைத் தணித்துக் கொண்டு சொன்னேன், ''இவளுக்காக வுடறேன் உன்னை... இல்லை கை வேற, கால் வேற கழட்டிடுவேன் கழட்டி... யார் கிட்ட காட்றே உன் வேலையெல்லாம்...'' என்றபடி உட்கார்ந்தேன். இடம் நிசப்தமாகியிருந்தது.

சர்வர் என்னிடம் பயந்து கொண்டே வந்தார்.

''ரெண்டே ரெண்டு பீச்மெல்பா.''

சர்வர் போனதும் சுகந்தாவிடம் கேட்டேன் : ''நீ வேற எதுவும் சாப்பிடறீயாம்மா ?''

''வேணாம் ராம்ஜி''— மெல்லிய குரலில் சொன்னாள்.

''இவனுக்கெல்லாம் போய் ஏன் பயப்படறே ?''

''பயப்படலை.''— சொல்லிச் சிரிக்க முயன்றாள்.

''ஈஸியா இரு. பொட்டைப் பயலுங்க தின்னு முடிச்சிட்டுத்தான் உக்காந்திருக்கானுங்க... இப்ப எழுந்து போயிடுவானுங்க...''

அதே மாதிரி சுகந்தாவைப் பார்த்துக் கொண்டே மிகவும் ஸ்டைலாக அவன்கள் எழுந்து போனான்கள்.

''இனிமே ஒன்னைக் கோஷா போட்டுத்தான்ம்மா கூட்டிட்டு போகப் போறேன்...!''

சுகந்தா பிரியமுடன் கிள்ளினாள்.

''பப்ளிக் ப்ளேஸ்ல காட்டான் மாதிரி கத்திட்டேன்னு வருத்தமா இருக்காடா கண்ணம்மா ?''

''யெஸ் ! ஆனா ரொம்ப ஆம்பிளைத் தனமா நடந்துண்டேள்னு ஒரு பக்கம் சந்தோஷமாவும் இருக்கு...''

''அப்படித்தான் இருக்கணும்.''

''அப்ப ஜாலியா ஊருக்குப் போறேளாக்கும். நீங்க ஒரு விஷயம்–ஊர்ல இருந்து வர்ரச்சே மறந்திடப்படாது. தெரியுதா ?''

''ஸாரி, நீ என்ன சொல்றேன்னு புரியலை...''

''மறந்துடுத்தா ? ரெண்டு மூணு தடவை நீங்க ஊருக்குப் போறச்செல்லாம் கேட்டனுப்பிச்சேனே...''

நான் சில நிமிஷங்கள் யோசித்துப் பார்த்தேன். சுகந்தா என்ன கேட்டாள் என்பதை என்னால் ஞாபகத்துக்குக் கொண்டு வரமுடியவில்லை...

''இந்த வயசில் என்னதான் ஞாபக மறதியோ ! உங்க தமிழரசி போட்டோ கேட்டேனே...''

''ஆமாமா... அவ போட்டோ நீ கேட்டே இல்லே, மறந்தே போச்சு...''

''ஒன் வீக்ல வந்திடுங்கோ ராம்ஜீ...''

''சொல்ல முடியாது... அதுக்கு முன்னாடியே வந்தாலும் வந்திடுவேன்...''

''உங்க ஊர்ல ஏதாவது நல்ல கோயில் இருக்கா ராம்ஜி...?''

''என்ன விஷயம்?''

''நம்ம கல்யாணம் சீக்கிரமே நல்லபடியா நடக்கணும்னு அந்தக் கோயில்ல— ப்ளீஸ் வேண்டிக்கணும் நீங்க...''

''ஸாரி ! என்னால கோயிலுக்கெல்லாம் போய் இந்த மாதிரி வேண்டிக்க முடியாதும்மா... எனக்கும் சேத்து நீ வேணா வேண்டிக்க...''

''நான் வேண்டிண்டாச்சு...''

''எந்த சாமிகிட்ட...?''

''ஆஞ்சநேயர் !''

''சரியான சாமியாத்தான் பிடிச்சிருக்க ! என்ன வேண்டிக்கிட்டே ?''

''வர வருஷமே நமக்குக் கல்யாணம் ஆயிட்டா ஆஞ்சநேயருக்கு திருமஞ்சனம் பண்றதா வேண்டிக்கிட்டிருக்கேன்...''

''ரொம்ப சரி...''

''திரும்ப ஞாபகப்படுத்தறேன்...... இந்தத் தடவை தமிழரசி படம் மறக்காம கொண்டு வரணும்...''

''கண்டிப்பா மறக்கமாட்டேன்...''

ஆனால், அந்தத் தடவையும் நான் என் தங்கை தமிழரசியின் போட்டோவை வாங்கி வர மறந்துவிட்டேன். அந்த மறதி எப்பேர்ப்பட்ட விஷ விதையாக சுகந்தாவின் அறிவில் விழுந்து விட்டது !

ஒரு வாரத்துக்கு முன்பாகவே வந்து விடுவேனென்று சொல்லி விட்டுப்போய் வழக்கம் போல பத்து நாட்கள் கழித்துத்தான் அந்தத் தடவையும் திரும்பினேன்.

நேராக மாம்பலம் போகாமல் தாம்பரத்தில் இறங்கி மின்சார ரயிலுக்கு மாறி செயின்ட் தாமஸ் மவுண்ட்டில் குதித்து விட்டேன்.

பிரதான சாலையிலிருந்த பேக்கரியில் இருந்து ஆபீஸ்க்கு ரிங் பண்ணினேன்.

''ஹலோ! மிஸ்டர் சங்கரனா?''

''ஆமா சார்; ஊர்ல இருந்து எப்போ வந்தீங்க?''

''மார்னிங்தான் வந்தேன். ஆபீஸ்ல என்ன விசேஷம்?''

சங்கரன் விசேஷங்களைச் சொன்னார்.

''சரி, இன்னிக்கி நான் ஆபீஸ் வரமாட்டேன். யாராவது கேட்டா நான் ஊர்ல இருந்து வரலைன்னு சொல்லிடுங்க !''

''சரி சார்...''

போன் பேசிட்டு ஸீலியாவின் வீட்டை அடைந்தேன். தோட்டத்தில் நின்று ரோஸ்மேரி பல் துலக்கிக் கொண்டிருந்தாள். பொன் வண்ணக் கூந்தல் நெருப்புக் கற்றை போல் சிதற ரோஸ்மேரி என்னைப் பார்த்ததும் குதியாய்க் குதித்தாள்.

''சின்னக் கண்ணம்மா ; எப்படி இருக்கே ?''

''ஃபைன் பாஸ்.''

''ரோஸி, ஒனக்கு எங்க அம்மா எள்ளு உருண்டை, அதிரசம் எல்லாம் செய்து சீதனம் கொடுத்தனுப்பிச்ச மாதிரி குடுத்து விட்டிருக்காங்க ! சாப்பிட்டுப் பார் எல்லாத்தையும்...''

ரோஸ்மேரி ஓடிப்போய் வாய் கழுவி விட்டு வந்தாள். சிறிதும் கபடமில்லாமல் என்னை நெருங்கி உட்கார்ந்தாள்.

''ஸீலியா இல்லையா...?''

''ஆபீஸ்க்கு போயிட்டா பாஸ்.''

ரோஸ்மேரி அதிரசத்தை எடுத்துத் தின்று பார்த்தாள்.

''இன்னிக்கி நீ ஆபீஸ் போகலையா பாஸ் ?''

''இல்லே. இங்கேயே சாப்பிட்டு விட்டு ரோஸியைக் கூட்டிட்டு இன்னிக்கி ஒரு ரவுண்ட்.''

''ஹையா...!''

குளித்து, சாப்பிட்டு முடித்து ரோஸியின் படுக்கையில் வெகு நேரத்துக்கு ஒருவிதத் துயரத்துடன் படுத்திருந்தேன். எனக்குப் பணிபுரியக் காத்திருக்கும் ஒரு தாதி போல, நகம் கடித்தபடி என் பக்கத்திலேயே ரோஸ்மேரி நின்று கொண்

டிருந்தாள். உடம்பின் எந்த அவயத்திலும் எலும்புக் கணையே நெருடாத தாமரை மொட்டாகத் தெரிந்த ரோஸ் மேரியை அருகில் உட்கார வைத்துக் கொண்டேன். ஏனோ அந்தக் கணத்தில் சுகந்தாவுடன் எனக்கு இருக்கும் உறவெல்லாம் ஏதோ ஒரு கேவலமான சரசம் போலத்தான் தெரிந்தது. நானும் அவளும் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டிருக்கிறோமோ என்றுகூடச் சந்தேகம் வந்தது! உண்மையில் எனக்கும் சுகந்தாவுக்கும் உள்ள உறவின் அடிப்படை என்னவென்ற ஒரு ஆழமான குழப்பம் ஏற் பட்டது! நானும் சுகந்தாவும் ஒருவரிடம் ஒருவர் ஏதோ வழியற்றுப் போய்ச் சிக்கிச் சிறைப்பட்டுக் கிடக்கிறோமோ என்றுகூடச் சஞ்சலம் தோன்றியது! எனக்கு ஏன் இந்த சுகந்தாவும் அவளுடைய உறவும் என்ற கேள்விகூட எழுந்தது! இதெல்லாம் வாழ்க்கையின் மிகமிக மேற்பரப்புக் குமிழிகள் என்றுதான் தோன்றியது. கணத்தில் தோன்றி மறைந்துப் போகப்போகும் இந்தக் குமிழிகளுக்குத்தானா இந்த அவஸ்தைகளும் ஆர்பாட்டங்களும்? சட்டெனக் கை தவறி என் சிந்தனை எங்கோ ஆழங்களை நோக்கி விழுந்து விட்டாற் போலிருந்தது. பல நிமிஷங்களுக்கு என் பிரக்ஞை காணாமல் போயிருந்தது!

''என்ன பாஸ், ஒண்ணுமே பேசாமெ இருக்கே?''— ரோஸ்மேரி தயங்கிக் கொண்டே கேட்டாள்.

நான் பெரியதாக மூச்சுவிட்டபடி சொன்னேன்: ''ஒண்ணுமில்லே ரோஸ்மேரி... ஒரு புது உலகத்ல அஞ்சு நிமிஷம் காலை வெச்சிட்டு வந்த மாதிரி இருக்கு! சரி, நீ ட்ரெஸ் சேஞ்ச் பண்ணிக்க, கிளம்பலாம்...''

''முதல்ல மூர்மார்க்கெட்தானே பாஸ்?''

''ஆமா...''

மூர்மார்க்கெட்டில் ரோஸ்மேரி கேட்டதெல்லாம் வாங்கித் தந்தேன். பேட்மிண்ட்டன், செஸ், ஒட்டுப்படம்,

ஸ்டிக்கர், சிக்லெட், வாட்டர் கலர், பைனாகுலர், கலர் பென்சில், இரண்டு கவுன், இரண்டு ப்ரா...

ப்ரா வாங்கும்போது மட்டும் வேண்டாமேயென்று சொல்ல என் மனம் மெலிதாக ஆசைப்பட்டது. ரோஸ்மேரி ஒரு சின்னக் குழந்தை. அவளுக்கு எதற்கு அதெல்லாம் என்று கேட்கலாம் போலத்தான் இருந்தது. ஆசைப்பட்டு வாங்குகிறாள். சரி, வாங்கிக் கொள்ளட்டுமே என்று பேசாமல் இருந்துவிட்டேன்.

கடைசியில் ஒரு பழைய புத்தகக் கடையில் பயாக்ரபி ஆஃப் ஃப்ளரென்ஸ் நைட்டிங்கேல் வாங்கிக் கொண்டாள். அப்போதுதான் என் மனத்தாவரம் அதீதமாகவே சிலிர்த்துக் கொண்டது. மூர்மார்க்கெட்டையே வாங்கி ரோஸ்மேரிக்குச் சமர்ப்பித்துவிட என் உணர்வலைகள் மிகையாகவே ஆடின...

''நைட்டிங்கேல் ஒனக்குத் தெரியுமா ரோஸி ?''

''அவளை எனக்கு ரொம்பப் பிடிக்கும் பாஸ்.''

''எதனால ?''

''எனக்கும் ஃப்ளரென்ஸ் நைட்டிங்கேல் மாதிரி புவர் பிப்பிளுக்கு சர்வீஸ் பண்ணணும் பாஸ். நரஸிங் படிக்கணும்னு ஆசைப்பட்டேன், முடியாம போயிடுச்சி !''

''இப்ப படி...''

''இனிமே முடியாது பாஸ்...''

''நான் உன்னைப் புடிக்க வைக்கிறேன் ரோஸி.''

''வேணாம் பாஸ். இப்பவே நான் ஸீலியாவுக்குத் தவுஸன் ருபீஸ் குடுக்கணும் !''

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ஆயிரம் ரூபாயா ? எதுக்கும்மா ?''

''டாடியோட பணமெல்லாம் செலவழிச்சாச்சு பாஸ். எல்லாம் காலி. மம்மி லண்டனுக்குப் போயிருச்சி. குன்னூர்ல அங்கிள் வீட்ல மந்த்லி ஏன் சாப்பாட்டுக்கு ஸிக்ஸ் மந்த்ஸா ஸீலிதான் எனக்குப் பணம் அனுப்பிச்சது...''

''சரி, அந்தப் பணத்தையெல்லாம் நீ அவளுக்குத் திருப்பியா கொடுக்கணும் ?''

''ஆமா பாஸ். வேலை கெடைச்சதும் திருப்பிக் குடுத்நுடணும்னு ஸீலி கண்டிச்சு சொல்லிருக்கு...''

ஸீலியாவை ஒரு கணம் வெறுப்புடன் நினைத்தேன்.

''தவுஸன் ருபீஸா ரோஸி ?''

''ஆமா பாஸ்...''

''நாளைக்கே அவ மூஞ்சியில தூக்கி எறியறேன் பார். நீ கவலைப்படாதே...''

சில கணங்களுக்கு மௌனமாக இருந்து விட்டு ரோஸ்மேரி நன்றியுடன் கேட்டாள், ''இதுக்கெல்லாம் உனக்கு நான் என்ன கைம்மாறு செய்றது பாஸ் ?''

''ஒண்ணும் பண்ண வேண்டாம், எனக்கு நீ மகளா இருந்தா போதும்... மிச்சத்தை நான் பார்த்துக்கறேன்...''

''சீக்கிரமா ஒரு ஜாப் வாங்கித் தந்திரு பாஸ்...''

''ரெண்டே நாள் பொறுத்துக்க, வேலை உன் வீடு தேடி வரும். ஆனா நீ வேலை பார்த்துத்தான் சாப்பிடணும்னு நெனைச்சுக்காதே. சும்மா பொழுது போறதுக்காகப் போ... என்ன ?''

''சரி பாஸ்...''

மறுநாள் ஆபீசுக்குப் போனதும் சுகந்தாவுக்குப் போன் செய்தேன்.

''என்னம்மா, டெய்லி போன் பண்ணிக் கேட்டுட்டே இருந்தியாமே... ?''

''மார்னிங் வந்தேளா ?''

''ஆமா. சௌக்கியமா ?''

''ஓயெஸ்... நீங்க ?''

''நல்ல சௌக்கியம்...''

''தமிழரசி ?''

''அவளுக்கென்ன, ஜம்னு இருக்கா. மேலக்காடு மாடசாமி ஒன்னை ரொம்பக் கேட்டார் !''

''வேற எங்கேல்லாம் போயிருந்தேள் ?''

''தேக்கடி ஒரு நாள். கொடைக்கானல் ஒருநாள்... வேற எங்கேயும் போகலை...''

''ராம்ஜி, சௌகார்பேட்ல எனக்கொரு ஃப்ரெண்ட் இருக்கா. அவளுக்கு உங்களை நன்னா தெரியும்... நேத்திக்கு ஈவினிங் உங்களை மூர்மார்க்கெட்ல ஒரு ஃபாரின் கேர்ள் கூடப் பார்த்தேன்னு சொன்னா ! எனக்கு ஒரே ஆச்சரியம். இன்னும் நீங்க ஊர்ல இருந்து வரலைன்னு சொன்னேன். அவளுக்கும் ஒரே ஆச்சரியம் ! அந்த ஆள் அசல் உங்களைப் போலவே இருந்தானாம் !''

''உன் ஃப்ரெண்ட் யாரைப் பார்த்தாளோ ! நான் இன்னிக்கு மார்னிங் தான் ஊர்லே இருந்தே வரேன்...!''

''நேத்திக்கு எனக்கே ஒரு மாதிரியாயிடுத்து. நைட்டெல்லாம் சரியாகவே தூங்கலை...''

''உன்கிட்ட போய் இந்தச் சின்ன விஷயத்ல பொய் சொல்வேனா டார்லிங் ?''

''அப்போ ஈவினிங் பார்க்கலாம் ராம்ஜி...''

''ஓயெஸ்...''

என் மார்பில் நிறைய வியர்வை கசிந்திருந்தது ! அப்பா, தப்பித்தேன்.

வழக்கம் போல மாலையில் மெரீனாவில் அமர்ந்திருந்தோம்.

''சரி, நான் கேட்டதைக் கொண்டு வந்திருக்கேளா?''

''என்னது...?''

சட்டென சுகந்தாவின் முகத்தில் எரிச்சல் வந்தது.

''பேசாம எனக்கு எழுந்து போயிடலாம் போல இருக்கு!'' என்றாள்.

சுகந்தாவின் இந்தச் சொல் என் அகங்காரத்தை முள் போலத் தைத்தது.

''ரொம்பத்தான் அலட்டிக்காதே...! எங்க தமிழரசி போட்டோ தானே கேட்டே... ஸாரி, கொண்டு வர மறந்துட்டேன்!''

சுகந்தா சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். நான் சிகரெட் புகைத்தபடி உட்கார்ந்திருந்தேன்.

''ஒங்க தங்கையோட மேரேஜ் ஒண்ணும் இன்னும் முடிவாகலையா?''—எங்கேயோ பார்த்தபடி கேட்டாள்.

''இல்லை...''

''ஏன், என்ன ப்ராப்ளம்?''

''அடுப்புக்கரி மாதிரி இருக்காளே! அதான் ப்ராப்ளம். வேற என்ன? உங்க வீட்ல என்ன ஆச்சு—கௌசல்யா கல்யாணம் ஏதாவது தெரியுதா?''

''பார்த்திண்டிருக்கா...''

வெகு நேரத்துக்கு இருவரும் மௌனமாகவே இருந்தோம்.

''சுகந்தா, நாம ஒரு காரியம் பண்ணலாமா?''

பதில் சொல்லாமல் என்னைப் பார்த்தாள்.

''ஒங்க கௌசல்யா; எங்க தமிழரசி—ரெண்டு பேருக்கும் கல்யாணம் நடந்தா நடக்கட்டும்; இல்லே, நடக்கா

மலே போகட்டும்! பேசாமே நாம ரெண்டு பேரும் பண்ணிக்க வேண்டியது தான். என்ன சொல்றே?''

சுகந்தா ஒன்றும் சொல்லாமலே இருந்தாள்.

''சொல்லு சுகந்தா. ரிஜிஸ்தர் மேரேஜ் பண்ணிப் போமா?''

''ஸாரி ராம்ஜி. சட்டுனு என்னால இதுக்குப் பதில் சொல்ல முடியாது. நன்னா யோசிக்க வேண்டிய விஷயம் இது... !''

''இதுல யோசிக்கறதுக்கு என்ன இருக்கு?''

''எனக்கு இருக்கே!''

எனக்கு எரிச்சலாக இருந்தது.

''வாழ்க்கை பூரா யோசிச்சிட்டே இருக்க வேண்டியது தான்!''

சுகந்தாவின் முகபாவனை நான் சிறிதும் எதிர்பாராமல் சிவந்து இறுகியது: ''ஆமா, ஒரு தடவைக்குப் பல தடவை நான் நன்னா யோசிச்சுத்தான் பார்க்கணும்! நேருக்கு நேரா மூர்மார்க்கெட்ல ஒரு ஃபாரின் கேர்ள் கூடப் போறதைப் பார்த்திட்டே கேக்கறச்சே, வாய் கூசாமே இன்னிக்கித்தான் ஊர்ல இருந்து வந்ததா பொய் பேசற வரைக் கல்யாணம் பண்ணிக்கிறதா, வேண்டாமான்னு ஒருத்தி யோசிக்கப்படாதோ?''

சவுக்கால் தாக்கியது போலிருந்தது எனக்கு! கையும் களவுமாக அவளிடம் மாட்டிக் கொண்டது அவமானமாக இல்லை, பெரும் கேரபமாக இருந்தது. ஆனால் அந்த நிமிஷமே ஜாமீனில் வெளியில் வந்துவிட உதவுவது போல ஒரு தந்திரம் என் அறிவில் பளிச்சென்று மின்னியது!

''சுகந்தா, நீ ரொம்ப கெட்டிக்காரின்னு நெனைப்பு ஒனக்கு! நேருக்கு நேரா மூர்மார்க்கெட்ல பார்த்திட்டு நீ மட்டும் பார்க்காத மாதிரி போயிடுவே! அந்த மாதிரி

போனதும் இல்லாமே பெரிய ட்ராமா வேற ஆக்ட் பண்ணுவே! நாங்க மட்டும் உன்கிட்டே ஆக்ட் பண்ணக் கூடாது, பொய் சொல்லிடக் கூடாது! ஒனக்கு ஒரு சட்டம், எனக்கொரு சட்டம்... !''

—இதை சுகந்தா எதிர்பார்க்கவே இல்லை! அவள் கண்கள் கலங்கிச் சிவந்தன.

''அழு அழு. நல்லா அழு! நீ ரொம்ப ஆனஸ்ட்டான பொம்பளையா இருந்தா மூர்மாக்கெட்ல என்னைப் பார்த் ததுமே 'ஊர்ல இருந்து எப்ப வந்தீங்க'ன்னு கேட்டிருக் கணும்...''

''உங்ககூட வேற ஒரு கேர்ள் வரச்சே எப்படி நான் வந்து உங்ககிட்டே பேசறது?'' — சுகந்தாவின் குரலில் அழுகை தழும்பியது.

''எவ என்கூட வந்தா ஒனக்கென்ன. நான் ஒன்னோட ஆள்! ஒ ன் னோ ட மேன்! எதுக்கு ஒனக்கு இந்த காம்ப்ளெக்ஸ் எல்லாம்?''

சுகந்தா உடைந்தே விட்டாள். நான் நீண்ட நேரம் குறுக்கிடவே இல்லை. உடைந்து நொறுங்கட்டும் என்ற ஒரு வன்மத்துடன் அவளின் கண்ணீரைப் பார்த்துக் கொண்டே பேசாமல் இருந்தேன். ஓடுகிற பஸ்ஸில் முதல் முதலாகப் பார்த்து வியந்து போனேனே— அந்த நவநாகரிக யுவதி சர்வ சாதாரண பெண் பிள்ளையாக மகிமை இழந்து போய் என் எதிரில் கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தது துயரமாகவும் இருந்தது, சந்தோஷமாகவும் இருந்தது. இப்படி அவளைக் கண்ணீர் வழிய விட்டதுதான் என்னுடைய மகிமையாகவும் தெரிந்து கொஞ்சம் எனக்குச் செருக்காகவும் இருந்தது.

நெடுநேரம் கழித்துக் கேட்டேன்: ''அழுது முடிச்சாச்சா, கண்ணையெல்லாம் தொடச்சு விடட்டுமா?''

எங்கள் உறவின் காதல்புறம் இயங்கத் தொடங்கியது!

''எனக்குத் தெரியும்— தொடச்சிக்க !''

''சரி, நீ எங்கே அந்த நேரத்ல— அதுவும் ஆபீஸ் அவர்ல மூர்மார்க்கெட் பக்கம் வந்தே ?''

''எதுக்கோ வந்தேன் !''

''நீ மட்டும் ஒண்டியாத்தான் வந்தியா, இல்லே யார் கூடேயாது வந்தியா ?''

''யார்கூடவோ வந்தேன் !''

''பாய் ஃப்ரெண்டோடயா ?''

''இல்லே, என்னோட பாய் ஃப்ரெண்டைப் பார்க்கறதுக்கு !''

சுகந்தாவின் காதல் மகிமை பரிமளிக்கத் துவங்கியது !

''அந்தப் பொண்ணு யாரு, பட்டுத் தலையணை மாதிரி இருந்தா ?''

''நெஜமாவே ஓங்கப்பா மேல சத்தியமா, ஓங்கம்மா மேல சத்தியமா— அவ எனக்கு டாட்டர் தான். நானே ஒரு நாள் அழைச்சிட்டு வந்து ஒனக்கு இண்ட்ரட்யூஸ் பண்ணி வைக்கிறேன்...''

''எனக்கொண்ணும் இண்ட்ரட்யூஸ் பண்ணி வைக்க வேண்டாம் !''

''பொறாமையா ?''

''சரி, நான் கேட்டது கொண்டு வந்தேளா ?''

''என்னது... ?''

''தமிழரசி போட்டோ...''

'நறுக்'கென்று என் தலையில் குட்டு வைக்கலாம் போலிருந்தது. குட்டிக் கொண்டேன்.

''சே ! மறந்து மறந்து போயிடுதும்மா !''

''அதெப்படி மறந்து போயிடும் ?''

''மறந்து போச்சே !''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. இன்னைக்கு எனக்கு ஒங்க தங்கையோட போட்டோ வேணும்...''

''போட்டோதான் வாங்கிட்டு வரலையே— அப்புறம் எப்படி இன்னிக்கே தர முடியும் ?''

''தந்தே ஆகணும் !''

''அப்படியா... சரி... போட்டோ ஸ்டுடியோ வச்சிருக்கிறவன் எத்தனையோ பேர் எனக்கு ஃப்ரெண்டா இருக்கான். ஒரு சின்னப் பொண்ணோட போட்டோ ஒண்ணு குடுங்கடான்னு கேட்டா உடனே தரப்போறான் ! இம்மீடியட்டா அதை உன்கிட்டே குடுத்து இதான் எங்க தமிழரசின்னு சொன்னா பேசாம நம்பிடப்போறே ! இது ஒரு பெரிய கஷ்டமான காரியமா ?''

சுகந்தாவுக்கு உடனே ஒரு பொய்க் கோபம் வந்து விட்டது !

''இன்னமே உங்ககிட்டே தமிழரசி போட்டோ தாங்கோன்னு நான் கேக்கப் போறதும் இல்லே, நீங்க காட்டினாலும், நான் பார்க்கப் போறதும் இல்லே...!''

''ஆளை விடு !''

இதெல்லாம் வேடிக்கை போலத்தான் நிகழ்ந்தன. ஆனால், இறுதியில் எனக்கும் சுகந்தாவுக்கும் காதல் முறிவு நேரிட்ட பின் தான் தெரிந்தது ஒவ்வொரு வேடிக்கையுமே ஒவ்வொரு வினையாக சுகந்தாவின் அறிவில் புழுவாக நெளிந்து கொண்டிருந்தது என்று !

என் தங்கை தமிழரசியின் போட்டோவை இனி என்னிடம் கேக்கவே போவதில்லையென்றும், அவளுடைய போட்டோவை நான் காட்டினால் கூடப் பார்க்கவே போவதில்லையென்றும் சுகந்தா கோபித்துக் கொண்ட அன்று நேரே ரோஸ்மேரியைப் பார்ப்பதற்காக நான் செயின்ட் தாமஸ் மவுண்ட் புறப்பட்டுச் சென்றபோது நிறைய இசைத்தட்டுக்களை எடுத்துச் சென்றேன்.

இருளில் வெளித் தோட்டத்து மரக் கதவை நெருங்கிய போதே வீட்டுக்குள் ஏதோ அசாதாரணம் தெரிந்தது.

ரோஸ்மேரியின் அறையில் மட்டும் விளக்கு எரிந்தது. வீட்டுக்குக்குள்ளிருந்து விநோதத் தொனியில் ஒரு அழுகைக் குரல் கேட்டது.

வேகமாக ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். அறை யின் மூளையில் சுவர் ஓரமாக ரோஸ்மேரி உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தாள்.

''ரோஸி... ரோஸி... ரோஸி ...''

தொடர்ந்து பல நிமிடங்கள் நான் அழைத்த பின் தான் என் குரலை அவள் உணர்ந்தாள். ஜன்னலில் கிடந்த வீட்டுச் சாவியை எடுத்து ஓடி வந்து கதவைத் திறந்தாள். அவளுடைய முகம், உடல் பூராவும் வியர்த்திருந்தது. இசைத்தட்டுக்களை மேஜையில் எறிந்துவிட்டு ரோஸ்மேரி யின், கைகளைக் கவலையுடன் பிடித்துக் கொண்டேன்...

''ரோஸி, ஸீலியா எங்கே? ஏன் இப்படி உக்காந்து அழுதிட்டு இருந்தே ? ஆண்ட்டி எங்கே ?''

''ஸீலி வெளியில போச்சு, இன்னும் வரலை. ''

''ஆண்ட்டி... ''

''நான் தூங்கிட்டிருந்தேன் பாஸ். அது வர்க் முடிச்சிக் கதவைப் பூட்டி கீயை விண்டோ வழியா போட்டுட்டுப் போயிடுச்சி...''

''சரி, அதுக்கு ஏன் நீ இப்படி மூலையில உக்காந்து அழுதிட்டிருந்தே ?''

''முழிச்சிப் பார்த்தேன், யாருமில்லை. பயமா இருந் துச்சி பாஸ்... நான் தனியா இருக்கமாட்டேன் பாஸ். தனியா இருந்தா...''

—தொடர்ந்து சொல்லத் தயங்கிய ரோஸ்மேரியின் கண்களில் மறுபடியும் பயம் வந்ததைக் கவனித்துவிட்டேன்.

''வேணாம் வேணாம்... நீ சொல்ல வேண்டாம்மா... நீ சொல்ல வேண்டாம். புரியுது எனக்கு... என்ன ப்ராப்ளம்னு...? போ, போய் முகத்தையெல்லாம் நல்லா

கழுவித் தொடச்சிட்டு வா... நெறைய ரெக்கார்ட்ஸ் கொண்டு வந்திருக்கேன் கேக்கலாம். ''

ரோஸ்மேரி முகம் கழுவிவிட்டு ஒரு நிமிஷத்தில் ஓடி வந்தாள்.

''எப்ப இருந்து இந்த ப்ராப்ளம் ஒனக்கு ரோஸி ?''

''த்ரீ இயர்ஸாத்தான் பாஸ். நான் சின்ன புள்ளையா இருந்தப்ப இது மாதிரி யெல்லாம் வந்ததேயில்லை .''

''இப்ப மட்டும் நீ பெரிய பொண்ணாக்கும், ஏம்மா ?''

ரோஸ்மேரி சந்தோஷத்துடன் நகம் கடித்தாள்.

''பெரிய பெண்தான்'' என்றாள்.

''பெரிய பெண்தான் ஸ்டிக்கரும் கலர் பென்சிலும் வாங்குமோ ?''

''வாங்காதா அப்படின்னா ?''

''ஒன்னை மாதிரி சின்னக் கண்ணம்மாதான் வாங்கும் அதெல்லாம் !''

''நானா சின்னக் கண்ணம்மா ?''

''யெஸ்.''

''அப்படின்னா பெரிய கண்ணம்மா யார் ?''

''எங்க சுகந்தா !''

''உன் வுட்பியா ?''

''யெஸ் ...''

ரோஸ்மேரி என் தோளைப் பற்றிக் கொண்டாள்.

''பாஸ்... உன் வுட்பியைப் பார்க்க ஆசையா இருக்கு !'' என்றாள்.

''ஆனா அவளுக்கு ஒன்னைப் பார்க்கறதுக்கு ஆசையே இல்லையே கண்ணம்மா !''

"ஏன் ஆசை இல்லை? நான் அழகா இல்லையா ?"

"நீ அழகா இருக்கறதாலதான் அவனுக்கு ஒன்னைப் பார்க்கறதுக்கு ஆசை இல்லை!"

ரோஸ்மேரிக்கு இதன் பொருள் தெரியவில்லை.

"ஒன்னை ஒரு நாள் டாக்டர் சாரதாமேனன்கிட்ட கூட்டிட்டு போகப் போறேன் ... மாட்டேன்னு சொல்லாம வரணும், தெரியுதா ?"

"வேணாம் பாஸ்... எனக்கு டாக்டர்னு சொன்னாலே பயம் வந்திடும்..."

"அப்படியெல்லாம் பயப்படக் கூடாது. அந்த டாக்டரம்மா ஒண்ணுமே சொல்லமாட்டாங்க... ரொம்ப நல்லவங்க அவங்க!"

"நீயும் அப்ப என் பக்கத்லயே இருக்கணும்."

"கண்டிப்பா இருப்பேன்."

"அப்படின்னா வருவேன்."

"வெரிகுட்... குட் கேர்ள்... இந்தா, இதைப்போடு ..."

"யார் இவன்... ட்வோரக் ?"

"ஐ திங்க் இஸ் ஏ பொஹிமியன். அவனோட ந்யூ வர்ல்ட் சிம்ப்பனி இது. இந்த சிம்ப்பனியில் ஒரு டைப் ஆஃப் செக்கோஸ்லோவக்கியாவோட ஃபோக் ஸ்பிரிட் இருக்குன்னு நெனைக்கிறேன். ரோஸி, நீயும் நானும் சேர்ந்து ஒரு தடவை வியன்னா போயிட்டு வரலாமா ?"

"நீ எந்த ப்ளேஸ் சொன்னாலும் நான் வரேன்."

ரோஸி இசைத்தட்டைச் சுழலவிட்டு என்னை நெருக்கி உட்கார்ந்து கொண்டாள். இசை ஒலிக்கத் துவங்கியது. நீக்ரோக்களின் - கானம் அமெரிக்க தேசத்து இசைக்களங்களின் நவீனப்படாத காலத்துக்கும் முன்பாகவே ஓர்

உன்னத சுருதியை இந்த ந்யூ வர்ல்ட் சிம்ப்பனியின் மூலம் முடுக்கிவிட்ட அந்த இசைமேதை ட்வோரக்கின் வாழ்க்கை அனுபவங்கள் சில என் நினைப்பில் ஆடின.

''அன்னிக்கு நான் சொன்னேனே— ஒன்னை நர்ஸிங் கோர்ஸ்ல சேத்துப் படிக்க வைக்கிறதா... படிக்கிறியா ?''

''வேணாம் பாஸ்... ''

''ஏன் வேணாம் ?''

''ஸ்கூல் ஃபைனல் முடிச்சி த்ரீ இயர்ஸ் ஆயிடிச்சி ! இனிமே போய் எப்படி பாஸ் மறுபடியும் படிக்க முடியும் ?''

''மனசு வச்சா முடியும் சின்ன கண்ணம்மா !''

''மனசு வச்சாலும் என்னால முடியாது. ''

''குதிரை முட்டை ! ஏன் முடியாது ? அதோ பார், அந்த அலாரக் கடிகாரத்ல ரேடியம் இருக்கு பார்த்தியா ? அதை யார் கண்டுபிடிச்சது தெரியுமா ? மேடம் க்யூரி. யார் சொல்லு ?'' ரோஸி மௌனமாக அமர்ந்திருந்தாள்.

''மேடம் க்யூரி. ஏழைப் பெண்ணான அந்த மேடம் க்யூரி, காதல் தோல்வில மனம் தளறாம இருபத்திநாலு வயசுக்கப்புறம் காலேஜ்ல சேர்ந்து படிக்க ஆரம்பிச்சா. படிச்சு பின்னாடி அவ எவ்வளவு பெரிய மனுஷியா ஆனாள்னு தெரியுமா ! ஒரு தடவை இல்லை ; ரெண்டு தடவை அவ நோபிள் பரிசு வாங்கியிருக்கா ! எதுக்காக இதைச் சொல்றேன்னா, படிக்கிறதுக்கு மட்டும் வயசே கெடையாது... அதான்...''

''எனக்குத் தூக்கம் வருது''— ரோஸ்மேரி சிணுங்கினாள்.

''தூக்கம் வந்தா தூங்கு...''

''நீ எந்திரிச்சி போயிடக்கூடாது.''

''இல்ல இல்ல. நீ தூங்கு.''

''தாங்க்ஸ்.''

ரோஸ்மேரி குப்புறப் படுத்துக் கொண்டாள்.

''குட் நைட் !''

''குட் நைட்...''

சில நிமிஷங்களில் ரோஸ்மேரி தூங்கிவிட்டாள். தூங்கும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு புஷ்டியான பறவை போலத்தான் அவள் தெரிந்தாள். மிகச் சில நாட்களாக மட்டுமே பரிச்சயமாகி இருக்கும் ஒரு ஆடவனின் அருகில் சுதந்திரமாகத் தூங்க முடிந்திருக்கும் அந்த பெண் குழந்தை நிச்சயமாகப் பவித்திரமானவள் தான். ஸீலியா நினைத்துக் கொண்டிருக்கும் மனவளர்ச்சியின்மை இல்லை. அந்த அறியாமை. அதனால் ரோஸ்மேரியை மனத்தத்துவ மேதையிடம் அழைத்துப் போகச் செய்திருந்த என் முடிவை மாற்றிக் கொண்டேன்.

அவளின் தூக்கம் கலையாமல் இருக்க இசையை நிறுத்தி விட்டு எழுந்து தோட்டத்தில் போய் நின்றேன். வாசலில் ஸீலியா யாராலோ காரில் கொண்டு வந்து இறக்கிவிடப் பட்டுக் கொண்டிருந்தாள். அவள் இறங்கியதும் கார் புறப் பட்டுச் சென்றது. என்னைப் பார்த்ததும் அவளுக்கு ஒரு சந்தோஷம் வந்ததே— அது எனக்குக் கசப்பாக இருந்தது ! தனக்காக இன்னொருவன் தன் வீட்டு வாசலில் காத்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொள்வதில் ஒரு விபரீத மான பெண்ணுக்குத்தான் எத்தனை ஆணவமான சந்தோஷம் ?

''ரோஸி தூங்கிடுச்சா பாஸ் ?''

''தூங்கியாச்சு''

உள்ளே வந்தோம்.

''யார் கார் அது ?''

''எங்க பாஸ் கார் !''

''பெரிய ஆளாத்தான் பிடிச்சிருக்கே !''

என்னை நெருங்கி வந்து கைகளால் கழுத்தைப் பின்னிக் கொண்டாள்.

''கையை எடு...''

கையை எடுக்க மறுத்தாள்.

''இன்னிக்கி ஒன்னை விடமாட்டேன்'' என்றாள்.

அவளுடைய கைகளில் புதிய பலம் பரவியது. அவளின் வாசனை என் பிடரியை உலுக்குவது போலிருந்தது. உடல் ஒரு வெந்நீர் துறைக்குள் பாய்ந்து கொண்டிருந்தது. திமிறினேன். தப்பிக் கரையேறுகிற அவசரத்தில் ஸீலியாவின் உடலை மறுத்து நெம்பி உதறினேன். ஸீலியா சிலிர்த்துக் கொண்ட பெண் குதிரையாய், கடலாய்ப் பொங்கியபடி மூச்சின் வேகம் அதிகரித்தபடி சிறிது தூரத்தில் நின்றாள். சேற்றில் விழுந்து விடக்கூடாதேயென்ற சிலிர்ப்பில் நான் நின்றேன்.

''ப்ளீஸ் கம்... டேக் மி ப்ளீஸ்...!''

துளித்துளியாக ஸீலியா முன் வாங்கி வந்தாள் !

அங்குலம் அங்குலமாக நான் பின் வாங்கிக் கொண்டிருந்தேன் !

''வா பாஸ்...''

''நோ ஸீலியா... நோ...''

பல கணங்கள் மூச்சு வாங்க என்னைப் பார்த்தபடி சற்றுத் தூரத்தில் நின்று கொண்டே இருந்தவள், ''சீ ! நீ ஒரு ஆண்பிள்ளையா ?'' என்று வெறுப்புடன் கேட்டாள்.

இனி என்னை நோக்கி அவள் நெருங்க மாட்டாள் என்பது தெரிந்தது.

''நீயெல்லாம் ஒரு பொம்பளையா ஸீலியா ?''— நான் திருப்பித் தாக்கினேன்.

''நீ ஆம்பளையா இருந்தா அது தெரிஞ்சு போயிருக்கும் ஒனக்கு !''

எனக்குள் ஆக்ரோஷம் கொந்தளித்தது. ஒரு நிமிஷம் சுகந்தா என் நினைவில் வந்தாள். மிக நெருக்கமான காதலுறவு மலர்ந்து விட்ட பின்னும் இதமான ஒரு முத்தத்துக்குக்கூடச் சம்மதிக்காத அவளின் சன்னமான மறுப்பு ஒரு ஊசிமுனையாக என் உணர்வுகளில் இறங்கியது. என்னையும் அறியாமலேயே நான் சுகந்தாவிடம் அடிமைத் தளையைப் பூட்டிக் கொண்டிருக்கிறேன் !—இதோ, கை எதிரில் வாசனை வலிய வருவதைக்கூட என்னை நிரகரிக்க வைக்கிறாள்—எங்கிருந்தோ சுகந்தா !

சுகந்தாவின் எதிரில் தான் நான் அவளின் மனிதனாக இருக்க வேண்டும். அவளின் மறைவில் நான் நானாக இருந்தால் போதும் ! அதுவே அவளின மனிதனாக என்னை அவள் சமைத்துவிட்டதற்கு அவளை நான் பழிதீர்த்துக் கொள்கிற தத்துவம் ! இந்த தத்துவத்தை ஒரே ஒரு முறை ஸீலியாவுக்குப் படித்துக் காட்டி விட்டால் கூடப் போதும் ! ஒரே ஒரு முறை தான் ! அப்போதுதான் ஸீலியாவும் பாடம் படித்தாற் போலிருக்கும்...என் மனத்தில் இருக்கும் சுகந்தாவுக்கும் பாடம் கற்பித்தது போலிருக்கும் ! ஆக ஒரே கல்லில் இரண்டு மாங்காய், அவ்வளவுதான். கல்லை எறிந்து விட்டேன்...

''ஸீலியா, இதுதான் ஃபர்ஸ்ட் அன்லாஸ்ட். மறுபடியும் இந்த ரிலேஷன்ஷிப் உன் கிட்ட வச்சிப்பேன்னு மட்டும் கனவுலகூட நெனைச்சிடாத... புரியுதா ?''

''பார்க்கலாம் அதைத்தான் !'' என்றாள் செருக்குடன்

''குட் நைட் !''

காலையில் பதினோரு மணி அளவில் ஆபீஸை நோக்கி நடந்த போது, கடைகளில் அன்றைய செய்தி பேப்பர்களில் சென்னையிலிருந்து நேற்று பம்பாய் சென்ற விமானம் விபத்துக்குள்ளாகியிருந்த செய்தி வெளியாகி இருந்தது. அந்தச் செய்தியைக் கவனித்துக் கொண்டே ஆபீஸை அடைந்தபொது ஆபீஸில் எனக்காக சுகந்தா காத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய முகம் இறுகிப் போயிருந்தது. ஒரு விநாடி எனக்குள் சந்தேகம்— சுகந்தா வீட்டை விட்டு ஓடி வந்து விட்டாளா ? இதுவரை அவள் என்னைப் பார்ப்பதற்காக ஆபீசுக்கு வந்ததே இல்லையே...

''என்ன சுகந்தா—திடீர் விஸிட் ? வா. வா, உள்ளே வா...''

எழுந்து என்னுடன் மௌனமாக அறைக்குள் வந்தாள். 'ஸம்திங் ராங்' என்பது தெரிந்தது.

''உக்கார். ஆபீசுக்குப் போகலையா ?''

''ஆபீஸ் இல்லை...''— சுகந்தாவின் குரல் கம்மிப் போயிருந்தது.

''ஏன் இல்லை ?''

வெறுமே அவளின் உதடுகள் துடித்தன.

''ஒங்க மானேஜர் ரெங்கராஜன் ஏதாவது மிஸ்பிஹேவ் பண்ணிட்டானா ?'' 'இல்லை' யென்று தலையை அசைத்து விட்டுச் சொன்னாள் :

''ஹி இஸ் நோ மோர் !''

சட்டென எனக்கு சென்னை-பம்பாய் விமான விபத்து ஞாபகத்தில் வந்தது. சுகந்தாவின் கண்களிலிருந்து சொட்டுச் சொட்டாக நீர்த்துளிகள் உதிர்ந்தன. சிரமப்பட்டு அழுகையை அடக்கிக் கொண்டு கண்களை அவசரமாகத் துடைத்தாள். சில நிமிடங்களுக்கு நான் மௌனமாக இருந்தேன். வருத்தத்தில் சுகந்தா தலை குனிந்திருந்தாள்.

''நல்ல காபி சூடா வாங்கிட்டு வரச் சொல்லட்டுமா ?''
'சரி' என்றாள்.

பணியாளை அழைத்து ஒரு காபி வாங்கி வரச் சொன்னேன்.

''உங்களுக்கு ?''

''வேணாம்மா......நான் இப்பதான் சாப்பிட்டேன்...''

சிறிது நேரம் பேசாமல் இருந்தாள்.

''ரெங்கராஜன் அந்த ப்ளேனில் தான் ஒரு கான்ஃபரன்ஸுக்காக பாம்பே போனார்...''

''ஒனக்கு எப்ப நியூஸ் தெரிஞ்சது ?''

''நைட்...''

''பாவம், அன்லக்கி ஃபெல்லோ, இல்லே ?''

காபி வந்தது.

''ஒங்களுக்குக் கொஞ்சம் வேணுமா ?''

''இல்லம்மா, நீ சாப்பிடு...''

''பரவால்ல— ஒரு வாய் குடியுங்கோ.''

''சரி, ஒனக்காக ?''

''ஸிப் பண்ணியே குடியுங்கோ. ''

நேற்று இரவு இவளை மானசீகமாகப் பழிவாங்க வேண்டுமென்ற உணர்வில் ஸீலியாவுடன் கொண்ட உறவை நினைத்துக் கொண்டே அந்தக் குற்ற உணர்வுடன் காபியை ஒரு வாய் குடித்தேன். முதல் முறையாக அன்று தான் நான் எச்சில் செய்த ஒரு பானத்தை சுகந்தா அருந்தியது !

''சரி, போனா போறான் ! அவனோட விதி முடிஞ்சது. நாம என்ன செய்ய முடியும் அதுக்கு ?''

''எங்கேயாவது வெளியிலே போகலாமா ராம்ஜி ?''

''ஓயெஸ். போகலாமே !''

''மனசே சரியில்லை எனக்கு. ரெண்டு நாள் முன்னாடி கூடக் கேட்டார், நம்ம மேரேஜ் எப்போன்னு... பாவம், நல்ல மனிதர்!''

''சரி, அந்த ஜெண்டில் மேன் ஆத்மா சாந்தி அடையட்டும்! நாம கிளம்பலாமா?''

''எங்கே போறோம்?''

''முதல்ல ட்ரைவ் இன் போகலாம்.''

''இல்லை ராம்ஜி. இன்னிக்குப் பூரா நான் சாப்பிடறதா இல்லை...''

''ரெங்கராஜன் செத்துப் போனதுக்காகவா?''

''யெஸ்...''

நான் எழுந்து கொண்டே சுகந்தாவின் கன்னத்தை அன்புடன் தட்டினேன்... ''நீ உண்மையிலேயே ரொம்பப் பெரிய மனுஷி சுகந்தா...! சரி, வா. காந்தி மண்டபத்ல போய் இன்னிக்கி ரெண்டு பேருமே ஈவினிங் அஞ்சு மணி வரைக்கும் உண்ணாவிரதம் இருப்போம், கமான்...!''

நானும் சுகந்தாவும் அன்று மாலை ஐந்து மணிவரை கிண்டி காந்தி மண்டபத்தில் உண்ணாவிரதத்தோடு, சிறிது நேரம் மௌன விரதமும் இருந்தோம்!

∴

11

ரெங்கராஜனின் திடீர் மரணம் மிக ஆழத்தில் சுகந்தாவின் மனநிலையில் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியிருந்தது. ஏதோவொரு பயம் கலந்த சோகம் அவளுக்குள் கனமாகவே படிந்து விட்டது. மனித வாழ்க்கையே பெரும் வேதனை மிக்கதாக அவளுக்குத் தெரிந்தது. ஒரு ஆன்ம களைப்புக்கு உள்ளாகிப் போய் விட்ட அசாதாரணமான மௌனம் பல சமயங்களில் அவளின் கண்களில் உறைந்து போயிருந்தது. அதிலும் அவள் குடியிருந்த வீட்டின் மாடியில் குடியிருந்தவருடைய பெண் கீதா, ஒரு பையனுடன் சமீபத்தில் ஓடிப்போன போது அந்தக் குடும்பத்தில் எழுந்த மனக் குமுறல்களையும் உணர்ச்சி நெரிசல்களையும் பார்த்து சுகந்தாவுக்கு மிகப் பெரிய மன நடுக்கம் வந்து விட்டது.

''இதோ வீட்ல அவ அம்மா அப்பா படறபாட்டைப் பார்த்து எனக்கு மனசே ஒரு மாதிரி ஆயிடுத்து ராம்ஜி...''

''ரைட் ரைட்... புரியுது எனக்கு. ஒரு நாளைக்கி நாமும் இப்படித்தானே ஒருத்தனோட ஓடிப் போகப் போறோம். நம்ம அம்மா அப்பாவும் இப்படித்தானே அன்னைக்கிக் கஷ்டப்படுவாங்கன்னு நெனைச்சிட்டே, பயம் வந்துட்டது... அதானே?''

''அதுக்காக நான் பயப்படலை ராம்ஜி. என் அக்கா, தங்கையை நெனைச்சாத்தான் மனசை என்னவோ பண்ணுது ...''

''அதுக்கு நாம என்ன பண்ண முடியும். ஒனக்கு ஆட்சேபனை இல்லேன்னா சொல்லு— அவங்களையும் சேத்து இழுத்துட்டு ஓடிடுவோம்...!''

வெகு நாட்கள் கழித்து என் சுகந்தா அன்றைக்கு என்னைக் கிள்ளினாள்.

இந்தப் பெண்மைக்கே உரிய காதல் கிள்ளல் எல்லாம் சரிதான்! தன் பெண் அவயவங்களை ஒரு ஆடவனுடன் பரிவர்த்தனைப் படுத்திக் கொள்கிற இயல்பான அந்தரங்க இம்சையில் சுகந்தா ரகசியமாக உடல் இளைத்துக் கொண்டிருந்தாள் என்பதெல்லாம் இரங்கத்தக்க உண்மைதான்!

ஆனால்...

இந்த 'ஆனால்' தான் நிச்சயமான பாதுகாப்புக்கு உரியதாக சுகந்தாவின் மனத்தில் வரித்து வைத்திருந்தது.

இங்கே ஒரு உண்மையை ஒப்புக் கொள்வதில் எனக்கு வெட்கமில்லை. மாம்பலம் சரோஜினி தெருவில் ஒரு வீட்டின் மாடியிலிருந்த என்னுடைய அறைக்கு நான் எத்தனையோ சந்தர்ப்பங்களில் சுகந்தாவை அழைத்திருக்கிறேன். சென்னையில் அந்தப் பெரிய தனியறைதான் என்னுடைய

வீடு. அது சுகந்தாவால் பார்வையிடப்பட வேண்டுமென்று நான் மிகவும் நியாயமாகவே ஆசைப்பட்டேன்.

வெட்கமே இல்லாமல்தான் இன்றும் இதை சுகந்தாவிடம் கேட்டேன்! அவள்தான் பதிலே சொல்லாமல் வெட்கப்பட்டுக் கொண்டே இருந்தாள். கொஞ்சங்கூடத் தயவு காட்டாமல் என் அறைக்கு வர மறுத்தே விட்டாள்.

''ஒரு சின்ன ஆசையைக் கூட நிறைவேத்தி வைக்கிறத்துக்கு ஒனக்கு இஷ்டமில்லை'' என்றேன்.

''சின்ன ஆசை அப்புறம் பெரிய ஆசைல கொண்டு போய் விட்டுடும்...! வேணவே வேணாம்...!'' என்றாள்.

உண்மையில் அந்த ஏமாற்றத்தை என்னால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. நான் மிகவும் மனம் நொந்து போய் விட்டதை உணர்ந்து எனக்கு ஒரு சலுகை போல ஒரு ஐடியா சொன்னாள் :

''சரி, போனாப் போறது. ரொம்பத்தான் ஆசைப்படறேள்! அதனால ஒரே ஒரு தடவை ஒங்க ரூமுக்கு வரேன். ஆனா தனியா வர வரமாட்டேன். ஜானகியும் நானும் சேந்து வரோம்!''

என்னமோ ஒரு சின்னக் குழந்தையைச் சமாதானம் செய்வது போலத்தான் சமாதானம் செய்தாள். ஆனால் எனக்குத் தான் ஒரே கடுப்பு!

''அப்ப இப்படிச் செய்யலாம் சுகந்தா.''

''எப்படி?''

''வீணா நீ ஏன் சிரமப்படறே. பேசாம ஜானகியை மட்டும் என் ரூமுக்கு அனுப்பு, போதும்!''

கோபத்தில் சுகந்தாவின் முகம் சிவந்து விட்டது : ''ரொம்ப அசிங்கமா பேசறேள் ராம்ஜி! ஜானகி கல்யாணமாகி ஒரு குழந்தைக்குத் தாயானவ!''

''ஸாரி ஸாரி'' யென்று சுகந்தாவிடம் பல தடவை மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன்! கல்யாணம் ஆனவளைக் கூப்பிட்டாலும் தப்பு. கல்யாணம் ஆகாதவளைக் கூப்பிட்டாலும் தப்பு. அப்படியானால் யாரைத்தான் கூப்பிடுவது?

''அப்ப வேற யாரையாவது கூப்பிட வேண்டியதுதான்!''— எரிச்சலுடன் சொன்னேன்.

''அது ஒங்க இஷ்டம்!''

ஆனால், எனக்கு யார்மீதும் இஷ்டம் வரவில்லை! ஒரு சின்ன வைராக்கியம் கூட அன்றைக்கு எனக்குள் வந்து விட்டது. தொட்டால் இனி சுகந்தாவைத்தான் தொடுவது. அவளைத் தவிர வேறு எவளையும் மனத்தால் கூடத் தொடுவதில்லை. இது சத்தியம்!

சுகந்தாவின் உச்சந் தலையில் அடித்து நான் செய்த இந்தச் சத்தியம் பொய்க்கவே இல்லை! அவளைத் தவிர்த்து அதன் பின் எந்தப் பெண்ணையும் நான் என்னுடைய மனத்தால்கூடத் தொடவில்லை. என் சுகந்தாவுக்கு நான் கொடுத்த பெரிய கௌரவம் இதுதான்...

இச்சமயத்தில் என்னுடைய அன்றாட வாழ்க்கையில் ஒரு மாறுதல் வந்தது. அநேகமாக மாதத்தில் பல இரவுகள் நான் செயின்ட் தாமஸ் மவுண்ட்டில் ரோஸ்மேரியின் வீட்டில் அவளைப் பார்க்கச் சென்றேன். இரண்டே நாட்களில் இண்டியில் ரோஸ்மேரிக்கு முந்நூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு பென்சில் ஃபேக்டரியில் வேலை வாங்கித் தந்தேனே, அது கூடப் பெரிய விஷயமில்லை; அவளுக்கு நான் ஒரு சைக்கிள் வாங்கித் தந்ததும் எனக்குப் பெரிய விஷயமில்லை. அவளுக்கு ஒரு கேமி ரிஸ்ட் வாட்ச், அவளுக்கு ஒரு காமிரா, வாரன்ஸ் அண்ட் மேயோவில் அவளுக்கு ஒரு ஸன் க்ளாஸ், அவளுக்கு ஒரு ஆடும் நாற்காலி, அவளுக்கு நெய்ல் பாலிஷ், அவளுக்கு லிப்ஸ்டிக், ஸாக்ஸ், கர்சீப், கோயா ஸோப், ஒடிகோலான், ஷாம்பூ... இப்படி அவள் எது கேட்டாலும் நான் வாங்கி வாங்கித் தந்ததெல்லாம் ரோஸ்மேரிக்கு மிக மிகப் பெரிய

விஷயமாகி விட்டது. அவளுக்கு நான் ஒரு அதிசய உலகத்தையே திறந்து காட்டியிருப்பது போன்ற ஆச்சரியம் ஏற்பட்டு விட்டது. கொஞ்சங்கூடப் பொய்யே இல்லாமல் எனக்கு அவள் புதல்வியாகத்தான் இருந்தாள். ஆனால், அவளுடைய எந்த ஒரு சிறு விருப்பத்துக்கும் மறுப்பே தெரிவிக்காத என் தீவிரமான அன்பு ரோஸ்மேரியின் மிக மென்மையான இருதயத்தை மழையாக நனையச் செய்து விட்டது. மழை பெய்து விட்டால் நல்ல பயிர் விளைந்து விடாதா ? விளைந்து விட்டது. இதோ, அந்தப் படிமம்.

இரவு ஒன்பது மணி இருக்கும். வழக்கம் போல ஸீலியா வீட்டில் இல்லை. நானும் ரோஸியும் பேசிக் கொண்டிருந்தோம்.

''பாஸ், எங்க ஆபீஸ்ல ஒரு அழகான மாமி இருக்கு. அந்த மாமி, எனக்கு அலைஸ்னு பேர் வச்சிருக்கு...''

''ரொம்ப டாப்பாத்தான் பேர் வச்சிருக்கு மாமி. கண்டிப்பா அந்த மாமியும் டாப்பாத்தான் இருப்பா !''

''யூ ஆர் கரெக்ட். அந்த மாமி தினம் ஒரு பேர் வைக்குது எனக்கு...''

''இன்னிக்கி என்ன பேர் வச்சா மாமி ?''

சிறிது யோசித்தாள் ரோஸ்மேரி...

''இன்னிக்கி 'லிட்டில் நெல்'னு கூப்பிட்டா...''

''அடிசக்கை ! கனஜோரா பேர் வைக்கிறாளே மாமி ! அவளைக் கொஞ்சம் நான் பார்த்தா தேவலையே !''

''வரயா எங்க ஆபீஸ்க்கு, அந்த மாமியைக் காட்றேன் !''

''வேணாம் தாயி, வேணாம். ஒரு மாமிகிட்ட நான் படறபாடே தாங்க முடியாம இருக்கு...''

''சுகந்தாவை சொல்றியா ?''

''யெஸ். சுகந்தா ரொம்ப டாப்பா இருப்பா. நீ லிட்டில் நெல்னா, எங்க சுகந்தா க்ரேட் நெல் !''

''லிட்டில் நெல் என்கிறது—தட் ஓல்ட் க்யூரியா ஸிட்டி ஷாப்தானே பாஸ் ?''

''ஞாபகம் இருக்கா ஒனக்கு அந்த ஸ்டோரி ?''

''சின்ன வயசில மம்மி சொல்லிருக்கு. இப்ப மறந்து போச்சு... நீ அந்த ஸ்டோரி சொல்லு பாஸ்...''

''எனக்கு மறந்து போச்சும்மா...''

''அதெல்லாம் முடியாது. இப்ப நீ சொல்லித்தான் ஆவணும்...''

''சொல்லித்தான் ஆகணுமா ? என்ன நீ பெரிய பேஜா ரெல்லாம் பண்ற... நெஜமாவே அந்தக் கதை மறந்து போச்சும்மா...''

''நீ சொன்னாதான்...''

''சொல்லாட்டா என்ன செய்வே ?''

''உன் பேண்ட்டைக் கழட்டி விட்டுடுவேன் !''

''பாத்தியா. ஒங்க அக்கா டைப்ல பேச ஆரம்பிக்கிறே ! இனிமே ஒன்னை இந்த வீட்ல விட்டு வைக்கக் கூடாது. கம்ப்ளீட்டாவே ஒன்னை அவ கெடுத்து அவ மாதிரி ஆக்கிடுவா... ஒன்னை இனிமே ஒரு ஹாஸ்டல்ல சேத்துட்டுத் தான் மறு வேலை.''

ரோஸ்மேரி பயத்துடன் என்னைப் பார்த்து விழித்தாள்.

''ப்ளீஸ் ! என்னை மன்னிச்சிடு பாஸ்...''

''ஒன்னை மன்னிச்சிட்றேன்: ஆனா, நீ ஸீலியா மாதிரில்லாம் பேசக்கூடாது, தெரியுமா ?''

''தெரியுது பாஸ்.''

''சரி, படுத்துத் தூங்கு...''

''தூக்கம் வரல்லியே !''

''அப்ப எந்திரிச்சிப் போய் கழுதை மேய் !''

''நீ மேய் !''

''ரொம்ப கொழுப்பு வச்சிருச்சி ஒனக்கு...''

''தட் ஓல்ட் க்யூரியாஸிட்டி ஷாப் கதை சொல்லு...''

''இரு, இரு. அந்தக் கதை மறந்து போச்சு. ஆனா, அந்தக் கதை பத்தி ஒரு இன்ஸிடெண்ட் சொல்றேன். சொல்லட்டா ?''

''சொல்லு... சொல்லு...''

''முதல்ல அந்த நாவல் இங்லண்ட்ல ஒரு வீக்லியில சீரியஸா பப்ளிஷ் ஆயிட்டிருந்தது.''

''சரி...''

''அந்த நாவலோட லாஸ்ட் சேப்டர் பிரிண்ட் ஆன அந்த இஷ்யூ கப்பல்ல அமெரிக்காவுக்குப் போயிட்டிருக்கு...''

''எனக்கும் ஷிப்ல போகணும் போல இருக்கு. ஒனக்கு ஷிப் பிடிக்குமா பாஸ் ?''

''பிடிக்குமான்னு கேட்டுட்டியே கண்ணம்மா... ! முடிவே இல்லாம ஒரு கப்பல்ல போயிட்டே இருக்கணும்னு எனக்குள்ள ஒரு வெறியே உண்டு ரோஸி...''

''எனக்கு வேற மாதிரி ஆம்பிஷன் பாஸ். நானே ஒரு கப்பலா ஆயிடணும் ! ஜோரா ஓஷன்ல போயிட்டே இருக்கணும்.''

''ஜோர்.''

''நான் கப்பலா மாறிட்டா, நீதான் கப்பல் கேப்டன் !''

நிஜமாகவே கடல் மத்தியில் ஒரு கப்பலின் மேல்தளத்தில் நின்றாற் போலத்தான் இருந்தது எனக்கு. நான் கேப்டன் ! இந்த ரோஸ்மேரி என்ற உயர்ந்த கப்பலுக்கு நான் கேப்டன் !

''சரி, என்னமோ சொல்லிட்டு இருந்தியே...?''

''யெஸ் யெஸ். அந்த நாவலோட லாஸ்ட் சேப்டர் ப்ரின்ட் ஆன அந்த இஷ்யூ, ஷிப்ல ஸ்டேட்ஸ் போயிட்டே இருக்கு இல்லையா ? அந்த ஷிப் ஹார்பர்ல எண்ட்டெர் ஆகப் போகுது. ஹார்பர் போர்ட்ல ஒரே கூட்டம். எக்கச் சக்கமான கூட்டம். அந்த கூட்டத்தைப் பார்த்திட்டு கப்பல்ல வர பெரிய பெரிய மனுஷன் ஒவ்வொருத்தனும் தன்னை ரிஸீவ் பண்றதுக்குத்தான் அத்தினி கூட்டமும் நிக்குதுன்னு நெனைச்சிட்டு மனசுக்குள்ள பெரிசா பெருமைப் பட்டுக்கறாங்க. ஷிப் போர்ட்ல போயி நிக்குது, அவ்வளவு தான். நின்னுட்டிருந்த அத்தினி கூட்டமும் அடிச்சிப்புடுச்சி அந்த வீக்லி மேகஸினை வாங்கறத்துக்குப் போட்டி போட்டுக் கிட்டு ஓடுது. பாவம், கப்பல்ல வந்த பெரிய மனுஷங்கள் லாம் வாய்ல விரலை வச்சிக்கிட்டு திருதிருன்னு முழிக் கிறானுங்க... எப்படி ?''

நான் விவரித்த இந்தச் சம்பவத்தில் ரோஸ்மேரிக்கு எதுவோ தொடர்பாகவில்லை என்பது தெரிந்தது.

''ஆமா, இதை எதுக்கு பாஸ் சொல்றே? இதுல ஒரு ஸ்டோரிகூட இல்லையே ?''

''ஸ்டோரி இல்லையா ? குதிரை முட்டை! அந்த லிட்டில் நெல்லோட ஸ்டோரி அவ்வளவு அருமையான ஸ்டோரி என்கிறதுக்காகத்தான் இதை இவ்வளவு மெனக் கெட்டு சொல்லிக்கிட்டிருக்கேன்... நீ என்னடான்னா இதைப் போய் எதுக்குச் சொல்றேன்னு சுத்த மடச்சி மாதிரி கேக்கறியே...!''

நான் திட்டியது ரோஸ்மேரிக்கு மிகுந்த சந்தோஷத் தைத் தந்தது. அவளின் கண்களில்கூட அந்த சந்தோஷம் புதியதொரு சாயலில் பளபளத்தது.

''என்னை உன்னோட டாட்டர் மாதிரின்னு சொல்றதை இனிமே நிறுத்திடுறியா ?''

''ஏன், என்ன ஆச்சு என் சின்ன கண்ணம்மாவுக்கு ?''

''நான் உனக்கு சின்னக் கண்ணம்மா தானே பாஸ் ?''

''நிச்சயமா !''

''உன் சுகந்தா உனக்குப் பெரிய கண்ணம்மா தானே ?''

''கண்டிப்பா...''

'கண்டிப்பா' என்ற வார்த்தையைச் சொன்ன மறு நிமிஷமே ரோஸ்மேரியின் கண்களில் கண்ட பரவசமும் இன்பமும் அவளின் இருதயத்தை எனக்குச் சூரிய உதயமாகக் காட்டின.

''மை டியர் கேப்டன் !''

ரோஸ்மேரியின் கண்களைச் சந்திக்க இயலாமல் என் கண்கள் தாழ்ந்தன...

''ஐ லவ் யு பாஸ் !''

நான் தலை குனிந்துவிட்டேன்.

''இம்மென்ஸ்லி ஐ லவ் யு கேப்டன்.''

அவமானத்துடன் நான் ரோஸ்மேரியின் வாயை இறுக மூடிவிட்டேன். 'பேச முடியாமல் நீ வாயை மூடலாம்; பேசுவதற்கு எனக்குக் கண்கள் இல்லையா ?' என்பதுபோல், ரோஸ்மேரியின் கண்கள் காதல் கடலுடன் ஜொலித்தன.

ரோஸ்மேரி என்ற கப்பலின் கொடிக் கம்பத்தில் பறந்து விட்ட காதற் பட்டுக் கொடியை இறக்க நான் அவமானத் துடன் பாடுபட்டேன் ! அவளின் காதலை கேட்டுக் கொண் டிருப்பதே என் மகளின் எதிரில் நான் ஆடையில்லாமல் நிற்பதற்கு ஒப்பானதாகப்பட்டது !

''ஏன், என்னை உனக்கு பிடிக்கலையா பாஸ் ?''

''அப்படிச் சொல்வேனா நான் ? சொல்ல முடியுமா என்னால ?''

''தென் வாட் ?''

சின்னக் கண்ணம்மாவின் இந்தக் கேள்விக்கு நான் என்ன பதில் சொல்வேன்? எப்படி மனமாச்சர்யங்களை அவளுக்குக் கொச்சைப்பட்டு விடாமல் விளக்குவேன்? பேசாமலேயே இருந்தேன். அவளின் பொன் வர்ணக் கூந்தலை வருடியபடி அமைதியாகவே அமர்ந்திருந்தேன்.

''உன் சுகந்தாவை மட்டும்தான் லவ் பண்ணுவியா?''

''அப்படித்தான் வெச்சிக்கோயேன்!''

சில நிமிடங்களுக்கு ரோஸ்மேரி அமைதியாக இருந்தாள்.

''அப்ப என்னை மன்னிச்சிடு பாஸ்...''

''நோ நோ. நீதான் என்னை மன்னிச்சிடணும். இது வரைக்கும் நீ கேட்டு நான் ஸாரின்னு எதுக்குமே சொன்னது கிடையாது. அதனால நீதான் இந்த விஷயத்ல என்னை மன்னிக்கணும்...''

ரோஸ்மேரி பதில் சொல்லாமல் இருந்தாள். அவளின் மௌனம் எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

கொஞ்சம் நான் இலகுவானேன். ரோஸ்மேரி எழுந்து உட்கார்ந்தாள். கூந்தலை ஒழுங்கு செய்தாள்.

''டஸின் மேட்டர் பாஸ். என்னை நீ லவ் பண்ணாட்டாலும் பரவாயில்லை. ஆனா நான் உன்னை லவ் பண்ணு வேன்... சரியா?''

இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை.

''உனக்காக— சரி''

''நானும் உனக்காக உன்னை மன்னிக்கிறேன், போதுமா?''

''போதும்.''

''நீ நல்ல பாஸ்.''

''கேப்டன்னு சொல்லு.''

''எங்க டாடிகூட ஆர்மியில கேப்டன்தான் பாஸ்.''

சட்டென என் அறிவில் ஒரு மலர் விழுந்தாற் போலிருந்தது. ஏதோ ஒரு சூட்சும இழையில் மனிதர்கள் சந்திக்கிறார்கள், பிரிகிறார்கள். இவளைச் சந்தித்தது போலவே ஒரு நாள் நான் பிரிந்தும் விடுவேனோ என்ற சந்தேகம் வந்தது. தகப்பன் இல்லாமல்; தாய் இருந்தும் இல்லாமல் அடிப்பட்ட உறவு பலமே அற்றுத் தன்னந் தனியாய் வெறும் அழகான பறவை போல் வாழ்க்கையில் தனிமை கொண்டிருக்கும் ரோஸ்மேரிக்குச் சர்வ பொருத்தமும் உள்ள ஒரு ஆண் துணையை அவளுக்கு நான்தான் தேடி அமைத்துத் தர வேண்டும் என்ற நீதியை எனக்குப் புரிய வைக்கத்தான் என்னை அவள் கேப்டன் என்ற சொந்தம் கொண்டாடியிருக்கிறாள் என்ற தாத்பரியம் புரிந்தது. உண்மையில் நான் காலஞ்சென்ற அவளின் தந்தை கேப்டன் அலெக்ஸாண்டர் சாலமன் அவர்களின் மறு அவதாரம்தான் என ஒரு அதீதத் தன்மையுடன் கற்பிதம் செய்து கொண்டு கருணையுடன் ரோஸ்மேரியின் பனைநுங்கு போன்ற நெற்றியில் ஒரு முத்தமிட்டேன்.

''தாங்க் யூ மை டியர் கேப்டன்!''

12

அன்று தெரு முனையில் திரும்பிய போதே ரோஸ்மேரியின் வீட்டிலிருந்து ப்யானோ ஒலி. பளிங்குத் தரையில் கண்ணாடிக் கோலிகள் உருள்கிற நாதன ஒலியாகக் காற்றில் கலந்து வந்தது. உள்ளே நுழைந்தேன். பெப்பி ஆரோமெல்லோவின் நொட்டேஷன்ஸ் வரையப்பட்ட அட்டவணையை எதிர்படுத்திக் கொண்டு ஸீலியா, ப்யானோ பயின்று கொண்டிருந்தாள்.

''என்ன, இன்னிக்கி நைட் அப்பாயிண்ட்மெண்ட் ஒண்ணும் இல்லையா, அதிசயமா வீட்ல இருக்கே... ?''

''நீ வந்ததும் உன்கிட்டே ஒரு விஷயம் சொல்லிட்டு போகலாம்னு வெயிட் பண்ணிட்டிருக்கேன் பாஸ்...''

''ஏன், ஏதாவது அர்ஜெண்ட்டா பணம் தேவையா இருக்கா ?''

''நோ நோ... உன் சின்னக் கண்ணம்மாவை நீ எப்ப கல்யாணம் செய்துக்கப் போறேனு எனக்குத் தெரியணும்'' —திடீர் தாக்குதல் நடத்தினாள்.

ஸீலியாவின் குரலில் தெரிந்த இகழ்ச்சியில் ஏதோ மர்மம் கவிந்திருந்தது. நான் சிறிது தள்ளி நின்ற ரோஸியைப் பார்த்தேன். அந்த முகத்தில் சிறிய கறை படிந்த ஒரு நாணம் இருந்தது.

பின்னணி போல ப்யானோவை உருட்டிக் கொண்டே ஸீலியா சர்வ அலட்சியமாகச் சொன்ன இந்த விஷயம், முகத்தின் அருகே வெடிகுண்டு வெடித்தாற் போல என்னைத் தாக்கியது.

ஒரு நிமிஷம் ரோஸ்மேரியைப் பார்த்தேன். கால் பெரு விரலால் தரையைக் கீறியபடி எதையோ அம்மாவிடம் கேட்டுக் கொண்டிருக்கிற குழந்தை போல, அப்படியும் இப்படியும் ஆடியபடி நின்றாள்.

''என்ன பாஸ், ஒண்ணுமே சொல்லாம நிக்கறே ?'' —ப்யானோவிலிருந்து எழுந்து ஸீலியா என்னை வந்து தொட்டாள்.

''தொடாத என்னை...'' —கோபத்தில் பல்லைக் கடித்தபடி சொன்னேன். ஸீலியா இன்னமும் அலட்சிய மாகவே பார்த்தாள்— கையை எடுக்காமலே.

''இப்ப கைய்ய எடுக்கறியா இல்லையா ?''

அவள் ஒன்றும் எனக்குப் பயப்படுபவளாகத் தெரிய வில்லை.

''என்னை எதுக்கு இப்ப முறைக்கறே நீ ?''

என் கோபம் சிதறி வெடித்தது.

''எதுக்கு முறைக்கிறேனா ? அவ்வளவு நெஞ்சழுத்தமா ஒனக்கு... பாவி ! அந்தப் பொண்ணு மனசையும் நாசமாக்கத் துணிஞ்சிட்டியா ? அந்த நாச காரியத்தை என்கிட்டேயே வேற நடத்தப் பார்க்கிறியா ? வேணாம் ஸீலியா வேணாம். தயவுசெஞ்சு உன்னோட பொறுக்கித்தனத்தை உன்னோட நிறுத்திக்க ! அநியாயமா அந்தக் கொழந்தையோட மனசைப் பாழாக்கினே— உன்னை நான் கொலை செய்யறதுக்குக் கூட அஞ்ச மாட்டேன். ஜாக்ரதை ! அவளை யார்னு நெனச் சேடி, யார்னு நெனச்சே ?''

''பாஸ்... பார், என்னையெல்லாம் வாடி போடின்னு பேசறதை நிறுத்திக்க ! வாடி போடின்னு பேசறதுக்கு நான் ஒண்ணும் உன் வீட்டு வேலைக்காரி இல்லை... ஆமா...''

''ஒரு விபசாரியா திரியறதுக்கு வேலைக்காரியா வாழ்றது எவ்வளவோ உத்தமம்...''

ஸீலியா கறாரான குரலில் என்னை எச்சரித்தாள் :

''அதிகமாப் பேசாத. வேண்டாம். நான் ரொம்பப் பொல்லாதவ... !''

''பொல்லாதவளா ? நீயா ? இந்த மிரட்டலுக்கெல்லாம் நான் பயந்திடுவேன்னு நெனக்காத. சல்லி சல்லியாக ஒன்னைக் கூறு போட்டுடுவேன் கூறு !''

ஸீலியா கொதித்து விட்டாள்: ''போடா வெளியில ; இம்மீடியட்டா வெளியில போ நீ...''

என் ஆக்ரோஷம் புயல்போல் கிளம்பியது: ''போகாட்டா என்னடி பண்ணுவே ?''

''என்ன பண்ணுவேனா ? மினிஸ்டருக்கு போன் பண்ணுவேண்டா... மினிஸ்டருக்கு போன் பண்ணுவேன். விட்டேனா பார் உன்னை...!''

''எவனுக்கு வேணுமானாலும் போன் பண்ணு ! அதுக்கெல்லாம் பயப்படற ஆள் இல்லை நான்...''

மிக உண்மையாக என்னை எதிர் நோக்க முடியாத பலவீனத்தில் ஸீலியா பாய்ந்து அவளின் கூரிய நகங்களால் என் முகத்தைப் பிராண்டித் தாக்கினாள்.

எனக்குப் பதில் சொல்லும் துடிப்பு அடங்கி விட்டது. அத்தனை உறவையும் பாலுணர்வு மையமாக்கிக் காணும் ஒரு கணிகையிடம் பேசி வென்று விடத் தேவையே இல்லையென்பது தெரிந்தது. என் உறவு ரோஸ்மேரியிடம்தான். என் நோக்கம் அந்தக் குழந்தையின் செம்மையான எதிர் காலம்தான். இந்த நோக்கத்துக்கு மாசு கற்பிக்க மாசு நிறைந்தவர்களுக்கே சாத்தியம்.

என் முகத்தில் துளித்திருந்த ரத்தத் துளிகளைக் கைக் குட்டையால் அவசரப்படாமல் துடைத்தேன். அவள் என்னைத் திட்டும் திட்டுகளையும் என் உணர்வுகளிலிருந்து துடைத்துக் கொண்டே.

''நீ என்ன வேணும்னாலும் திட்டிக்க! அவளுக்காக எந்தத் திட்டையும் வாங்கிப்பேன். என்ன அவமானம் வந்தாலும் தாங்கிப்பேன்...''

—வேகமாக நான் ரோஸ்மேரியின் அறைக்குள் போய் விட்டேன்.

நான் ரோஸியைக் கூப்பிட்டேன். பயந்து கொண்டே வந்தாள்.

''கொஞ்சம் கோகனட் ஆயில் எடுத்திட்டு வாம்மா... மூஞ்சியெல்லாம் எரியுது...''

எடுத்துக் கொண்டு வந்தாள். அப்போது அவள் பின்னால் ஒரு சிறிய பூனைக்குட்டி கத்தியவாறு வந்தது.

''இது ஏதும்மா, புதுசா இருக்கு?''

''பட்ரோட்ல தனியா நின்னுது பாஸ். பாவமா இருந்துச்சி, எடுத்துட்டு வந்துட்டேன்.''

''பால் ஊத்னியா ?''

''ஊத்னேன் பாஸ்...''

''இப்பிடி உட்கார். என் முகத்ல ரத்தம் தெரியற இடத்துலல்லாம் இந்தத் தேங்காயெண்ணெயைத் தடவி விடு, பார்க்கலாம்...''

கவுனைத் தொடையிடுக்கில் செருகிக் கொண்டு கர்ம சிரத்தையாகச் சின்னக் கண்ணம்மா என் ரத்தக் காயங்களில் எண்ணெய் தடவினாள்.

''ரொம்ப எரியுதா ?''

''அநியாயமா எரியுது...''

''ஸீலியாவை மன்னிச்சிரு பாஸ்— அது ரொம்ப லிக்கர் சாப்ட்டுடுச்சி...''

''உண்மையைச் சொல். அவதானே கன்னா பின்னானு ஒனக்கு எதை எதையோ சொல்லிக் குடுத்தா ?''

ரோஸ்மேரி வருத்தத்துடன் தலை அசைத்தாள்.

''என்னை நீ மேரேஜ் பண்ணிக்கிட்டா நிறைய பணம் வரும்னு சொல்லுச்சி.''

''படுபாவி ! அவ விளங்கவே மாட்டா ரோஸி ! என்னிக்காவது இந்த மாதிரி அசிங்கம் பிடிச்சவளுங்க சர்வ நாசமாத் தான் போவாளுங்க. நீ வேணா பார்... பெரிய்ய மினிஸ்டருக்கு போன் பண்ணுவாளாம் ! இவ போன் பண்ற மினிஸ்டர் இவளை மாதிரித்தானே இருப்பான் ! என்கிட்டே ஒரு கேரக்டர் உண்டு. இம்மாரல் பசங்களுக்கு மட்டும் எந்த காலத்திலும் நான் பயப்பட்டது கெடையாது ! அது என்னைப் படைச்ச கடவுளாவே இருந்தாலும் சரி, டோண்ட் கேர் ! அஞ்சவே மாட்டேன். இந்த ஒரு விஷயத்துல மட்டும் நான் என் அப்பாவோட முதல் வாரிசு...!''

''எண்ணெய் தடவியது போதுமா ?''

''போதாதும்மா... காயம் ரொம்ப டீப் !''

''என்னாலதான் பாஸ் உனக்குக் கஷ்டம்...''

''சேச்சே! இதெல்லாம் ஒரு கஷ்டமா? ஆனா, ரோஸி... உன் முகத்துக்காகத்தான் அவளை அப்படியே விட்டுட்டேன். இல்லே, அவளோட ஒடம்பு இன்னிக்கி வெறைச்சிப் போயிருக்கும்...''

''அதையெல்லாம் மறந்திடு பாஸ்...''

''அப்பவே மறந்தாச்சி! ஆனா, ஒண்ணே ஒண்ணை மட்டும் நீ மறந்திடாத. அவகிட்ட நீ கவனமாக இரு. இல்லே, இந்த வீட்டை விட்டு வெளியேறிடு. ஒரு ஆஸ்டல்ல சேந்திடு. இவ எதுக்கும் துணிஞ்சவ. ஒன்னை என்ன வேணும்னாலும் பண்ணிடுவா...''

''பாஸ் நான் ஒண்ணு சொல்லட்டுமா?''

''சொல்லு!''

''நான் ஒனக்கு மட்டும்தானாம்! என்னை நீ மேரேஜ் பண்ணிக்கப் போறியாம்... எல்லார்கிட்டேயும் ஸீலி இப்படித் தான் சொல்லி வச்சிருக்கு...''

''ஓஹோ! இப்படி டீல் பண்றாளா, அவளோட பசங்களை? பரவால்ல. அவனுங்களை நல்லா மிஸ்-லீட் பண்ணி வச்சிருக்கா! அதான் ஒன்னை இங்கே காப்பாத்துது. ஆனா அது வந்து ஒன்னை மிஸ்-லீட் பண்ணிடக்கூடாது... என்ன டார்லிங்?''

''நீ என்ன சொன்னாலும் கேக்கறேன் பாஸ்...''

''கொஞ்ச நாளைக்கு நீ வேலைக்குப் போயிட்டிரு. எப்படியும் இன்னும் ஆறு மாசத்ல நானும் சுகந்தாவும் கல்யாணம் பண்ணிடுவோம். அப்புறம் ஒனக்கும் ஒரு நல்ல பையனா பார்த்து ஆபட்ஸ்பரியில வச்சி உன் கல்யாணத்தையும் நடத்தி, ஜோரா ஹனிமூனுக்கு ஒன்னை உங்க அம்மா இருக்கற லண்டனுக்கே அனுப்பி வைக்கிறேன், போதுமா?''

மழையைக் கண்டதும் விசிறிவாழையாக விரியும் மயில் தோகை போல, ரோஸ்மேரியின் கண்களில் ஆனந்தத் தோகை விரிந்தது.

''நான் என் மம்மியைப் பார்த்து டென் இயர்ஸ் ஆயிடுச்சி பாஸ் !''

''ஏன், என்ன ஆச்சு உங்க மம்மிக்கு ?''— கவனப் பிசகாகக் கேட்டுவிட்டேன்.

''அது வந்து பாஸ்...'' —ரோஸ்மேரியின் முகமும் குரலும் மாறிப் போயின...

''வேணாம்மா... வேணாம்... வேணாம் ! சோகக்கதை களே வேண்டாம் எனக்கு ! ஹார்டெல்லாம் ரொம்ப வீக்காயிடுச்சி...''

அன்று ரோஸ்மேரியின் அறையிலேயே தூங்கிப் போனேன்.

மறு நாள் காலை விடிவதற்கு முன்பாகவே ஸீலியா என்னிடம் வந்து நேற்று இரவு நடந்து கொண்டதற்காக மன்னிப்புக் கேட்டாள். அதற்காக நான் அவளை மன்னித்து விட்டேன். ஆனால், ரோஸ்மேரியின் அறியாமையை என்னை நோக்கித் தவறாகச் செலுத்த அவள் எடுத்த முயற்சிக்கு மட்டும் ஸீலியாவை நான் மன்னிக்க மறுத்தேன். கறை படாத ஒரு சிறுமியின் மனத்தைப் பாழ்படுத்த நினைத் தால் அந்த ஒரு பாவமே ஸீலியாவின் வாழ்க்கையைச் சுட்டுப் பொசுக்கி விடுமென்று அவளை பல முறை எச்சரித் தேன். இது அவளுக்கு மட்டுமல்ல ; எந்தப் பெண்ணையுமே தவறாகச் செலுத்துகிற எவருக்குமே நிர்மூலமே முடிவென்றும் சொல்லி அவளைப் பயமுறுத்தினேன். ஸீலியா பதில் ஏதும் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

மாம்பலம் போய் உடை மாற்றிக் கொண்டு ஆபீஸ் வந்த போது மணி பதினொன்று. என் முகத்திலிருந்த காயங்களை எல்லோரும் கேட்டார்கள். ஒருவரிடம் பூனை பிறாண்டி விட்டது என்றேன். இன்னொருவரிடம் எலி பிறாண்டி

விட்டது என்றேன். ஆனால், யாரும் நான் சொன்னதை நம்பியதாகத் தெரியவில்லை.

''சார், மிஸ் சுகந்தா ரெண்டு தடவை போன் பண்ணி னாங்க.'' – கண்ணன் சொன்னான்.

''எதுவும் சொன்னாங்களா ?''

''வந்ததும் உங்களை ரிங் பண்ணச் சொன்னாங்க...''

உடனே ரிங் பண்ணினேன். வேறு வேலை ?

''குட் மார்னிங் ராம்ஜி...''

''குட் மார்னிங் சுகந்தா. வந்ததும் ரிங் பண்ணச் சொன்னியாம்... எதுவும் விசேஷமா ?''

''ரொம்ப விசேஷம். எங்க கௌசல்யாவுக்கு மேரேஜ் !''

பளீரென ஒரு கதவு என் எதிரில் திறந்து கொண்டாற் போலிருந்தது ! கருமேகங்கள் கலைந்து ஆகாயம் தெரிவது போலிருந்தது. எனக்கும் சுகந்தாவுக்கும் மணமேடைக்கு மணக்கால் ஊன்றி விட்டாற் போலிருந்தது !

என் உணர்வுகளில் நாதஸ்வரம் ஒலித்தது. வாழை மரங்கள் தெரிந்தன. கல்யாணப் பந்தி மணம் வீசியது. தாலி மணிகள் கோத்த பொன்சரடு தொங்கியது. மணக்கும் பட்டுப்புடவையில் என் மனைவியாய் சுகந்தாவின் அழகுருவம் பளிச்சிட்டது. இந்த உணர்வுக் குவிப்பு அனைத்துமே கண்களில் ஆனந்தக் கண்ணீராக அரும்பித் ததும்பியது.

''சந்தோஷம் தானே ராம்ஜி ?''

''சாதாரண சந்தோஷமா ? இங்கே வந்து பார் கண்ணம்மா. கண்ல தண்ணி வந்திடுச்சி... ரொம்ப சந்தோஷம் டார்லிங். ரொம்ப ரொம்ப சந்தோஷம்... கல்யாணத்துக்கு டேட்லெல்லாம் ஃபிக்ஸ் ஆயிடுச்சாம்மா?''

''டேட் இன்னும் ஃபிக்ஸ் ஆகலை. மேரேஜ் அநேகமா செப்டம்பர் மாதம் தான் இருக்கும். ஆனா, நிச்சயதார்த்தம் நெக்ஸ்ட் வீக்...''

''வரதட்சணை எல்லாம் பேசி முடிச்சிட்டாங்களா ?''

''எல்லாம் முடிஞ்சது ராம்ஜி...''

''ஒங்கப்பா போட்டு வச்சிருந்த பட்ஜெட்டுக்குள்ள முடிஞ்சிடுச்சா, மேலே போயிடுச்சா ?''

''ரொம்ப மேலே போயிடுத்து. என்னோட பணம் வேற த்ரீ தவுஸன் தரேன்னு ஒத்துண்டிருக்கேன்...''

''குடு குடு. பாவம், ஒங்கப்பா ! அவரும் எவ்வளவு தான் சமாளிப்பார் ?''

''அப்பாவுக்காக கெடையாது. எங்க கௌஸிக்காக...''

''கௌஸிக்காக எவ்வளவு பணம் வேணும்னாலும் நீ குடு. ஒனக்கு நான் தரேன்... சரி, ஒங்க அக்கா கல்யாணத் துக்கு நான் வரலாமா ?''

''நீங்க வரலாமா ராம்ஜி ? முதல் இன்விடேசன் உங்களுக்குதான் !''

''ரைட் ! அப்ப இன்னிக்கு ஈவினிங் மீட் பண்ணு வோம்.''

''ஓயெஸ்...!''

''வச்சிரட்டுமா ?''

''ஓயெஸ்...!''

ரிஸீவரை வைத்தேன். பெரும் தேக்கம் திறந்து விடப்பட்டு விட்டது. ஒரு இரும்புக் கதவு உடைந்து வீழ்ந்துவிட்டது. இனி தமிழரசியின் திருமணம் என்ற சிறிய கதவுதான். அதுவும் வீழ்ந்துவிட்டால் எங்கள் சாம்ராஜ்யம் தான்; எங்கள் ஆட்சிதான். இருபத்துநான்கு மணி நேரமும் எங்கள் காதல் களியாட்டம்தான்.

''மிஸ்டர் வைத்யலிங்கம்...''—பலத்த குரலில் கூப்பிட்டேன். வந்தார்.

''எனக்கு ஒரு ஐயாயிரம் ரூபாய் பணம் வேணும், இருக்கா ?''

''இருக்கு சார்!''

''புத்தம் புது நோட்டாப் பாத்து எண்ணி எடுத்திட்டு வாங்க...''

''இதோ எடுத்திட்டு வரேன் சார்...''

''ஜல்தி !''

சலவை நோட்டுகளாக வந்த பணத்தை அள்ளி பாக்கெட்டில் திணித்துக் கொண்டு மறு நிமிஷம் ஆபீஸிலிருந்து கிளம்பி விட்டேன்.

சரியாக மாலை ஐந்து மணிக்கு எங்கள் ஆஸ்தான மணல்வெளியில் புதிய ஷர்ட் அணிந்து ஒரு மாறுதலுக்காக 555 சிகரெட் புகைத்தபடி ஒரு புதிய வாழ்க்கையை எதிர் நோக்கும் தன்மையோடு என் வருங்கால மனைவிக்காக —இன்னமும் சிறிது சூடாக இருந்த மண்ணில் அமர்ந்து காத்துக் கொண்டிருந்தேன்.

13

உழைப்பாளர் சிலை அருகே ஆட்டோவை விட்டு இறங்கி மஞ்சள் வெயிலின் மனோரம் மியமான பின்னணியில், கையில் சிறிய பார்சலுடன் ஆபீஸில் பணிபுரிந்து களைத்த தோற்றத்தில் ஒரு ஆயில் பெயிண்ட்டிங் போன்ற சோலையில் சுகந்தா என்னை நோக்கி மிக வேகமாக வந்தாள்.

‘‘யம்மாடி ! ஆட்டோவிலதான் வர்றேன். ஆனா என்னமோ பாரீஸ் கார்னர்ல இருந்தே ஓடி வராப்பல மூச்சு வாங்கறது...’’

‘‘உக்கார் உக்கார். உக்காந்து கொஞ்சம் ரெஸ்ட் எடு...’’

‘‘என்னது ராம்ஜி அது ? புஹாரிஸ் பேக்கரின்னு போட்டிருக்கு. நீங்க வேற ஸ்வீட் வாங்கினேளா ?’’

‘‘போச்சுடா... நீ வேற வாங்கிட்டேயா...?’’

‘‘நான் ஆரிய பவன்ல வாங்கினேன்...’’

‘‘அப்ப ஒண்ணு செய்யலாம். நான் வாங்கிட்டு வந்ததை நீ சாப்பிடு. நீ வாங்கிட்டு வந்ததை நான் சாப்பிடறேன்...’’

‘‘இந்தாங்கோ !’’

‘‘இந்தா...’’

இருவரும் இனிப்புப் பரிமாறிக் கொண்டோம்.

‘‘ஹை ! புது ஷர்ட்டா ராம்ஜி ?’’

‘‘எப்படி இருக்கு— ஒனக்குப் பிடிச்ச ஆலிவ் க்ரீன்...’’

‘‘ஃபைன். நாலு வயது கொறச்சுக் காட்றது !’’

‘‘பட்டுப் புடவை ஒண்ணு வாங்கியிருக்கேன் பார் !’’ —பெட்டியை எடுத்து அவள் முன்னால் போட்டேன்.

‘‘தமிரசிக்கா ?’’

‘‘யெஸ் !’’

அவசரமாகப் பெட்டியைத் திறந்து பார்த்தாள். முந்தானையைப் பிரித்துப் பார்த்தாள். அந்த மயில்கள் அனைத்தும் அவளுடைய கண்களில் பிரதிபலித்தன.

‘‘எப்படி வாத்யாரோட செலக்‌ஷன் ?’’

‘‘கொன்னுட்டேள் ! ஒங்க தங்கை பார்த்தா பிரமிச்சுப் போயிடுவா...!’’

சில நிமிஷங்கள் சுகந்தா புடவையைப் பார்த்து சொக்கிக் கொண்டிருந்த, பெண்ணுக்கே உரிய அழகைக் கண்டபடி உட்கார்ந்திருந்தேன்.

''இப்ப நீ தான் சுகந்தா பிரமிக்கப் போறே !''

''ஒங்க தங்கைக்கும் மேரேஜ் ஃபிக்ஸ் ஆகப் போறதா ?''

''இல்லை.''

''அப்போ ?''

''இந்தப் புடவை ஒனக்குத்தான் ! நீ போன் பண்ணி விஷயத்தைச் சொன்ன உடனே எனக்கு நம்பிக்கை வந் திடுச்சி. இன்னிக்கே நம்ம கல்யாணத்துக்கும் இந்த பீச் லேயே பரிசம் போட்டுடலாம்னு தோணுச்சி ! ஒடனே லஸ் கார்னர் போனேன். கடைக்காரன் மூஞ்சியில பணத்தைத் தூக்கி எறிஞ்சேன் ! அலறி அடிச்சிகிட்டு அவன் இந்த புடவையை பேக் பண்ணிக் குடுத்தான். இதான் ஒனக்கு நான் தர்ற பரிசப் புடவை... எங்க அம்மா ஒனக்கு எடுத்துத் தந்ததா நெனைச்சி மனப்பூர்வமாக வாங்கிக்க...''

சுகந்தா அவளின் கண்களால் நன்றி சொன்னபடி புடவையை வாங்கிக் கொண்டாள்.

''ஆனா ராம்ஜி, இதை எங்காத்துக்கு என்னால எடுத் திட்டுப் போக முடியாது. அதனால இதை நான் ஜானகி கிட்ட குடுத்து அவ வீட்ல வச்சிருக்கச் சொல்றேன். என்னிக் காவது ஒரு நல்ல பிக்சருக்கு டிக்கெட் ரிசர்வ் பண்ணி வையுங்கோ, அன்னிக்கு இதை உங்களுக்காகக் கட்டிண்டு வரேன்... சரியா ?''

''ரொம்ப சரி. ஆனா, ஒரு கண்டிஷன் ! ஆசையா இருக்குன்னு சொல்லி ஜானகி இந்தப் புடவையைக் கட்டிக் கிட்டிப் பார்த்தா... அவ்வளவுதான் !''

''அதெல்லாம் கட்டமாட்டா பயப்படாதீங்கோ...''

''அப்படி ! ஒருவழியா ஒங்க கௌசல்யாவுக்கு ஃபிக்ஸ் ஆயிடுச்சி ! இனி எங்க தமிழரசிதான் ! அதுவும் முடிஞ்சிடுச்சின்னா க்ளோஸ் ! உலகத்திலேயே அப்புறம் நம்ம கல்யாணம்தான். நம்ம கல்யாணத்துக்கு அப்புறம் உலகத்துல வேற எவனுக்கும் கல்யாணம் கெடையாது. எப்படி ?''

''சமர்த்துதான்...''

''அதுவும் உலகத்துல எவனும் செய்யாத ஸ்டைல்ல —பீச்லதான் நம்ம கல்யாணம் !''

''எப்படி வேணா ஏற்பாடு பண்ணுங்கோ... உங்க இஷ்டம்...''

''சரி... நம்ம சகலை எந்த ஊர்ல இருக்கார் ? என்ன பண்றார் ?''

சுகந்தா லேசாகக் கிள்ளிவிட்டுச் சொன்னாள் : ''அதுக்குள்ள சொந்தம் கொண்டாடியாறது ! இங்கதான் வெஸ்ட் மாம்பலத்துல இருக்கா. அவர் இங்கே தான் ப்ராவிடண்ட் ஃபண்ட் ஆபீஸ்ல ஒர்க் பண்றார்...''

''கடைசியில ஆள் எங்கே இருந்திருக்கான்னு பார்... இதுக்குப் போய் ஊரெல்லாம் அலைஞ்சி, ஆயிரத்தெட்டு ஜாதகம் பார்த்து, மேலேயும் கீழேயும் யோசிச்சி... எவ்ளோ டயம் வேஸ்ட் ! ஒருத்தன் ஒருத்தியைப் பார்த்தானா ; ஒருத்தருக்கொருத்தர் பிடிச்சிப் போச்சா, கல்யாணத்தைப் பண்ணிட்டு போயிட்டே இருக்கணும்... குறுக்கே எதுவும் இருக்கக்கூடாது. என்ன சொல்றே ?''

''ஒப்புக்றேன் !''

''நம்ம பசங்களையெல்லாம் பொறந்தவுடனே அவுத்து விட்டுடுவேன் ! 'எங்க வேணாலும் போங்கடா ! என்ன வேணாலும் பண்ணுங்கடா'ன்னு ஜாலியா விட்டுடுவேன்...! கெடைச்சது ஒரே ஒரு லைஃப்— சாவறத்துக்குள்ள அத்தினியும் அனுபவிச்சிடணும்... என்ன சொல்ற ?''

''சரி. இதென்ன சிகரெட், புதுசா இருக்கு ?''

''ட்ரிபிள் ஃபைவ் ! என்னை மாதிரி பெரிய மனுஷங்க குடிக்கிறது !''

''சரி. அதெல்லாம் இருக்கட்டும் ராம்ஜி. இப்போ சீரியஸா நான் சில விஷயங்கள் பேசப் போறேன்...''

''சிகரெட்டை அணைச்சிரட்டுமா ?''

''அதுபாட்டுக்கு அது பொகையட்டும் ! நீங்களும் கொஞ்சம் சீரியஸா பேசணும். அதுக்குத்தான் சொல்றேன்...''

''என்ன விஷயம், சொல்லு ?''

''அன்னிக்கு மூர்மார்க்கெட்ல அழைச்சிட்டு வந்தேளே அவ யாரு ?''

''சத்தியமா, எங்கம்மா மேல் ஆணையா— அவ என்னோட டாட்டர் மாதிரி... அந்த பெண்ணோட ஒடம்புக்கு மட்டும்தான் இருபது வயசு ! மனசுக்கு அதுல ஸைபரை அடிச்சிடு ! வெறும் ரெண்டு வயசு ! ஒலகமே தெரியாது அதுக்கு. கொஞ்சம் ஃபூல் ! கொஞ்சம் இன்னஸெண்ட் ! கொஞ்சம் ஏஞ்சல் ! நாம மேரேஜ் பண்ணிட்டதும் அது நம்மக்கூடத்தான் வந்து இருக்கப் போகுது. அப்ப நீயே அவளை உன் மகள்னு சொல்லப் போறியா இல்லையான்னு பார்...''

சுகந்தா மிகுந்த உணர்ச்சிவசப்பட்டாள். பல நிமிஷங்களுக்கு உதட்டைக் கடித்தபடி உட்கார்ந்திருந்தாள். சிறிது நேரம் கை நகங்களையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அவளையும் என்னையும் தப்பா நெனைச்சியா ?''

''சேச்சே !''

''அப்புறம் என்ன ?''

சுகந்தா மௌனமாக இருந்தாள்.

''எது உன் மனதில் இருந்தாலும்— சொல்லிடு சுகந்தா...''

''ராம்ஜி, நீங்க வந்து...'' — தயங்கினாள்.

''சொல்லு.''

''என் ஒருத்திக்குத்தான் சொந்தம்... !''

''ப்பூ, இதைச் சொல்றதுக்குத்தானா இந்தத் தயக்கம் ? குதிரை முட்டை ! எனக்கு ஒன்னை விட்டா வேற யார் இருக்கா— சொல்லு ? ஏன் வீணா இப்படியெல்லாம் பயப் படறே ?''

''பயப்படத்தான் செய்றேன் ராம்ஜி ! அதுக்குக் காரணம்— நீங்க ரொம்ப பொண்களுக்கு அப்பீல் ஆறேள் ! அதான் என்னைப் பயப்படுத்தறது ! எவளாது சிரிச்சு உங்களை ஏமாத்திடுவாளோன்னு நடுங்றது என் மனசு !''

''பைத்தியக்காரி ! எவளாவது பல்லைக் காட்னா நானும் பல்லைக் காட்டுவேன்னு பாத்தியா ?''

''வுமன்னா உங்களுக்கு ஒரு வீக்நெஸ் இருக்கு !''

''இருந்திச்சி ! ஆனா இப்ப இல்லை ! என்னோட வீக்நெஸ் அத்தினியையும் உன்னோட பர்ஸனாலிட்டி அப்படியே உறிஞ்சித் தள்ளிடுச்சி. சந்தேகமே படாதே ! நான் முழுக்க முழுக்க உன் ஆள்.''

''உங்க அப்பா மேல ஆணையா சொல்லுங்கோ !'' —சுகந்தா தமாஷாகத்தான் சொன்னாள்.

''ஐயையோ ! அந்த ஆள் மேல ஆணையா சொல்லக் கூடாதும்மா ! அவரு ஒரு மாதிரி... தேவதானப்பட்டிங்கற ஊர்ல இன்னொரு அம்மாளை செட்-அப் பண்ணி வச்சிருக் கார் அந்த ஆளு...''

ஐயையோ ! நெஜமாவா ராம்ஜி ?''

''நெஜம்மா. எங்க அம்மாவுக்கே அதெல்லாம் தெரியும் !''

''ஒண்ணும் சொல்லமாட்டாளா ?''

''அதெல்லாம் ஒண்ணும் சொல்ல மாட்டாங்க ! அந்த மாதிரி விஷயமெல்லாம் அந்தப் பக்கத்ல ரொம்ப சர்வ சாதாரணம் ! அது ஒரு பார்ட் ஆஃப் தேர் கல்ச்சர் !''

''நல்ல கல்ச்சர் !''

''நான் அந்த கல்ச்சர்லேருந்து வெகு தூரம்...''

''அதான் எனக்கு வேணும் !''

''இப்ப என் மேல நம்பிக்கைதானே ?''

''என்னிக்கும் என்னோட இந்த நம்பிக்கைக்குப் பாத்திரமா நீங்க இருக்கணும் !''

''இப்பவும் இருப்பேன். எப்பவும் அப்படியே இருப்பேன். போதுமா ?''

''போதும்...''

''சரி. நீ இப்ப சீரியஸா சில விஷயங்கள் பேசினமாதிரி, நானும் சில விஷயங்கள் சீரியஸா ஒன்னைக் கேக்கட்டுமா ?''

''தாராளமா கேளுங்கோ...''

''இப்ப உங்க கௌசல்யாவுக்கு வர செப்டம்பர்ல மேரேஜ் ?''

''யெஸ்.''

''அந்த மேரேஜ் முடிஞ்சதுமே உனக்கு வரன் பார்க்க ஆரம்பிக்கப் போறாரா உங்கப்பா ?''

''இல்லே. கௌஸி கல்யாணத்துக்கு எஸ்டிமேட்டுக்கு மேல போயிடுத்து இல்லையா — அதனால இன்னும் ஆறேழு மாசத்துக்குப் பயமில்லை...''

''ஒருவேளை எங்க தமிழரசி கல்யாணம் ஆறு மாசத்துக்குள்ளே முடியாம— அதுக்குள்ள உங்கப்பா உன்னோட ஜாதகக்கட்டைத் தூக்கிட்டார்னா அப்ப என்ன பண்ண ?''

சுகந்தா யோசித்தாள்.

''எதுக்குக் கேக்கறேன்னாக்க, உன் விஷயம் கௌசல்யா விஷயம் மாதிரி இல்லை. நீ ப்யூட்டி க்வீன்! அருமையான ஜாப்ல வேற இருக்கே! ரெங்கராஜன் மாதிரி எவனாவது ஒருத்தன் வரதட்சிணையே வேண்டாம்னு உங்கப்பா கால்ல வந்து விழுவான்.''

''அப்படி வரச்சே பார்த்துக்கலாம்!''

''வந்திடுச்சின்னு வச்சிக்கம்மா!''

''அப்போ... ஒரே ஓட்டம் தான். ஓடியே வந்திடுவேன்!''

''அந்த ஓட்டத்தைக் கௌசல்யா கல்யாணம் முடிஞ்ச மறுநாளே ஓடிக் காட்டிடு!''

சுகந்தா யோசனை செய்து பார்த்து விட்டுச் சொன்னாள்:

''பயமா இருக்கு ராம்ஜி!''

''ஆறு மாசம் கழிச்சி ஓடி வர்றதுக்குப் பதிலா ஆறு மாசம் முன்னாடி வந்திடப் போறே, அவ்வளவுதானே?''

''வந்து...''

''இங்கேயே ஸ்பெஷல் மேரியேஜஸ் ஆக்ட்படி நாலைஞ்சு ஃப்ரெண்ட்ஸ் முன்னாடி ரிஜிஸ்தர் மேரேஜ் பண்ணிப்போம்... பண்ணிட்டு நாமபாட்டுக்கு இங்க ஒரு வீடு பார்த்து ஜாம் ஜாம்னு குடித்தனத்தை ஆரம்பித்து விடுவோம். தமிழரசி கல்யாணம் முடிஞ்ச அடுத்த நாளே, எங்க ஊர்ல போய் குழந்தை குட்டியோட இறங்கிடுவோம்!''

சுகந்தா கிள்ளினாள்.

''அது சரி, சும்மா கிள்ளிட்டு கிள்ளிட்டு போ!''

''அவசரப் படாதேள் ராம்ஜி. எங்க கௌஸி கல்யாணத்துக்குத் தான் இன்னும் ரெண்டு மாசம் இருக்கே! நன்னா யோசிச்சு உங்களுக்கு நான் பதில் சொல்றேன்...''

''என்னத்தை யோசிக்கப் போறேன்னு தெரியலை...''

''ஒரு பொண்ணுங்கற முறையில நான் யோசிக்கத்தான் செய்யணும் ராம்ஜி.''

''சரி... உன் இஷ்டப்படி யோசி! ஒனக்காக எத்தினியோ நாள் பொறுத்தாச்சு. இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திட்டு இருக்கறதிலே என்ன ஆயிடப் போகுது. ஆல்ரைட்! சுகந்தா மனதே!''

''தாங்க் யூ...''

சிறிது நேரத்துக்கு சுகந்தா என்னவோ யோசித்தபடி மௌனமாக இருந்தாள். கொஞ்சம் துவண்டு போயிருந்த அவளுடைய முந்தானையைப் பார்த்தபடி நானும் மௌன மாக இருந்தேன்.

''சுகந்தா, முந்தானை என்கிறதைப் பத்தி சின்னச் சின்ன ஐடியாஸ் வருது எனக்கு! அதை வச்சி ஒரு கவிதை சின்னதா எழுதலாம்னு பார்க்கிறேன்...''

''ஒரு வரி சொல்லுங்கோ...''

''முந்தானை காதல் மிக்கது. கொலுசு மோகம் மிக்கது. எப்படி?''

''கொலுசு ஒங்களுக்கு பிடிக்குமா ராம்ஜி?''

''பிடிக்குமான்னு லேசா கேட்டுட்டே!''

''கல்யாணத்துக்கு அப்புறம் வாங்கித் தாங்கோ.''

''ஓயெஸ்!''

''சரி. கவிதையோட நெக்ஸ்ட் லைன்?''

''இனிமேதான் யோசிக்கணும்!''

''என்னைக் கேட்டா நீங்க கதை எழுதலாம் ராம்ஜி!''

''நீ சொல்லியாச்சு இல்லையா? நாளைக்கே எழுத ஆரம்பிக்கிறேன்!''

''ஐ'ம் நாட் ஜோக்கிங்! ப்ளீஸ் பி ஸீரியஸ்...''

''சீரியஸாத்தான் சொல்றேன் நானும். லாரன்ஸோட சன்ஸ் அண்ட் லவர்ஸ். ஹெஸ்ஸோட டேமியன்; ஹென்றி மில்லரோட ப்ளாக் ஸ்பிரிங்— அது மாதிரியெல்லாம் தமிழ்ல எவனாவது எழுதத்தான் செய்யணும்...''

''ஆர்த்தர் மில்லரை வுட்டுட்டேளே...?''

''நோ நோ. அவன் ரொம்ப சாதாரணமான ப்ளே ரைட்டர்! ஆனா அவன் செஞ்ச மாதிரி நானும் வேணா ஒரு காரியம் செய்யலாம்!''

''என்ன செஞ்சான் அவன்?''

''ஒரு அருமையான சினிமா நடிகையைக் கல்யாணம் செஞ்சான்!''

சுகந்தா கொஞ்சம் பலமாகக் கிள்ளினாள்.

''சுகந்தா, சினிமால ஆக்ட் பண்றியா?''

''அதுதான் கொறைச்சல்!''

''நீ சினிமா நடிகை ஆயிட்டா ஒண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு எனக்கு இன்னும் கொஞ்சம் கிக், த்ரில் ஜாஸ்தியா இருக்கும்! ரொம்ப ஈஸியா நானும் பாப்புலர் ஆயிடுவேன்!''

''பேத்தறத்துக்கு ஆரம்பிச்சுட்டேள். எழுந்துக்கலாம்.''

''இரு இரு. ஒரு விஷயத்தை மறந்துட்டேன். நீ ஒங்க கௌஸி கல்யாணத்துக்கு த்ரீ தவுஸன் கொடுக்கப் போறதா சொன்னே இல்லையா?''

''ஆமா.''

''இந்தா, அதை நான் தரேன் ஒனக்கு...''

பேண்ட் பாக்கெட்டில் திணித்து வைக்கப்பட்டிருந்த ரூபாய் நோட்டுகளை எடுத்தேன். கொத்தாக அவளிடம் நீட்டினேன். பணத்தை அவள் வாங்கிக் கொள்ளாமல் மௌனமாக இருந்தாள்.

''வாங்கிக்க கண்ணம்மா...''

'வேண்டாம்' என அவள் தலை அசைந்தது.

''கௌஸி கல்யாணத்துக்கு நான் தரக்கூடாதா?''

'தரக்கூடாது' என்று அவள் தலை மறுத்தது.

''தாங்க்ஸ். நீங்களே வச்சுக்கோங்கோ !''

''பரவாயில்லே. சும்மா என்கிட்டே இருக்கறதுக்குப் பதிலா உன்கிட்டே இருக்கட்டும்...''

''அதெல்லாம் வேணாம் ராம்ஜி! சொன்னா கேளுங்கோ...''

''சரி. போ. மூவாயிரம் ரூபா மிச்சம்தான் எனக்கு...''

''இம்சைதான் பண்றேள்...''

''ஆல்ரைட். அடுத்த வாரம் கௌஸி நிச்சயதார்த்தமாக்கும். அந்த நேரத்ல நான் எங்க ஊருக்குப் போய் என்ன நடக்குதுன்னு ஒரு பார்வை பார்த்துட்டு வந்துடறேன்.''

''அதைச் செய்யுங்கோ...''

சுகந்தா அந்தப் பட்டுப் புடவையை ஜானகியிடம் கொடுத்து வைத்திருந்தாள். ஒரு திரைப்படம் பார்க்க என்னுடன் ஆனந் தியேட்டருக்கு வந்தபோது ஒரே ஒரு முறை அவள் அந்தப் புடவையை அணிந்து கொண்ட பின் மீண்டும் அப்புடவையைக் கட்டிச் கொள்கிற சந்தர்ப்பம் அவளுக்கு வரவேயில்லை. சுசுந்தா ஒரு நாள் தரையில் வீசி யெறிந்துவிட்ட அந்த பனாரஸ் பட்டுப் புடவையை நானும் திரும்பப் பெற்றுக் கொள்ள மறுத்துவிட்டேன். ஜானகியின் வீட்டுத் தரையில் எங்கள் இருவராலும் நிராகரிக்கப்பட்ட அந்தப் பரிசப் புடவையை, சில வருடங்கள் கழித்து ஒரு பண்டிகை காலத்தில் ஜானகி கட்டிக் கொண்டிருந்த மாண்பு கெட்ட செயலைக் கண்டு காணாதவன் போலத்தான் நான் போய்க் கொண்டிருந்தேன்.

சுகந்தாவின் மூத்த சகோதரி கௌசல் யாவின் திருமண நிச்சயம் சென்னையில் மிக எளிதாக நடைபெற்றுக் கொண்டிருந்த கணத்தில், நான் பெரியகுளம் தென்கரை இடையர் தெருவில் எங்கள் வீட்டு மாடியில் என் அப்பா, அம்மா முன்னிலையில் சுகந்தா பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன்.

என் அப்பா இகழ்ச்சியாகப் பேசினார்: ''ஒன்னை மாதிரி அவளும் கிராக்குத்தானா. அதான் ஒன்னைக் கட்டிக்கிறேன்னு சொல்றா! நீ ஒண்ணும் உருப்படுவேன்னு எனக்கு நம்பிக்கை இல்லை. போ போ... எவளை வேணுமானாலும் கட்டிக்க, எங்களுக்கென்ன? தாய் தகப்பன் சொல்ற பேச்சைக் கேக்கற பிள்ளையா இருந்தா சொல்லலாம்... ஆனா

நீ ஏணின்னா கோணின்னு சொல்ற ஆளு! உன்கிட்ட என்னத்தைப் பேசறது?''

என் அம்மா என்னைப் புகழ்ச்சியாத்தான் சொன்னார்கள்: ''நீங்க சும்மா வாயை மூடிட்டு கெடங்க. புள்ளை ஏதோ கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்றதே பெரிய புண்ணியம். என் தலைப்புள்ளை அநாதை மாதிரி பட்ணத்ல போயி கெடக்கான்னு நான் கெடந்து பொலம்பித் தவியா தவிச்சிட்டுக் கெடக்கேன். நல்லபடியா இவன் எவளையாவது கல்யாணம் செஞ்சிகிட்டா பழனி முருகனுக்குப் பால் அபிஷேகம் பண்றேன்னு நேந்துகிட்டிருக்கேன். நீ கூட்டிட்டு வாய்யா அந்தப் பொண்ணை. நம்ம பொம்பளைப் புள்ளைக்கு எப்படி, எவ்வளவு நகை செஞ்சு கல்யாணம் செஞ்சு குடுத்தோமோ... அதே மாதிரி அந்தப் புள்ளைக்கும் வைரத்ல கம்மலும் நெக்லஸும் செஞ்சு போட்டு நம்ம வீட்டுக்கு கூட்டிட்டு வருவோம். எல்லாம் நம்ம தமிழரசி கல்யாணமாகி அவ புருஷன் வீட்டுக்குப் போய்ச் சேரட்டும். மறு ரயில்லேயே போய் அவளைக் கூட்டிட்டு வந்துருவோம்...''

''அம்மாவும் ஆச்சு, புள்ளையும் ஆச்சு! எனக்கென்ன?''— துண்டை உதறி தலையில் கட்டிக் கொண்டு, அப்பா தேனிச் சந்தைக்குக் கிளம்பிச் சென்றார். நான் அவருடைய மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு தேக்கடி நோக்கிப் பறந்தேன்.

திரும்பி சென்னை வந்து மாலையே சுகந்தாவைச் சந்தித்தேன்.

''என்ன ராம்ஜி? தமிழரசி கல்யாணம் எதுவும் முடிவாயிருக்கா?''

''முடிவாயிடும். தமிழரசியோட அப்பா நாலு திசையிலும் ஆளை அனுப்பிச்சிருக்கார், எங்கேயிருந்தாலும் பிடிச்சி இழுத்திட்டு வாங்கடான்னு. ரெண்டு மூணு மாசத்ல

எப்படியும் இழுத்திட்டு வந்திடுவாங்கன்னு நெனைக்கிறேன்!''

''தமிழரசிக்குக் கல்யாணம் வந்தா ரொம்ப தடபுடலா நடக்குமோ?''

கடைசிப் பொண்ணாச்சே! வெளுத்துக் கட்டிடுவாங்க...''

''என்னைப் பத்தி சொல்லிட்டேளா?''

''சொல்லியாச்சி. ஒனக்கும் வைரக்கம்மல், வைர நெக்லெஸ் எல்லாம் செய்யணும்னு எங்கம்மா, எங்கப்பாவுக்கு கண்டிஷனா ஆர்டர் போட்டுட்டாங்க...''

இதைக் கேட்டதும் சுகந்தாவின் கண்கள் வைரம் போலத்தான் ஜொலித்தன.

''சரி; கௌஸி நிச்சயதார்த்தமெல்லாம் எப்படி?''

''அது ரொம்ப சிம்பிள்! மேரேஜ் செப்டம்பர் ஆறாம் தேதி ராம்ஜி...''

''இன்னும் ரெண்டு மாசம்கூட இல்லை. வெரிகுட் நியூஸ்...!''

''பேட் நியூஸ் ஒண்ணு! என்னையும் பெண் கேக்கறா!''

''போச்சுடா! யாரவன் விஷயம் புரியாமே வந்து மோதுறான்! பாவம், அவனுக்கும் ரெங்கராஜன் கதி ஆயிடாமே...! யார் அவன்?''

''பேர் வேணுகோபாலன்.''

''எந்த ஊர்ல இருக்கான்?''

''ஸ்டேட்ஸ்...!''

''ரொம்ப தூரத்ல இருந்துதான் வரான்! என்ன பண்றான் அங்க?''

''மாண்டேனா யுனிவர்ஸிடில ஏதோ பெரிய ப்ரொபசராம் !''

''கிழிச்சான் ! அவனுக்கு வேற பொண்ணு கெடைக்கலையா ? அப்ப நீ இம்மீடியட்டா ஒங்க வீட்ல இருந்து கழட்டிக்க வேண்டியதுதான் !''

''இருங்கோ. நான் சொல்றதை முழுசா கேளுங்கோ... அதுக்குள்ள அவசரப்படறேளே ! அந்த வேணுகோபால் டிசம்பர்ல ஒரு ஷார்ட் லீவ்ல இண்டியா வராராம். அப்போ வந்து என்னைப் பார்ப்பாராம். என்னைப் பிடிச்சுப் போச்சுன்னாக்கா ஜனவரியில சிம்பிளா திருச்சானூர் மேரேஜ் பண்ணிண்ட உடனே திரும்பிப் போயிடுவாராம். நான் விசா கெடைச்சு மெதுவா போகணுமாம் ! அவரும் சொல்லிட்டாராம் வரதட்சணை ஒரு பைசா வேணாம்னு ! எங்க வீட்ல பேசிப் பேசிக் கிடக்கா...!''

''பிசாசுங்க ! பேசிப் பேசி ஏமாந்து போகட்டும்... டிசம்பர்ல அவன் வந்து பார்க்கறப்ப நீ மூணு மாச கர்ப்பமா இருப்பே !''

குபீரென சுகந்தாவின் முகம் சந்தோஷத்தாலும் வெட்கத்தாலும் சிவந்து விட்டது. முந்தானையை எடுத்து வாயை மறைத்தபடி சொன்னாள்:

''எதுதான் பேசறதுன்னு ஒரு இதுவே கெடையாதா உங்களுக்கு ?''

''அது இருந்தா நான் ஏன் இப்படி இருக்கேன் ?''

''அந்த வேணுகோபாலனோட அம்மாவும் தங்கையும் வந்திருந்தா. என்னமோ நான் அவா வீட்டுக்கு மாட்டுப் பொண்ணா போயிட்டாப்லேயே பேசிப் பேசிச் சிரிச்சுண்டிருந்தா... எனக்கு ஒரு மாதிரியா கோவம் வந்துடுத்து. வாயைத் தெறந்து எதுவும் பேசப் படாதுன்னு பல்லைக் கடிச்சுண்டு இருந்தேன்...''

நான் சிகரெட் பற்ற வைத்தேன்.

''சாக்கோபார் வேணுமாம்மா ?''

''கூப்பிடுங்கோ...''

கூப்பிட்டு ஆளுக்கு ஒன்று வாங்கிக் கொண்டோம்.

''பத்து நாள் ஊர்ல என்ன செஞ்சேள் ?''

''என்னமோ செஞ்சேன் போயேன்...''

சிறிது நேரம் இருவரும் சாக்கோபார் சுவையில் ஆழ்ந்திருந்தோம்.

''வேணுகோபால் டிசம்பர்ல வரானாக்கும் ? வரட்டும் வரட்டும். அதுக்குள்ள நம்ம விஷயங்கள் முடிஞ்சிட்டா நோ ப்ராப்ளம்...''

''இல்லேன்னாக்கா பெரிய ப்ராப்ளம் ராம்ஜி...''

''ப்ராப்ளமும் கெடையாது ஒரு விளக்கெண்ணெயும் கெடையாது. எல்லாம் ஒன் கையிலதான் இருக்கு. ஸப்போஸ் கௌஸி கல்யாணம் முடிஞ்ச அப்புறமும் எங்க தமிழரசி கல்யாணம் முடியாம ஜவ்வா இழுத்திட்டு இருந்தாக்கா, அதுக்காக நாம டிலே பண்ணிட்டு இருக்க வேண்டாம். அன்னைக்கி நான் சொன்னபடி மெட்ராஸ்லே நாம காதும் காதும் வச்சாப்ல கல்யாணத்தைப் பண்ணிடுவோம். புரியுதா நான் சொல்றது ?''

''புரியறது !''

''சும்மா இப்படியே சொல்லிட்டு சொல்லிட்டு போ. வேணுகோபாலன் கிளம்பி வந்தாத்தான் அப்புறம் புரியும் !''

சாக்கோபர் சாப்பிட்ட வாயைத் துடைத்துவிட்டு எனக்குப் புரியும்படி பேசுவது போலப் பேசினாள் :

''என்னோட பொஸிஷனை க்ளியரா சொல்லிடறேன் ராம்ஜி... கேளுங்கோ. ஒங்க தங்கைக்கு முடியாம நாம பெரியகுளத்துல ஒங்க வீட்டுக்குப் போக முடியாது இல்லையா ?''

''ஆமா. போக முடியாது. போனா எங்கப்பாவுக்கும் எனக்கும் பெரிய தகராறே வரும்...''

''ஆனா, என்னைப் பொறுத்த வரைக்கும் நம்ம மேரேஜ் ஒங்க வீட்ல, ஒங்க பேரெண்ட்ஸ் முன்னாடிதான் நடக்கணும். இந்த முடிவை மட்டும் நான் மாத்திக்கறதாகவே இல்லை. காரணமெல்லாம் கேட்காதீங்க! யாரோ ரெண்டு மூணு ஃப்ரெண்ட்ஸ் முன்னாடி ரிஜிஸ்தர் மேரேஜ் பண்ணிக்க எனக்கு விருப்பமில்லை...''

''இரு இரு... இதெல்லாம் நானும் ஒப்புக்கறேன். ஸப்போஸ் அந்த வேணுகோபாலன் ஸ்டேட்ஸ்ல இருந்து டிசம்பர் மாதம் வந்துட்டான்னா, நீ என்ன பண்ணப் போறே?''

''அப்போ வீட்டை விட்டுக் கிளம்பிடுவேன்!''

''அதைத்தான் நானும் சொல்றேன். டிசம்பர் மாதம் வீட்டைவிட்டுக் கிளம்பறதுக்குப் பதிலா செப்டம்பர்லேயே கம்பியை நீட்டிடு...!''

''இருங்கோ கேப்டன். நான் சொல்ல வந்ததைச் சொல்லி முடிச்சுடறேன். நான் வீட்டை விட்டு ஓடி வந்திடுவேன்னு சொன்னேன் இல்லியா... அப்படி நான் ஓடறது உங்களோட இல்லை...!''

''ஏய் ஏய் ஏய்... என்ன இது பெரிய குண்டா தூக்கிப் போடறே...?''

''நான் தனியா ஓடிடுவேன்!''

''எங்கே?''

''சௌகார்பேட்ல இருக்கிற என்னோட ஃப்ரெண்ட் கோமல் வீட்டுக்கு...''

எனக்குப் போரடித்தது.

''சும்மா நீ கழுத்தை அறுக்கறே...''

''பெண்கள் மனசு ஒங்களுக்குத் தெரியாது.''

எனக்கு எரிச்சல் வந்தது : ''பெரிய பெண்கள் மனசு. போங்கடி...!''

''நன்னாத்தான் கோவம் வரது. எங்க வீட்டுக்குத் தெரியாம நான் கோமல் வீட்ல இருப்பேன்...''

''ஆபீஸ் ?''

''ரிஸைன் பண்ணிடுவேன் ! உங்க தங்கை கல்யாணம் முடிஞ்சதும் உங்களோட ஜாய்ன் பண்ணிடுவேன் !''

''ஏதோ சென்ட்டிமெண்ட்டை மனசில் வச்சிக்கிட்டு பெரிய ரோதனை பண்றே சுகந்தா !''

''சென்டிமெண்ட்தான் ! என் கல்யாணத்துக்கு என்னோட அப்பா சும்மா இருக்கமாட்டாங்கற ரொம்ப கஷ்டமான சென்டிமெண்ட் ராம்ஜி ! இந்த சென்ட்டிமெண்ட் பொண்ணாப் பொறந்தாத்தான் ஒங்களுக்குப் புரியும். கல்யாணத்துக்கு அவா வரமாட்டா. கல்யாணத்துக்கு அப்புறமும் வரமாட்டா. இனிமே எனக்கு அப்பா அம்மாங்கறது ஒங்க அப்பா அம்மாதான் ! அதனாலதான் திரும்பத் திரும்பச் சொல்றேன்—அட்லீஸ்ட் அவர் முன்னாடியாவது நம்ம கல்யாணம் நடந்தாகணும்...''

—சொல்லும்போதே சுகந்தாவின் கண்களில் நீர் நிறைந்து கன்னங்களில் வழிந்தது. என் மனத்தை நனைத்தது.

இனி நான் இந்த விஷயத்தில் சொல்ல என்ன இருக்கிறது ? அவளுடைய முந்தானையால் அவளின் கண்ணீரைத் துடைத்துவிட்டேன். மனம் அவளின் காதலால் கனத்துப் போயிருந்தது. அவளை வீட்டுக்கு அனுப்பி விட்டு பஸ் ஸ்டாப் நோக்கி நடந்த போது ஏதோவொரு தனிமை கவிழ்ந்தாற்போலிருந்தது. தனிமையைத் தாங்க முடியாமல் ரோஸ்மேரியிடம் ஓடினேன்.

''சின்ன கண்ணம்மா... இந்த ஒன் வீக் நீ என்ன செஞ்சே ?''

''சின்னச்! சின்ன தொட்டியில ஹண்ட்ரட் ரோஜாச் செடி வாங்கினேன்...''

''காசை விரயம் பண்றே! யாராவது நூறு செடி வாங்குவாங்களா?''

''என் பேரே ரோஸ்மேரி! அதனால தான் வாங்கினேன். வாங்கக் கூடாதா?''

''பணம்...?''

''நீ குடுத்தியே!''

''எங்கப்பாவுக்குத் தெரிஞ்சா ரத்தக் கண்ணீர் வடிச்சிடுவார். மெட்ராஸ்ல பொம்பளைகளுக்கு சேலையும் பூவும் வாங்கிக் குடுத்தே நான் ஓட்டாண்டி ஆயிடுவேன்னு புலம்பித் தவிச்சிடுவார்.

''ஏய்... பொய் சொல்ற நீ· எனக்கு எங்கே ஸாரி வாங்கிக் குடுத்தே?''

''ஒனக்கில்ல ரோஸி. சுகந்தாவுக்கு.''

''ஏன், அதுக்கு ஸாரியே இல்லையா?''

''ஏன் இல்லை? ஒரு பீரோ நிறைய அடுக்கி வச்சிருக்கா...''

''அப்ப எதுக்கு நீ மட்டும் பணத்தை வேஸ்ட் பண்றே?''

''நான் அவளுக்கு வாங்கித் தந்தது பரிசுப் புடவை! சீக்கிரமே எனக்கும் சுகந்தாவுக்கும் கல்யாணம் ஆகப் போகுது சின்னம்மா...''

சட்டென ரோஸ்மேரியின் கண்களில் ஒரு அச்சம் வந்தது.

''என்னை நீ மறந்திட மாட்டியே பாஸ்?''— கலக்கத்துடன் கேட்டாள்.

''சுகந்தாவையே மறந்தாக்கூட ஒன்னை மறக்க மாட்டேன் ரோஸி.''

''நெஜமாவா?''

''சத்தியமா. எனக்கும் சுகந்தாவுக்கும் கல்யாணமான தும் நீயும் எங்க கூடவே வந்து இருந்திடு. மூணுபேரும் ஒரே வீட்ல ஜம்னு இருக்கலாம்...''

''ஜாலியா இக்கும் இல்லே ?''

''ரொம்ப ஜாலியா இருக்கும் !''

ரோஸ்மேரி பரவசத்துடன் சொன்னாள்: ''எனக்கு ஒலகமே நீதான் பாஸ் !''

''எனக்கும் ஒலகமே நீயும் சுகந்தாவும்தான்.''

''உன் சிஸ்டர் தமிழ் ?''

''தமிழாவது ஹிந்தியாவது ? தமிழரசிக்கு கல்யாண மாகி அவ புருஷன் வீட்டுக்குப் போய் சேர்ந்தா சரி எனக்கு ! அப்புறம் எவன் அவளைப் போய்ப் பார்க்கப் போறான்.''

''பாவம் தமிழ் !''

''செலவுக்குப் பணமெல்லாம் வச்சிருக்கியா ?''

''இருந்தா குடு பாஸ்... ஒரு பைசா இல்லை...''

ரோஸ்மேரியின் காதைப் பிடித்துத் திருகினேன்.

குழாய் முனையில் ஒவ்வொரு நீர்த்துளியாய் உதிர்வது போல, சுகந்தாவின் மூத்த சகோதரியின் திருமணத்தை நோக்கி ஒவ்வொரு தினமாக உதிர்ந்து கொண்டிருந்தது. இந்தக் கால உதிர்வு டிசம்பரில் வேணுகோபாலன் சுகந்தா வைப் பெண் பார்க்க வரப் போகிற அந்தக் கட்டத்தையும் நோக்கித் தான் இல்லையா ? நாள் செல்லச் செல்ல நானும் அவளும் பரவசமாகவும் படபடப்பாகவும் இருந்தோம். பரவசம்— கௌசல்யாவின் கல்யாணத்தில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் தாமதத்தால். வாரம் ஒரு முறை நான் பெரியகுளத்துக்கு டெலிபோன் செய்து கேட்டுக் கொண்டே இருந்தேன். எந்த வரனும் அவளுக்கு முடிவாகவில்லை. எனக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது.

தமிழரசியின் திருமணத்துக்காகக் காலம் காத்திருக்குமா என்ன ? ஜூலை ஆகஸ்ட் மாதங்கள் கடந்து அந்த செப்டம்பரும் வந்தது. கௌசல்யா கல்யாணமும் நடந்து முடிந்தது.

இன்னும் கூட எனக்கு நினைவிருக்கிறது. கௌசல்யாவின் முதல் திருமண அழைப்பிதழ்— திருப்பதி வெங்கடாஜலபதி அவர்களுக்கு. அடுத்த அழைப்பிதழ் எனக்குத்தான் ! ஆனால், அந்த அழைப்பிதழை எனக்கு அனுப்பியவர் சுகந்தாவின் தந்தை அல்ல. அவரின் சீமந்த புத்திரி சௌபாக்கியவதி சுகந்தவதி !

எனக்கும் கௌசல்யாவின் திருமணத்துக்குப் போக வேண்டுமென்றுதான் ஆர்வமாக இருந்தது. கல்யாண வீட்டில் என்னுடையவள் எப்படி வளைய வருகிறாள் என்பதைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்றுதான் நானும் ஆசைப்பட்டேன். எனினும், நான் போகவில்லை. அந்தக் கல்யாணம் நடந்து கொண்டிருந்த சத்திரம் இருந்த தெருப்பக்கம் மட்டும் வெறுமனே அப்படியும் இப்படியுமாக நான்கு முறை போய் வந்து என்னைத் திருப்தி செய்து கொண்டேன் !

கௌசல்யா திருமணம் முடிந்து ஆறு நாட்கள் கழித்துத் தான் நானும் சுகந்தாவும் சந்தித்தோம்.

''அப்போ ஒங்க அக்காவுக்கு கல்யாணத்தன்னிக்கே சாந்தி முகூர்த்தமும் வச்சி ஜமாய்ச்சுட்டாங்களாக்கும்...?''

''ஆமாமா. அன்னிக்கே வச்சுட்டா. ஆனா, ஜமாய்ச்சுட்டாளா இல்லையான்னு சம்மந்தப்பட்டவாளத்தான் கேக்கணும்...!''

''நம்ம ஃபர்ஸ்ட் நைட்ல நீ ஜமாய்ச்சிடுவே இல்லையா?''

காதில் விழாதவள் போல எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தாள். எத்தனை மறைத்தும் வெட்கம் அவளுடைய முகத்தில் பரவியதைச் சில நிமிடங்கள் ரசித்தேன்.

''அந்த விஷயத்ல நான் ரொம்ப முரடன்! ஈஸியா என்னை ஃபேஸ் பண்ணிடுவியாம்மா?''

பேசாமல் இருந்தாள்.

''சரி. வெட்கப்பட்டதெல்லாம் போதும். நாளைக்கி ஸண்டே தானே. ஏதாவது பிக்சர் போகலாமா?''

வீட்ல எக்கச்சக்கமா வேலை இருக்கு ராம்ஜி. எங்கேயும் நகர முடியாது.''

''அப்ப மறுபடியும் ஒன்னை எப்ப பார்க்கறது?''

''நான் ஒங்களுக்கு ரிங் பண்றேனே.''

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. புத்தகங்களைப் புரட்டினேன். இசைத் தட்டுகளை ஒலிக்க விட்டேன். எதிலும் மனம் ஒன்றவில்லை. மனத்துக்குப் பிடித்த உடையாகத் தேர்ந்தெடுத்து அணிந்தேன். ஸ்கூட்டரை எடுக்க விருப்பமில்லை. டாக்ஸியில் அமர்ந்து சஃபையர் தியேட்டரை அடைந்தேன்.

சிகரெட்டின் துணையோடு அங்கும் இங்கும் சஞ்சரித்துக் கொண்டிருந்த என்னை ஒரு பெண்ணின் குரல் முதுகின் பின்னால் ஒலிந்தது நிறுத்தியது.

''மிஸ்டர் ராம்குமார்... !''

சட்டென திரும்பிப் பார்த்தேன்.

ருத்ரா— அவளுடைய தங்கையுடன் மிக அழகாக நின்று கொண்டிருந்தாள். அவ்வளவுதான். சரசரவென்று நான் வேறொரு உலகப் பிரஜையாகி விட்டேன்!

15

"ஹலோ ருத்ரா ! ஹௌ ஆர் யூ ?"

தோள்களை நவீனமாகக் குலுக்கியபடி ஓர் அழகிய அபிநயம் செய்து "ஃபைன்" என்றாள்.

அவளின் அபிநயத்தில் அவளுடைய நாட்டியக் கலை ஆர்வத்தின் முத்திரை துல்லியமாகத் தெரிந்தது.

"வீட்ல அப்பா அம்மா ப்ரதர் எல்லாம் நல்லா இருக்காங்களா ?"

"நீங்கதான் ரெண்டு வருஷம் எங்க வீட்டு பக்கமே வரலையே... வரக்கூடாதுன்னு இருக்கீங்க போலிருக்கு..."

"நோ நோ... நீங்க கோபாலபுரம் பக்கம் வீடு ஷிஃப்ட்டாகிப் போனப்புறம் எனக்கு அந்தப் பக்கமே வர முடியாம போச்சி. இப்ப அம்மா எப்படி இருக்காங்க... ?"

''பரவாயில்லை. சுவரைப் பிடிச்சிக்கிட்டே கொஞ்ச தூரம் நடக்கறாங்க. மற்றப்படி வீல்சேர்தான் யூஸ் பண்றாங்க...''

''அப்பா ஊரில் இருக்காரா?''

''இல்லை ராம்குமார். அப்பா அவுட்டோர் ஷூட்டிங் குக்கு எர்ணாகுளம் போயிருக்கார். ப்ரதரும் கூடப் போயி ருக்கான்...''

''ஸோ... ஃபிலிம் வந்தீங்களா?''

''டிக்கெட் கெடைக்கலே. சும்மா ஸ்டில்ஸ் பார்த்துட்டு வீட்டுக்குப் போயிடலாம்னு லாபிக்குள்ள வந்தோம்... உங்களுக்கு டிக்கெட் கிடைச்சுதா?''

''ப்ளாக்லதான் கெடைச்சுது...''

''வீட்டுக்கு ஒரு நாள் வாங்க ராம்குமார். அப்பா கூட அடிக்கடி உங்களை நினைத்துக் கொள்வார்.''

''உங்களுக்கு ஆட்சேபணை இல்லேன்னா, நானும் இப்பவே உங்ககூட வீட்டுக்கு வரட்டுமா ருத்ரா?''

மிக நட்புடன் எங்கள் கண்கள் சந்தித்துக் கொண்டன.

''யூ ஆர் வெல்கம்...''

''ஒன் மினிட்; டிக்கெட்டை யாருக்காவது குடுத்திட்டு வரேன்...''

''வெய்ட் வெய்ட்... டிக்கெட்டை விக்க வேண்டாம் ராம்குமார்... என் சிஸ்டர் ஓமனா போய்ப் பார்க்கட்டும்...''

''அப்ப சரி... இந்தாங்க!''

ஓமன்! நீ படம் பார்த்துட்டு வா. நான் இவரை நம்ம வீட்டுக்கு அழைச்சிட்டு போறேன்...''

''ஓயெஸ்...''

கோபாலபுரம் நோக்கிய அந்த நீண்ட வீதியில் ருத்ரா வுடன் நடந்து சென்றது புதியதொரு காற்று வெளியில் பிரவேசிப்பதாக இருந்தது.

சக்கர நாற்காலியில் உட்கார்ந்திருந்த ருத்ராவின் அம்மாவை வணங்கினேன். அடையாளமே தெரியாதபடி அந்த அம்மாளின் உடலையே பாரிசவாயு சின்னாபின்னமாக்கி இருந்தது.

நானும் ருத்ராவும் வெளிப்புற வராந்தாவில் வெள்ளை வர்ணம் பூசப்பட்ட பிரம்பு நாற்காலிகளில் எதிர் எதிராக உட்கார்ந்தோம். கொன்றை மரத்தில் இன்னும் பூக்கள் இருந்தன. புல்தரையில் நிறைய அணில்கள் திரிந்து கொண்டிருந்தன.

''உங்க டான்ஸ் ப்ராக்டிஸ் எல்லாம் கண்டிநியு பண்றீங்களா ?''

இதற்கு ருத்ரா நேரிடையாகப் பதில் சொல்லாமல் வேறொரு சம்பவத்தை எனக்கு நினைவூட்டினாள்.

''த்ரீ இயர்ஸ் பேக்— நீங்களும் நானும் மியூஸிக் அகாடமியில் யாமினி கிருஷ்ணமூர்த்தியோட ப்ரொக்ராம் ஒண்ணுக்குப் போயிருந்தோமே, ஞாபகம் இருக்கா ?''

எனக்கு ஞாபகம் இருந்தது. ஆனால், கடந்து போன எதையும் நான் மீண்டும் அப்போது நினைத்துப் பார்க்க விரும்பவில்லை. நான் நிறையவே களைத்துப் போயிருந்தேன். என் களைப்பு அத்தனையையும் சுகந்தாவில் கரைத்து விடுகிற எல்லைக்கோட்டின் அருகில் வந்து விட்டபின் என் இறந்த காலங்களைப் புரட்டிப் பார்க்கிற சக்தியும் எனக்கு இல்லை. அதனால் மௌனமாகவே இருந்தேன். கழுத்தில் கிடந்த மெல்லிய பொன் சங்கிலியைக் கடித்தபடி ருத்ராவும் சிறிது நேரம் மௌனமாகவே இருந்தாள்.

''எப்போவாவது கலாக்ஷேத்ரா பக்கம் போனீங்களா ராம்குமார் ?''

''இல்லை ருத்ரா. உங்ககூட அங்கெல்லாம் போய் வந்தப்புறம் அந்தப் பக்கம் நான் போகவே இல்லை. அங்கேல்

லாம் போறமாதிரி எனக்கு ஃப்ரெண்ட்ஸ் யாருமே கெடையாது...''

''ஏன், நான் இல்லையா ?''

பனிச்சென்று என் கழுத்தில் ஒரு மாலை விழுந்தாற் போல இருந்தது. சங்கடத்துடன் ருத்ராவைப் பார்த்தேன். மலரில் தேன் அருந்தும் வண்ணத்துப் பூச்சியின் போதையேறிய இயற்கைகளாக அவளின் கண்கள் இமைக்காமல் தீர்க்கமாக என்னையே நோக்கின.

''யூ ஃபர்காட் திஸ் பிட்ச் ருத்ரா...''— வறண்ட குரலில் சொன்னாள்.

நான் கொஞ்சம் பதறி விட்டேன். ''நோ... நோ... ப்ளீஸ் அந்த மாதிரியெல்லாம் சொல்லாதீங்க ருத்ரா...''

''உண்மையிலே உங்களுக்கு என்கிட்ட நட்பு இருந்திருந்தா இப்படி எதுவுமே சொல்லாமே என்னைப் பார்க்கறதையே நீங்க நிறுத்தியிருக்க மாட்டீங்களே... நான் எவ்வளவுதான் அழகா இருந்தாலும், என்னதான் பரத நாட்டியத்ல இண்ட்ரெஸ்ட்டடா இருந்தாலும் கேவலம் நான் ஒரு சினிமாக்காரியோட பெண்தானே...!''

எனக்கு எரிச்சலாகிவிட்டது. ஏன் புத்தி கெட்டுப் போய் இவளுடன் வந்தோம் என்று தோன்றியது. எழுந்து போய் விடலாம் என்று இருந்தது. சட்டென என் மன நிலையை உணர்ந்து கொண்ட ருத்ரா, தன்னிரக்க வேஷத்தைக் கைவிட்டு, ''ஏதாவது டிரிங்க்ஸ் சாப்பிடறீங்களா ?'' என்று கேட்டாள்.

''ஜஸ்ட் காபி— இருந்தா தாங்க, போதும்...''

ருத்ரா உள்ளே திரும்பி, பணியாளை அழைத்து மலையாளத்தில் எதுவோ பேசி காபிக்கு உத்தரவிட்டாள்.

''ஆஷ்ட்ரே வேணுமே''— என்று கேட்டபடி நான் சிகரெட்டை எடுத்தேன்.

''வெய்ட் ஏ மினிட்...''

உள்ளே போய் வேகமாக ருத்ரா ஆஷ்ட்ரே கொண்டு வந்து நாற்காலியைச் சிறிது நெருக்கமாகப் போட்டு உட்கார்ந்தாள்.

''நீங்க ஏதாவது ஆடிக்காட்டுங்க ருத்ரா. ஆச்சுவலா அதுக்குத்தான் உங்ககூட இப்ப வந்தேன் நான்.''

''ஸாரி ராம்குமார்! நான் டான்ஸ் கத்துக்கறதை நிறுத்தியே ரொம்ப நாளாயிடுச்சி. எப்ப என்னை வெறும் சினிமா நடிகை ஆக்கறத்துக்காகத்தான் நாட்டியம் கற்றுக் கொள்ள என் பேரெண்ட்ஸ் என்னை கம்ப்பெல் பண்ணினாங்களோ— அன்னிக்கே நான் ஆடற ஆசையை விட்டுட்டேன். ஒன் வீக் டயம் தாங்க ராம்குமார். லேசா பயிற்சி பண்ணிக்கிறேன். அப்புறம் உங்களுக்காக உங்க முன்னாடி ஆடறேன். ஜெயதேவர்தான் உங்களுக்கு ரொம்பப் பிடிக்குமே— அவரோட அஷ்டபதிக்கே ஆடறேன். போதுமா?''

ஜெயதேவர் என்றதுமே கீத கோவிந்தத்தின் 'நித்ததி சந்தன...' என் மனக்கண்களில் விரிந்தது.

இரண்டு கப் சாஸர்களில் காபி வந்தது. இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே குடித்தோம்.

சில விநாடிகளுக்குப் பின் ருத்ரா சாயம் பூசப்பட்ட அவளின் நீண்ட விரல் நகங்களைப் பார்த்துக் கொண்டே சொன்னாள்: ''மிஸ்டர் ராம்குமார்! நான் வெட்கத்தை விட்டே ஒரு விஷயம் உங்களைக் கேட்கட்டுமா?''

என்ன கேட்கப் போகிறாளோ என்று கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது. ஆனால், அவளுக்கு சொன்னேன், ''எது வேணுமானாலும் கேளுங்க ருத்ரா...''

''உங்க நட்பு எனக்கு வேண்டும். மீண்டும் நாம் அடிக்கடி சந்திக்க வேண்டும்.''

ஒரு பெண்ணுடன் நட்பு ஏற்படுகிற போதெல்லாம் எனக்குள் மூளும் ஒரு சோகம் அப்போதும் மூண்டது. அந்த சோகத்தை மறைத்துக்கொண்டு பேசினேன்: ''ருத்ரா, ரொம்ப நாளாவே நாம ஃப்ரெண்ட்ஸ்தான். ஆனா, ஏனோ ரெண்டு வருஷம் நாம் மீட் பண்ணலை. இனி தொடர்ந்து மீட் பண்ணுவோம்! உங்களுக்கும் என் மாதிரியே லிட்ரேச்சர், ஃபைன் ஆர்ட்ஸ் இதிலெல்லாம் நல்ல இண்ட்ரெஸ்ட் இருக்கு. அதை நாம ரெண்டு பேருமே அடிக்கடி மீட் பண்ணி ஷேர் பண்ணிக்கலாம். ஆனா, அது வந்து உங்களை வேற எந்த விதமான எண்ணத்துக்கும் லீட் பண்ணிடக்கூடாது. இதை முதல்லேயே சொல்லிடறது நல்லது. ஏன்னா ஐ'ம் என்கேஜ்ட்...''

ஒரு கணம் புரியாமல் விழித்த ருத்ரா, ''யு மீன் மேரேஜ்?'' என்றாள்.

''ஆமாம்.''

''ஓ! கங்க்ராஜுலேஷன்ஸ்!''

—அவளின் கரம் நிஜமான உள்ளன்புடன் என்னை நோக்கி நீண்டது. நன்றியுடன் அந்தப் பெண்ணின் கையைக் குலுக்கினேன்.

''பெண் உங்க ஊரா?''

''இல்லை ருத்ரா. இங்கேதான் சில வருஷங்கள் முன்னாடி அவளை நான் மீட் பண்ணினேன். சீக்கிரமே நாங்க மேரேஜ் பண்ணிக்கப் போறோம்...''

''ரியலி வெரி ஹேப்பி நியூஸ் ராம்குமார். உங்களை நான் சரியான நேரத்லதான் பார்த்திருக்கேன். உங்க கல்யாணம் எங்கே நடந்தாலும் கண்டிப்பா நான் வருவேன். இன்விடேஷன் அனுப்ப மறந்துடாதீங்க...''

''கண்டிப்பா முதல் இன்விடேஷன் உங்களுக்குத்தான்...!''

''இன்னொரு காபி சாப்பிடறீங்களா ?''

''ஓயெஸ்...!''

காபி கலந்து எடுத்து வர ருத்ராவே உள்ளே விரைந்ததும் நான் பிரம்பு நாற்காலியில் சாய்ந்தபடி கொன்றை மரக் கிளைகள் காற்றில் ஆடிக் கொண்டிருந்ததைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது காபி கலந்து கொண்டு ருத்ரா வேகமாக வந்ததும் பெண்களின் அருகாமையில் எளிதில் உணர்ச்சிவசப்படும் என் சுபாவம் வெகு சுலபமாக இயங்கிவிட்டது !

''ருத்ரா, காத்துல இந்த மரம் ஆடறப்ப ஒரு அருமையான அபிநயம் போலத் தெரியுதே, கவனிச்சீங்களா ?''

''ஓயெஸ். மெனி டைம்ஸ் அதை நான் வாட்ச் பண்ணியிருக்கேன் ராம்குமார்...''

''என்னிக்காவது பாண்டிபஜார் போனா அங்கே ரெண்டு பக்கமும் இருக்ற ஒவ்வொரு மரமா அப்ஷர்வ் பண்ணிப் பாருங்க. பார்க்கப் பார்க்க அற்புதமா இருக்கும். க்ளியரா அலாரிப்பில் இருந்து தில்லானாவரை பார்க்கலாம் அங்கே...!''

ருத்ரா வெகுவாக நெகிழ்ந்து போனாள். ''நீங்களும் வாங்க ராம்குமார். ரெண்டு பேருமா சேர்ந்தே போய்ப் பார்க்கலாம்...''

எனக்கு சனி எப்போதுமே நாக்கில்தான் !

''போகலாம் ருத்ரா ! கண்டிப்பா போகலாம். பாண்டிபஜார் மரங்களை மட்டுமில்லை. மெட்ராஸ்ல இருக்கற அத்தனை மரங்களையும் ஒரு பார்வை பார்த்துடலாம்...''

''ஓயெஸ்...''

''அப்ப நாளைக்குக் காலையில 11 மணிக்கு சபையர் தியேட்டர் எதிர்ல ஷார்ப்பா என்னோட ஸ்கூட்டர்லேயே

வந்திடறேன்... அங்கே மீட் பண்ணி அப்படியே கிளம்பிடலாம்...''

''ஓகே... !''

அன்று இரவு பீரோவில் பத்திரமாக வைத்திருந்த சுகந்தாவின் புடவையைக் காதலுடன் எடுத்துச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தேன் ! 'என் கண்ணம்மாவின் புடவையே ! மீண்டும் நீ அவளிடமே போய்ச் சேரும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது ! திரும்ப உன்னை அடைந்து விட்ட குதூகலத்தில் உடனே கட்டிப் பார்க்கத் துடிப்பாள் ! கட்டிக்கொண்டு களிப்படைவாள். உரியவளிடம் உன்னைச் சேர்த்துவிட்ட ஆண்மையோடு நானும் உன்னை என் கண்ணம்மாவோடு சேர்த்து அணைத்துக்கொள்வேன் !'

அன்று இரவு அப்புடவையை அணைத்துக் கொண்டே தான் தூங்கினேன்.

மறுநாள் திங்கட்கிழமை காலை பத்தரை மணிக்கு சுகந்தாவுக்கு போன் செய்தேன்.

''என்ன ராம்ஜி ?''

''சுகந்தா, நான் உடனே எங்க ஆடிட்டர்ஸை எல்டாம்ஸ் ரோட்லபோய் மீட் பண்ண வேண்டியிருக்கு...''

''ஏன் ராம்ஜி ? எதுவும் ப்ராப்ளமா ?''

''பெரிய ப்ராப்ளம்... அதான் இன்கம்டாகஸ் ! அதனால இன்னிக்கு முழுக்க ஆபீஸுக்கே நான் வரமாட்டேன். நாளைக்கு நானே உனக்கு போன் பண்றேன்... வேற எதுவும் நியூஸ் உண்டா ?''

''இப்பவே ஆடிட்டரைப் பார்க்கறத்துக்குக் கிளம்பிண்டிருக்கேளோ ?''

''ஆமாமா ! ஆடிட்டர் எனக்காக வெயிட் பண்ணிட்டு இருப்பார் ! நாளைக்கு நானே ரிங் பண்றேன்.''

''ஓகே...''

அப்பா! சுகந்தாவை டபாய்த்தாகி விட்டது. இனி ஆபீஸ்!

"கண்ணன்!"

"யெஸ் சார்!"

"ஊர்ல இருந்து கெஸ்ட் வந்திருக்காங்க! அதனால நான் இன்னிக்கு ஆபீஸ் வர மாட்டேன்... யாராவது என்னைக் கேட்டா சொல்லிடு!"

"சரி ஸார்!"

சபையர் தியேட்டரை நோக்கி என் ஸ்கூட்டர் விரைந்து கொண்டிருந்த போது தம்புச் செட்டித் தெருவில் ஒரு அலுவலகத்தின் மாடியில் என் வருங்கால மனைவியின் அறிவும் கனவேகமாகச் செயல்பட்டிருக்கிறது! ஆபீஸே இடிந்து தரைமட்டமாகிப் போனால் கூட மனுஷன் அசைந்து கொடுக்க மாட்டாரே என்று சுகந்தாவின் மனத் தராசு ஆடியிருக்கிறது! போன் கூடப் பண்ண வேண்டா மென்று சொல்லிவிட்டு ஆடிட்டரைப் பார்க்க ஓடிக் கொண் டிருப்பதாகச் சொன்னாரே... அது நிஜம் தானா என்று அவளின் அறிவுத் தராசு சற்றுப் பலமாகவே ஆடியிருக்கிறது. ஏதேதோ கடந்து போன பல சம்பவங்களையெல்லாம் தராசில் கொண்டு வந்து நிறுத்தினாள்! இன்னும் தனக்குள் புகைந்து கொண்டிருக்கும் சில சந்தேகங்களையும் தன்னை அறியாமலே தராசில் போட்டு நிரப்பினாள். தராசின் தட்டுகள் அவளுள் நிதானம் இழந்து ஆடின. உயர்ந்தன. தாழ்ந்தன. அவளைக் குழப்பின. கடைசியில் அவளை மிகத் தந்திரமாகச் செயல்படவும் வைத்தன.

கலாக்ஷேத்ராவின் பின்னால் கடலை ஒட்டிய வெண் மணல் பரப்பில் சவுக்குத் தோப்பு ஒன்றில் ருத்ராவின் முழு மையான பயிற்சியற்ற 'மோகமானேன்' என்ற வர்ணத்தின் அபிநயத்தை மிக ஸ்டைலாக நான் என் யாஷிகாவால், போட்டோ எடுத்துக் கொண்டிருந்த அந்த உச்சி வெயிலில்,

சுகந்தா என் பர்ஸனல் போனுக்கு டயல் செய்யாமல் ஆபிஸின் பொதுவான நம்பருக்கு மிகத் தந்திரமாக டயல் செய்து விட்டாள் !

இதெல்லாம் தெரியாத நல்ல பிள்ளையாக மறுநாள் காலை என்னுடைய ஆபிஸில் நுழைந்தேன்.

கண்ணன் சொன்னான் ; ''நேற்று மத்யானம் உங்க ஃப்ரெண்ட் சுகந்தா போன் பண்ணினாங்க ஸார் !''

எனக்குத் திக்கென்றிருந்தது ! ''நீ என்ன சொன்னே கண்ணா ?''

''ஊர்ல இருந்து ஸாருக்கு கெஸ்ட் வந்திருக்காங்க ! அதனால ஆபீஸ் வர மாட்டார்னு சொன்னேன் சார் !''

''சரி, நீ போ !''

வெகுநேரம் ஒன்றும் செய்யத் தோன்றாமல் பேசாமல் இருந்தேன். நிச்சயம் இன்று என்னை நார் நாராகக் கிழித்து விடுவாள் ! விரைவிலேயே போன் பண்ணுவாள். மானம் போவது போலக் கேட்பாள், என்ன செய்யலாம் என யோசித்தேன். அவளாக போன் செய்து கேட்கும் வரை பயந்து சும்மா இருக்கக் கூடாது. நானே அவளை முந்திக் கொள்ள வேண்டும் !

நானே சுகந்தாவுக்கு டயல் செய்தேன்...

''ஹலோ சுகந்தாவா ? நேத்து போன் பண்ணினதா கண்ணன் சொன்னான் !''

சில வெறுமையான கணங்களுக்குப் பிறகு அவளின் குரல் கேட்டது.

''இன்கம்டாக்ஸ் ப்ராப்ளம் சரியாயிடுத்தா ?''

ஒரு ஜாக்கியின் கீழ் பாயத் தயாராக இருக்கும் பந்தயக் குதிரை போலத்தான் நான் சிலிர்த்துக் கொண்டேன்.

''ஏன் கண்ணன் சொல்லியிருப்பானே !''

சுகந்தா படீரென்று வெடித்தாள் : ''ஏன் தான் இப்படி அற்பமால்லாம் பொய் பேசறேளோ ?''

நானும் பதிலுக்கு வெடித்தேன் : ''ஆமா, பொய்தான் சொன்னேன் ! என்ன பண்ணிடுவே நீ? உனக்கு ஒண்ணும் இங்கே நான் பயந்திண்டு இல்லை !''

''உங்களை யாரும் பயப்படச் சொல்லலை ! பொய் சொல்லாமதான் இருக்கச் சொல்றேன் !''— சுகந்தாவும் விடாமல் வெடித்தாள்.

''அப்படித்தான் பொய் பேசுவேன். என்ன பண்ணுவே ?''

பதில் இல்லை !

''உன்கிட்ட கண்டபடி பொய் சொல்லிட்டு கண்டவ கூடப் போய் சுத்தறேன்னு நெனைக்கிறியா ? அப்படி நெனைச்சா ஓப்பனா சொல்லிடு ! இன்னிக்கே ஒனக்கு ஒரு குட்- பை சொல்லிடறேன்...!''

இதற்கும் பதில் இல்லை..

''எங்கம்மா பேர்ல சத்தியம் பண்ணிச் சொல்லியிருக்கேன். ஒன்னைத் தவிர வேறு எவளையும் என் மனசால கூட நெனைக்க மாட்டேன்னு...! இந்த என் வார்த்தை மேல ஒனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தா இன்னிக்கு ஈவினிங் நாம மீட் பண்ணுவோம். இல்லேன்னா இன்னியோட ஒருத்தர்க் கொருத்தர் இப்பவே குட்-பை சொல்லிடலாம். என்ன சொல்றே ? நல்லா யோசிச்சி ஈவினிங் சொல்லு !''

அவளுடைய பதில் எதையும் எதிர்பாராமல் படாரென்று ரிஸீவரை வைத்து விட்டு ஆயாசத்துடன் நாற்காலியில் சாய்ந்தேன். நாட்டிய ரசனைக்காக ருத்ராவைப் போய் சந்திப்பது கூட வேண்டாம் என்ற திடீர் தீர்மானத்தில் முற்றிலுமாக அவளை நினைவுகளிலிருந்து நீக்கிவிட்டு மாலை வேளைக்காக விசனத்துடன் காத்திருந்தேன்.



சென்னை மெரீனாவில் இருக்கும் உழைப்பாளர் சிலையின் பின்னால் மணலில் வெகு தூரத்தில் அநேகமாக இருட்டத் துவங்கியிருந்த வேளையில்— அதுவரை என்றும் இல்லாத திருக்கோலத்தில் சுகந்தா என் மடியில் தலை வைத்து அழுத கண்ணீரெல்லாம் கன்னங்களில் காய்ந்திருக்க, களைப்புடன் மண்ணில் படுத்திருந்த அந்த உணர்ச்சி நெரிசல் மிகுந்த சம்பவம், இன்றும் அந்த உழைப்பாளர் சிலை போல என் நினைவுகளில் திண்மையுடன் ஒரு சின்னம் போலவே பீடம் கொண்டிருக்கிறது.

உயிரே போவதாக இருந்தாலும் இனி விளையாட்டுக்காகக் கூடச் சின்னஞ்சிறு பொய்கூடச் சொல்ல மாட்டேனென்று

அவளின் கைகளில் அடித்துச் சத்தியம் செய்தேன். பொய்கள் எல்லாம் களையப்பட்டுவிட்ட ஸ்படிகமாக நான் எழுச்சி அடைய உதவியாக மிக மென்மை மிக்க பெண்மணி கடைசியில் வீழ்ச்சி பெற நேர்ந்துவிட்டது.

நன்றாகவே இருட்டி விட்டது.

''போலாமாம்மா ?''

எழுந்து உட்கார்ந்து முகத்தை துடைத்தாள்.

''நான் அந்த ருத்ராகிட்டே உனக்கும் எனக்கும் சீக்கிரமே நடக்கப் போற மேரேஜ் பத்தியெல்லாம் சொல்லிட்டுத்தான் அவளை மீட் பண்றதுக்குச் சம்மதிச்சேன். ஆனா, உனக்குப் பிடிக்கலேன்னா சொல்லிடு. ருத்ராவை நான் அப்படியே மீட் பண்ணாமலே விட்டுடறேன் !''

சுகந்தா பதில் சொல்லாமல் தலையை ஒழுங்கு பண்ணிக் கொண்டிருந்தாள்.

''சொல்லு. ருத்ராவை இனிமே நான் மீட் பண்ணவா, வேண்டாமா ?''

''வேண்டாம் !''

''சரி, சத்தியமா இனிமே அவளை மீட் பண்ணலை. போதுமா ?''

எழுந்து புடவையை நன்றாக உதறி விட்டுக் கொண்டு சொன்னாள் : ''ராம்ஜி, ப்ளீஸ் என் பேக்கை எடுத்துத் தாங்கோ...''

குனிந்து எடுத்தேன். வழக்கத்தைவிடக் கனமாக இருந்தது. சந்தேகத்தில் அதைத் திறந்து டிபன்பாக்ஸைப் பார்த்தேன். மதியம் அவள் சாப்பிடாத மோர் சாதம் அப்படியே இருந்தது.

''மத்யானம் சாப்பிடலை யாம்மா ?''— கேட்கக்கூட முடியாமல் என் குரல் உடைந்து நொறுங்கியது.

''அந்த மாதிரியெல்லாம் போன்ல பேசினா ஒரு மனுஷி சாப்பிடவா முடியும்?''— மீண்டும் அவளை மீறி அழுகை வெடிக்க, மனம் தாள முடியாமல் டிபன் பாக்ஸை மணலில் வைத்து விட்டுப் பாய்ந்து மனம் பதற என் கண்ணம்மாவைக் கட்டித் தழுவிக் கொண்டேன். இருவருக்குமே அந்த அழுகை அடங்கவில்லை. இருவருக்குமே அந்த அணைப்பு போதவில்லை. சுகந்தாவின் கூந்தலில் முத்தமிட்டேன். உப்புக் கரித்த கண்களில் முத்தமிட்டேன். எனக்கே உரிய அவளின் உதடுகளில் முதல் முறையாக நான் பல நிமிடங்களுக்கு முத்தமிட்டேன்.

பௌர்ணமி கழிந்த நிலா நன்கு உதயமாகிவிட்டது. கடலில் நிலா வெளிச்சம் ரம்மியமாகப் புரண்டு கொண்டிருந்தது. அந்த மனோரம்மியமான காட்சியைக் கண்டவாறே ஜில்லிட்டுப் போயிருந்த மோர் சாதத்தை நானும் சுகந்தாவும் நிலாச் சோறாக உண்டோம்.

''ராம்ஜி... ப்ராப்ளம் வரும் போலத் தோணுது. அந்த வேணுகோபாலன் நவம்பர்லேயே இண்டியா வரப் போறாராம்...''

''பயப்படாதே. அதுக்கு முன்னாடி என் தங்கை கல்யாணம் முடிஞ்சி நாம ஒரே ஓட்டமா பெரியகுளம் இடையர் தெருவுக்கு ஓடியே போயிடலாம்...''

''உங்க தங்கைக்கு எதுவும் நல்ல அலையன்ஸ் வந்திருக்கா?''

''போன வாரம் ட்ரங்கால் போட்டு எங்க அப்பாவை ஒரு வாங்கு வாங்கினேன். 'சட்டுபுட்டுனு தமிழரசியை எவன் தலையிலாவது கட்றீரா, இல்லை நம்ம ஆளோட மெட்ராஸ்ல இருந்து வந்து ஜின்னிங் ஃபேக்டரியில இறங்கட்டுமா?'ன்னு அவரைக் கேட்டு நடுங்க வெச்சிட்டேன்! பத்தே நாள்ல மாப்பிள்ளை பார்த்து முடிச்சிடறேன்னு வாய்தா கேட்டிருக்கார்! அடுத்த வாய்தா கெடையவே கெடையாதுன்னு சொல்லி போனை வச்சிட்டேன்...

பார், பத்தே நாள்ல கல்யாண நியூஸ் வருதா, இல்லையா பார்...!''

ஆனால், என் தங்கையின் கல்யாணச் செய்தி பத்து நாட்களில் வரவில்லை ; இருபத்தெட்டாவது நாள் டெலிபோனில் வந்தது :

''ஹலோ ! ராம்குமாரா ? அப்பா பேசறேன் !''

— என் செவிப்பறையே கிழிந்து போவது போல என் அப்பா அலறினார்.

''என்னப்பா ? நான்தான் ராம்குமார் பேசறேன் !'' — நானும் பதிலுக்கு வேண்டுமென்றே அலறினேன்.

''நான் பேசறது நல்லா கேக்குதா ?''— அவரின் அலறல், ''கேக்குது அப்பா !'' என்னுடைய அலறல்.

''நம்ம தமிழுக்கு மாப்பிள்ளை பார்த்தாச்சு...''

ஜிவ்வென்று நான் பாராசூட்டில் ஆகாயத்தில் மிதப்பது போலப் பறந்தேன். என் கண் எதிரில் சுகந்தா தெரிந்தாள். செத்தான் வேணுகோபாலன் !

''மாப்பிள்ளை எந்த ஊர்ப்பா ?''

''ராசபாளையம். நமக்கெல்லாம் நல்லா தெரிஞ்சவுக தான். அவுகளுக்கும் ஜின்னிங் ஃபேக்டரி இருக்கு, மாந் தோப்பு இருக்கு... நல்ல குடும்பம்தான்...''

''மாப்பிள்ளை, பொண்ணைப் பார்த்தாச்சா ?''

''பாத்தாச்சி. நம்ம தமிழை அவருக்குப் பிடிச்சிப் போச்சி !''

எப்படித்தான் பிடித்ததோ ? எனக்கே ஆச்சரியமாகத் தான் இருந்தது ! என் தங்கை தமிரசியையும் ஒருவனுக்குப் பிடிக்கிறது ! நமக்கென்ன ? எவனாவது ஒருவனுக்குப் பிடித்தால் சரி.

உடனே சுகந்தாவுக்கு போன் செய்தேன்...

''மனசை என்னவோ பண்றது ராம்ஜி...''

''ஆஞ்சநேயரைப் பார்த்துச் சொல்லிடு ! சிக்கிரமே அவருக்கு திருமஞ்சனம் பண்றதா உடனே போய் ஞாபக மூட்டிடு !''

''நெஜமாவே இன்னிக்கி அம்மா, நான், கௌஸி எல்லோரும் போறோம் — ஆஞ்சநேயருக்கு வெண்ணெய் சாத்தறதுக்கு...!''

''ஐயைய ! அப்ப இன்னிக்கு ஈவினிங் உன்னைப் பார்க்க முடியாதா ?''

''ஸாரி...! நாளைக்கி ஈவினிங் பார்த்தா போறது...''

''ஏ அப்பா ! நாளைக்கி ஈவினிங்கா ? அதுவரைக்கும் தாங்காதும்மா !''

''கல்யாணத் தேதி நிச்சயம் பண்ணிட்டாளா ?''

''இன்னும் இல்லை. நிச்சயதார்த்தம்தான் அடுத்த வெள்ளிக்கிழமை...''

''நீங்க போறேளா ?''

''நோ... இனிமே நமக்கு அங்கே என்ன வேலை. இங்கேதான் தலைபோற வேலை ! நமக்கு வீடு பார்க்கணும். குடித்தனம் பண்ண அத்தனை சாமானும் வாங்கணும்... உன்னைப் பெரியகுளத்துக்கு கடத்திட்டுப் போக ஏற்பாடெல்லாம் பண்ணணும்...''

அன்று மாலை சுகந்தாவோடு இருக்கமுடியாத நிலையில் ரோஸ்மேரியைப் பார்க்க ஓடினேன். ஸிலியா குன்னூர் போயிருந்தாள். ரோஸிக்குத் துணையாக ஆண்ட்டி மட்டும் என் சொற்படி இருந்தது. தோட்டத்துக்கு ஓடிப்போய் ரோஜா பறித்து வந்து ரோஸியின் ஒற்றை ஜடையில் சூட்டினேன்.

''பாஸ்... ரொம்ப ஜாலியா இருக்கே ! உனக்குக் கல்யாணமா ?''

''கரெக்டா சொல்லிட்டே...''

ரோஸி என் கழுத்தைப் பின்னிக் கொண்டாள்.

''உன் மேரேஜுக்கு எனக்கு நெறைய புது ட்ரஸ் வேணும்...''

''உனக்கு இல்லாததா? மூர்மார்கெட்ல லண்டன் ஸ்டோர்ல கொண்டு போய் ஒன்னை விட்டுடறேன். உன் இஷ்டத்துக்கு பூந்து விளையாடு! சரி, எங்கே பெரியவளை... ?''

''குன்னூர் போயிருக்கு...''

''திரும்பி வரச்சொல்லாத. வந்தா இன்னும் கொஞ்ச நாள்ல அவ தெருவுலதான் நிப்பா... !''

''அப்படியெல்லாம் சொல்லாத பாஸ்.''

வந்த வேகத்திலேயே கிளம்பி விட்டேன்.

மறுநாள் மதியமே சுகந்தா பர்மிஷனில் வந்து விட்டாள். ஒரு மாறுதலுக்காக மாம்பலம் நடேச முதலியார் பார்க்கில், ஒரு விசிறி வாழையின் அருகில் இருவரும் அமர்ந்து கொண்டோம்.

''நிச்சயதார்த்தத்துக்கு நெஜமாகவே நீங்க போகலையா ராம்ஜி ?''

''நமக்கு ஒத்துக்காதும்மா அந்த கூட்டமெல்லாம். அதுவும் இல்லாம என்னை கொஞ்சம் தள்ளி வச்சிட்டமாதிரி வச்சிருக்கானுங்க... அவனுங்க மூஞ்சியில போயி முழிக்க முடியுமா ?''

''சரி, கல்யாணத்துக்குப் போவேள் இல்லையா ?''

போயாகணுமே! தமிரசி கல்யாணத்துக்கு ஏழாவது நாள் நம்ம கல்யாணமாச்சே... !''

சரி, நம்ம ப்ளான் என்ன? நான் என்னிக்கு உங்க ஊருக்குப் புறப்பட்டு வர்றது? எப்படி நம்ம கல்யாணத்தை நடத்தறது? இப்பவே பேசி முடிவு செஞ்சிடலாம் ...''

''நேத்திக்கி நைட்டே கம்ப்ளீட்டா ப்ளான் பண்ணி வச்சிட்டேன். சொல்லட்டுமா ப்ளானை ?''

''சொல்லுங்கோ சொல்லுங்கோ ...''

''நான் வந்து நாளைக்கே எங்க அப்பாவுக்கும் அம்மா வுக்கும் எழுதிடறேன்... ''

''என்ன எழுதப்போறேள் ?''

இந்த மாதிரி நான் உங்ககிட்டே நேர்ல சொன்ன மாதிரி சுகந்தா என்கிற பொண்ணை தமிரசி கல்யாணம் முடிஞ் சதும் நம்ம பெரியகுளத்துக்கு அழைச்சிட்டு வந்து உங்க முன்னாடி நம்ம வீட்ல வச்சி சிம்பிளா கல்யாணம்பண்ணிக்க போறேன்னு எழுதிடறேன். மத்ததெல்லாம் எங்கம்மா பார்த்துப்பாங்க. தாலி செயின் ஒண்ணு பெரிய மாட்டுச் சங்கிலி மாதிரி செய்வாங்க பார். அதை நாலு நாள் நீ போட்டிருந்தாலே போதும். கழுத்து அறுந்துபோயிடும் !''

''அவ்வளவு கனமா செய்வாளா ?''

''அது ஒண்ணே பதினெட்டு பவுன்... !''

''யம்மாடி... !''

''அப்புறம் ஒவ்வொரு கைக்கும் தங்க வளையல் நாலு ஜோடி. கல் வளையல் ரெண்டு ஜோடி — என்ன ஆச்சி கணக்கு ? ஒரு கைக்கு மட்டும் பன்னிரண்டு வளையல்கள் ! ரெண்டு கைக்கும் சேத்து இருபத்தினாலு வளையல் ...''

''கையே கழண்டு விழுந்துடும்.''

''அப்புறம் ஷார்ட் செயின். லாங் செயின். தங்க நெக்லஸ். வைர நெக்லஸ். வைரத்ல கம்மல் ...''

''ரொம்ப செலவாகுமே ராம்ஜி ?''

''பேசாம இரு. எங்க அப்பா கிட்ட இருந்து இப்படித் தான் பணத்தை கறக்கணும் ! எல்லாம் எங்கம்மா க்ளீயரா செய்திடுவாங்க ! அவங்களுக்கு எத்தனை வருஷப் பழக்கம் எங்கப்பாகிட்டேர்ந்து பணத்தை கறந்து கறந்து !''

''புடவை ?''

''எல்லாம் உன் மாமனார் மாமியார் செலவுதாம்மா ! கல்யாணத்துக்கு நமக்கு ஒரு பைசா செலவு கிடையாது. இங்கேருந்து பெரியகுளம் போற செலவு ஒண்ணுதான். நான் முதல்ல தமிழரசி கல்யாணத்துக்கு போயிடறேன். நம்ம

கல்யாண டேட் என்னிக்கி பிக்ஸ் பண்றோமோ, அதுக்கு முந்தின நாளுக்கு முந்தின நாள், உனக்கு தூத்துக்குடி எக்ஸ்பிரஸ்ல டிக்கெட் ரிசர்வ் செய்து தந்திடறேன். நீ புறப்பட்டு வந்திரு. கொடைக்கானல் ரோட் ஸ்டேஷன்ல ஒரு ப்ரைவேட் டாக்ஸியோடு நான் வந்து காத்திருக்கிறேன். நேரா பெரியகுளம். மறுநாள் சப்தமில்லாமலே நம்ம கல்யாணம் ..''

''உங்க ரிலேட்டிவ்ஸ் யாரையும் கூப்பிட மாட்டேளா?''

''ஒரு பயலைக் கூப்பிடமாட்டேன். பெரியகுளத்துல எண்ணி நாலே நாள். அதுவும் எங்க அம்மாவுக்காக. அங்கிருந்து நேரா கொடைக்கானல். அங்கேதான் நமக்கு சாந்தி முகூர்த்தம்... அதுக்கு முன்னாடி அவசரப்பட்டேன்னா ஸாரி, என்னால முடியாது...''

அப்போது, அன்றைக்கு என் சுகந்தா மிகப் பலமாகக் கிள்ளினாளே, அது தான் என்னை அவள் கடைசியாகக் கிள்ளியது.

ஒரு வாரம் கழித்து என் தங்கை தமிழரசியின் நிச்சய தார்த்தம் பெரியகுளத்தில் நடந்து முடிந்ததை என் அப்பா மறுபடியும் ட்ரங்க்கால் போட்டு அலறி அலறிச் சொன்னார். கல்யாணத் தேதி நவம்பர் 5 என்று திருப்பித் திருப்பி ஐந்து தடவை சொன்னார்!

''நவம்பர் அஞ்சாம் தேதி தமிழரசி கல்யாண கேஸ் பைசல் ஆகுது சுகந்தா...''

''யம்மாடி! தப்பிச்சேன். ஸ்டேட்ஸ்லேர்ந்து வேணு கோபாலன் நவம்பர் பதினாலாம் தேதி வர்றாராம்...''

''நம்ம கல்யாணம் நவம்பர் பத்து ... நீ இங்கேயிருந்து எங்க ஊருக்குக் கிளம்ப வேண்டிய டேட் நவம்பர் எட்டு. நவம்பர் பதினாலாம் தேதி நாம கொடைக்கானல்ல குளிருக்கு நல்லா இழுத்து போர்த்திப் படுத்து நடுங்கிக் கிட்டிருப்போம்...''

சுகந்தா பணிபுரிந்திருந்த சில வருடங்களில் தன்னுடைய சொந்த சேமிப்பாக வங்கிகளில் பாதுகாத்து வைத்திருந்த ஒன்பதாயிரம் ரூபாயை எடுத்து என்னிடம் ஒப்படைத்து விட்டாள். நான் வேண்டாமென்று சொல்லியும், தீர்மான மாகத் திரும்பப் பெற்று கொள்ள மறுத்துவிட்டாள்.

பெரியகுளத்தில் திருமண வேலைகள் துவங்கிவிட்டன. நான் சாந்தோம் பகுதியில் அருமையான வீடாகப் பார்த்து அட்வான்ஸ் கொடுத்தேன். ஒரு நாள் மாலை சுகந்தாவும் என்னுடன் வந்து வீட்டைப் பார்த்தாள். வீட்டைப் பார்க்கப் பார்க்க அவளுக்குப் பரவசமாக இருந்தது.

''இந்த வாடகை வீட்டைப் பார்த்தே அசந்து போறியே திருவான்மியூரில் கட்டப்போறேன் பார். சுகந்த பவனம்... அதைப் பார்த்தா உனக்கு மூச்சே நின்னுடும்...''

''நம்ம வீட்டுக்குத் தேவையானதெல்லாம் எப்போ வாங்கப் போறேள் ?''

''நாலு நாள் பொறுத்துக்க. ஸ்பென்சர் போயிடலாம். என்னென்ன வாங்கணும்னு ஒரு லிஸ்ட் போட்டுப் பார்த்துடு...''

''அதெல்லாம் போட்டு வச்சுட்டேன் !''

''ப்ரிஜ் வாங்கணுமா ?''

''சின்னதா போறும்...''

''மிக்ஸி, க்ரைண்டர்... ?''

''அது இல்லாமலா !''

''சரி, மறுபடியும் நல்லா யோசிச்சி லிஸ்ட் தயார் பண்ணிடு.''

''நீங்க எனக்கு டிக்கெட் ரிசர்வ் பண்ணி வச் சுடுங்கோ...''

''அதெல்லாம் நான் பார்த்துக்கறேன்...''

கணவன் மனைவியாக அந்த வீட்டில் வாழ்க்கையைத் துவங்கப் போகிற கற்பனை சுகந்தாவின் கண்களில் விரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தபடி நின்ற நான், உணர்வு மேலிட்டு அவளின் கைகளைப் பற்றினேன். நன்றிக் கடனுடன் அவளின் அழகிய முகம் என் மார்பில் சாய்ந்து கொண்டது. அந்த முகத்தை நிமிர்த்தி முத்தமிட்டேன். எத்தனை முத்தமிட்டும் தாகம் தீரவில்லை. இது எத்தனை வருட தாகம் ? எத்தனை வருடக் களைப்பு ? முத்தத்துக்கும் அப்பால் அவளைச் செலுத்தத் துடித்த என் துடிப்பை உணர்ந்து என் பிடியிலிருந்து திமிறி விலகி நின்ற சுகந்தாவின் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவளின் விரைவான மூச்சும் வியர்வையும் கூட என்னை மோகம் கொள்ள வைத்தன. இரு கைகளையும் நீட்டியபடி அவளை நெருங்கினேன்.

''ஊஹூம் ராம்ஜி. ப்ளீஸ், வேணாம். வேணாம். உங்களுக்கு இல்லாம நான் எங்கே போயிடப் போறேன் ! இந்தக் கிணத்து நீரை வெள்ளமா கொண்டு போயிடும். ஏன் ராம்ஜி ?''

''கிணத்துத் தண்ணியை வெள்ளம் கொண்டு போயிடாதுங்கறது எங்களுக்குத் தெரியாதா ?''— எரிச்சலுடன் கேட்டேன்.

சுகந்தா பதில் சொல்லாமல் இரக்கத்துடன் சிரித்தாள்.

''இப்ப தாகமா இருக்கே கண்ணம்மா ! இப்ப தாகத்துக்குக் குடிக்க எனக்குத் தண்ணி வேணுமே !''

இதைச் சிறிதும் எதிர்பாராமல் சுகந்தா அதிர்ந்து விட்டாள். ஒரு சன்னமான விம்மல் அவளின் நெஞ்சில் வெடிக்க, தலை தாழ்ந்துவிட்டாள். 'அவ்வளவு தாகமாக இருந்தால் எடுத்துக் கொள்...' என்ற நெகிழ்ச்சி அவளின் உடலில் இளகித் தெரிந்தது. அவளின் வருத்தம் கலந்த இணக்கம் என் உணர்வுகளைக் கலையச் செய்து விட்டது.

அவளுடைய மனப்பூர்வமான சம்மதமின்றி அவளைத் தொடுவது கூடப் பாவம் என்ற பக்தி ஏற்பட்டுவிட்டது. செல்லமாக அவளின் கன்னத்தில் தட்டிக் கொடுத்தேன்... செவிகள் தீர்க்கமாகத் தெரியும்படி அவளின் கூந்தலைச் செம்மையாக்கினேன். ''வா, போகலாம்.''

''அப்போ நான் வீட்டுக்குக் கிளம்பட்டுமா ராம்ஜி?''

''மகராசியா போ!''

சுகந்தாவை மகராசியாகப்போ என்றுதான் நான் சொல்லி வழியனுப்பினேன். துரதிர்ஷ்டவசமாக, 'போய் வா' என்று சொல்லி வழியனுப்பவில்லை!

17

ஸ்பென்ஸர் போய் எங்கள் வீட்டுக்குத் தேவையான பொருட்களை வாங்கிக் கொள்வதற்காக நாங்கள் குறித்து வைத்திருந்த அந்த நாளுக்கு இரண்டு தினங்கள் முன்பாக, ஆபீஸில் நான் தபாலில் என் தங்கை தமிழரசியின் திருமண அழைப்பிதழ் வருகிறதா என்று எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த சமயத்தில், பெரியகுளத்திலிருந்து எனக்கு ட்ரங்க் கால் வந்தது. குதூகலத்துடன் ''அப்பா!'' என்று கூவினேன்.

''ராம்குமாரா?''— என் அப்பாவின் குரல் சிறிது கரகரத்துக் கேட்டது.

''ஆமாம்ப்பா. தமிழரசியின் கல்யாண வேலையெல்லாம் நடக்குதா?''

அப்பா மிகவும் தயங்கிவிட்டுச் சொன்னார் : ''சில காரணத்தால நம்ம தமிழரசி கல்யாணத்தை நிறுத்த வேண்டியாயிடுச்சி...''

விர்ரென்று தலைக்குள் எதுவோ ஓசையுடன் சுழல்வது போலிருந்தது. எல்லா ரத்தமும் என் உச்சந்தலையில் சுழியிட்டது. அநேகமாக போனில் நான் கதறினேன் :

''விவரமா சொல்லுங்கப்பா. அவசரப்பட்டு கல்யாணத்தை நிறுத்திடாதீங்க.''

''முழு விவரமும் உனக்கு நான் கடுதாசியில எழுதியிருக்கேன். இப்படி ஆயிட்டதாலே எல்லாருக்குமே ரொம்ப வருத்தம்தான். இருந்தாலும், கல்யாணத்தை நிறுத்தறதைத் தவிர வேற வழியில்லை. தமிழரசிதான் வேண்டவே வேண்டாம் இந்த சம்பந்தம்னு கண்டிப்பாச் சொல்லிட்டா... அதனால ஒன் கல்யாணத்தை இப்ப ஊர்ல வச்சிக்க வேண்டாம். வச்சிக்கிறதும் சரியில்லை. பழனி முருகன் அருளால எல்லாம் நல்லபடியா முடியும்... வச்சிரட்டுமா ?''

அத்தனையும் தலைகீழாகக் கவிழ்ந்து விட்ட பயங்கரப் பிரமையில் நான் நிலை குலைந்துவிட்டேன். சுகந்தாவிடம் இந்த விஷயத்தை எப்படிச் சொல்வேன் ? எப்படி அவளைச் சமாதானம் பண்ணுவேன் என்றெல்லாம் எண்ணிக் கலங்கினேன். டெலிபோன் மணி ஒலித்தாலே அவள்தானோ என்று அஞ்சி நடுங்கினேன். எனக்குள் எப்போதுமே உயிர் கொண்டிருக்கும் அகங்காரம் மரண அடி வாங்கி விட்டது. சுகந்தாவை எதிர்நோக்கும் என் ஆண்மை முற்றிலுமாக வடிந்து வற்றிக் கொண்டிருந்தது. இருட்டும் வரை ஆபீஸ் அறையிலேயே முடங்கிக் கிடந்தேன்.

என் அறைக்குத் திரும்பி இரவு வெகுநேரம்வரை ஏதேதோ இசைத்தட்டுக்களை அலற விட்டுக் கொண்டிருந்தேன். கடைசியில், ஆஷாபுத்திலியின் மிகப் பழைய

இசைத்தட்டு ஒன்றை ஒலிக்க விட்டு அதைக் கேட்டுக் கொண்டிருந்தபடியே தூங்கிப் போனேன்.

அந்த மிக மோசமான நாளின் பொழுது எந்த வேறு பாடுமின்றி விடிந்தது. குளிக்கவில்லை. உடை மாற்றிக் கொள்ளவில்லை. காப்பி மட்டும் குடித்து விட்டுப் பதினோரு மணிக்குக் கிளம்பி மெதுவாக ஆபீஸ் நோக்கி நடந்தேன்.

என் அப்பாவின் கனத்த கடிதம் என் வருகைக்கு மேஜையில் காத்திருந்தது. ஒவ்வொரு வரியையும் வெறியுடன் படித்தேன். வரதட்சணை விஷயத்தில் நிச்சயதார்த்தம்போது சம்மதித்திருந்த அத்தனையிலும் மாப்பிள்ளை வீட்டார் மிக அதிகபட்ச கோரிக்கைகளைத் திடீரென எழுப்பிவிட்டார்கள். பெண் மிகவும் கருப்பாம். அதனால் நகைகளும் கையில் பணமும் பேசியதைவிட அதிகம் வேண்டுமாம். கேட்டது கிடைத்துவிடும் என்ற அகம்பாவத்தில் அவர்களின் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ளா விட்டால் கல்யாணத்தையே நிறுத்திவிடுவோம் என்று மிரட்டியிருக்கிறார்கள். கல்யாணத்துக்கு முன்பே இந்த மிரட்டலென்றால், கல்யாணத்துக்கு அப்புறம் எப்படியெல்லாம் இருப்பார்களோ என்ற அச்சத்தில் என் தங்கை சிலிர்த்து விட்டாள். உடனே அந்த ஒப்பந்தத்தை முறித்து விட்டார்கள்... முறிந்து போனது அந்த சம்பந்தம் மட்டும் தானா ?

படிக்கப் படிக்க என் உடம்பெல்லாம் தகித்தது வன விலங்குகளைச் சுட்டுத்தள்ளுகிற வெறி அந்த மனிதர்களையும் பொசுக்கிட என் உணர்வுகளில் மூண்டு எழுந்தது. அடுத்தவன் வீட்டுப் பணத்துக்குக் கேடுகெட்டு அலையும் அந்த மனிதப் பேய்களைக் கிழித்தெறிகிற வன்மத்தோடு என் அப்பாவின் அந்தக் கடிதத்தைக் கிழித்து காலில் போட்டு மிதித்து நசுக்கித் தீயிட்டுக் கொளுத்தினேன். நான் இட்ட அந்தத் தீயில் எரிந்து கருகிப் போனது அந்தக் கடிதம் மட்டும்தானா ?

வெகு நேரம் கழித்து என் எல்லா உணர்ச்சிக் கொந்தளிப்புகளை இறுக்கிப் புதைத்துக் கொண்டு சுகந்தாவுக்கு டயல் செய்தேன்.

''சுகந்தா...!''

''என்ன ராம்ஜி... நாளைக்கு நாம ஸ்பென்சர் போயிடலாமா? கம்ப்ளீட் லிஸ்ட் தயார் பண்ணி வச்சிட்டேன்...''

நான் என்ன பதில் சொல்வேன்?

''என்ன, ஒண்ணுமே சொல்லாம இருக்கேள்?''

''போகலாம் சுகந்தா. கண்டிப்பா போகலாம். ஆனா, நாளைக்கு நாம ஸ்பென்ஸர் போறதும் போகாததும் உன் கையிலதான் இருக்கு...''

''நான் ரெடி ராம்ஜி...''

''அதில்லை சுகந்தா... வேறொரு ரொம்ப ரொம்ப அதிர்ச்சியான இன்ஸிடெண்ட் ஒண்ணு நடந்திடுச்சி. அதைச் சொல்றதுக்குத்தான் போன் பண்ணினேன்...''

''என்ன ஆச்சு ராம்ஜி?''

''சுகந்தா...''

''எதுவானாலும் சொல்லுங்கோ...''

கொஞ்சம் ஸ்ட்ராங்கா இருந்துக்கம்மா... சட்டுனு ஸ்லிப் ஆயிடாத...''

''ஆகமாட்டேன் சொல்லுங்கோ...''

''சொல்றேன். என் தங்கையோட கல்யாணம் நின்னு போச்சி சுகந்தா...''

''ஓ...!''

''வரதட்சணை விஷயத்ல ஏற்றப்பட்ட சில பெரிய ப்ராப்ளத்தால அந்த சம்பந்தமே வேண்டாம்னு கல்யாணத்தை நிறுத்திட்டாங்க...''

''ஓ...!''

''அதுக்காக நாம ஒண்ணும் நம்மளோட ப்ளானை மாத்திக்க வேண்டாம். அதே டேட்ல இங்கேயே நாம ரிஜிஸ்தர் மேரேஜ் பண்ணிடலாம்... ஸாரி! இது ரொம்ப எதிர்பாராம நடந்திடுச்சி... ஈவினிங் எல்லா விஷயத்தையும் டீடெய்லா பொறுமையா பேசி ஒரு முடிவுக்கு வருவோம்.. நீ நேரா நம்ம இடத்துக்கு வந்திடு... என்ன ? வச்சிரட்டுமா ?''

ரிஸீவரை வைத்தேன். அந்தக் காற்றாடியின் கீழ் எனக்கு வியர்த்துக் கொட்டியிருந்தது.

மத்யானம் ஒரு மணிக்கே அறையை அடைந்தேன்.

உடலும் உள்ளமும் வெறி கொண்டாற் போல இம்சைப் பட்டன. கூண்டுப் பிராணியாய் அறையில் நடந்து கொண்டே இருந்தேன். கருஞ்சிவப்புத் திரவத்தைக் கச்சாவாக ஊற்றி மேலும் என் எரிதலைத் தூண்டி விட்டேன். கடிகாரத்தில் மணி நாலரை. முனைக் கடையில் இரண்டு பாக்கெட் சிகரெட் வாங்கி, பாக்கெட்டில் திணித்துக் கொண்டு பந்தயக் குதிரையின் பாய்ச்சலோடு ஸ்கூட்டரில் அமர்ந்து மெரீனா நோக்கி விரைந்தேன்.

எனக்கு முன்பாகவே வெகுதூரத்தில் மணலில் அமர்ந்திருந்த சுகந்தாவை உழைப்பாளர் சிலையின் அருகில் நின்று சில நிமிடங்கள் பார்த்துக் கொண்டிருந்தேன். தூரத்தில் அமர்ந்திருந்தவள் புறத்தே என் சுகந்தாவாகவே தெரிந்தாலும் அகத்தே அவள் சுகந்தா அல்ல... இந்த உள்ளுணர்வின் திகிலோடு அவளை நோக்கி நான் சிகரெட் புகைத்தபடி மிகமிக மெதுவாக நடந்தேன்.

நான் வந்து கொண்டிருந்ததை உணர்ந்தும் இமைகூட என்னைத் திரும்பிப் பார்க்காமல் முகம் பூராவும் ரத்தம் போல் கன்றிச் சிவந்திருக்க, சுகந்தா ஒரு நெருப்பெனத் தெரிந்தாள்.

அவளாக எதுவும் கேட்காத வரையில் நானாக வாயைத் திறந்து எதையும் சொல்லக் கூடாது என்ற வைராக்கியத்தில் சிகரெட் புகைத்தபடி அவளுக்கு எதிரில் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். என்றும் போலத்தான் கடல் அலை பாய்ந்து கொண்டிருந்தது. தூரத்தில் சாக்கோபார் வண்டிகள் எந்த மாறுதலும் இன்றி நின்றன.

நெடுநேரத்துக்குப் பின் சுகந்தாவின் குரல் ஒலித்தது :

''மெஸேஜ் எப்போ வந்தது ?''

''நேத்திக்கி... அப்பா ட்ரங்க்கால் போட்டுப் பேசினார்.''

அடுத்து என்ன கேட்கப் போகிறாள் என்ற எதிர்பார்ப்புடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். சுகந்தா எதுவுமே பேசாமல் யோசித்துக் கொண்டிருந்தாள்.

''ட்ரங்க் கால்ல கல்யாணம் நின்னு போச்சிங்கற விஷயத்தை மட்டும் அப்பா சுருக்கமா சொல்லிட்டு டீடெய்லா நடந்தது பூராவையும் இன்னிக்கிக் காலையில கெடைச்ச லெட்டர்ல எழுதியிருந்தார்...'' — பயந்து பயந்து சொன்னேன்.

சில நிமிஷங்களுக்குப் பின் சுகந்தாவின் ஒற்றை வளையல் அணிந்த கரம் என்னை நோக்கி நீண்டது.

''அந்த லெட்டரைக் காட்டுங்கோ !''

வலை போட்டு என்னைப் பிடிப்பது போன்ற நிச்சயத்துடன் என்னைப் பார்த்தவாறே கேட்டாள்.

குபுக்கென்று எனக்குள் சகல ஆதாரங்களும் என்னை நிர்க்கதியில் நிறுத்திவிட்ட கலவரத்தோடு தேய்ந்த குரலில் கேட்டேன் :

''எந்த லெட்டர் ?''

''உங்க ஃபாதர் டீடெய்லா எழுதியிருந்தார்னு இப்ப சொன்னேளே அந்த லெட்டர்...'' —மிகத் தீர்மானமான குரலில் கேட்டாள்.

எங்கள் உறவின் கதி என் கண் எதிரில் மாறிக் கொண்டிருந்த கலக்கத்தோடு சொன்னேன் : ''ஸாரி... அந்த லெட்டர் இல்லை !''

வழக்கின் எதிர்த்தரப்புக்கு உரிய குரூரத் தன்மையில் மறுபடியும் கேட்டாள் : ''அந்த லெட்டர் எனக்கு வேணும்.''

''இல்லை சுகந்தா அந்த லெட்டர்.''

''அதுக்குள்ளே என்னாச்சு அந்த லெட்டருக்கு ?''

''அதைத் தீ வச்சிக் கொளுத்திட்டேன்...!''— சொல்லும்போதே என் குரல் உடைந்துவிட்டது.

''ஓ...!''

கவனித்துக் கொண்டே இருந்தேன். சுகந்தாவின் மென்மையான முகம் இறுகிக் கறுத்தது. அழகு மறைந்து ஒரு அகோரம் கண்களில் படிந்திருந்தது. ஒரு அற்பமான புழுவைப் பார்ப்பது போல என்னைப் பார்த்துக் கொண்டே கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டாள் :

''தமிழரசின்னு தங்கை ஒருத்தி நெஜமாவே உங்களுக்கு இருக்காளா ?''

முகத்தின் மிக அருகே வெடிகுண்டு வெடித்துச் சிதறியது போலிருந்தது. எனக்குள் சூர் அசுரக் குதிரைச் சக்தி பிடாரியைச் சிலிர்த்தெழுந்தது. புகைத்துக் கொண்டிருந்த சிகரெட்டைத் தூக்கி எறிந்தேன். என் குரல் வாள்போல அறுத்துக் கொண்டு ஒலித்தது :

''எங்கே, உனக்குத் தைரியம் இருந்தா மறுபடியும் அந்தக் கேள்வியைக் கேளு பார்க்கலாம்...''

சுகந்தாவின் முகபாவனை சற்றும் மாறவில்லை. அஞ்சாமல் என்னை எதிர் நோக்கினாள் : ''ஒரு தடவை இல்லை, ஆயிரம் தடவைகூடக் கேட்பேன் அந்தக் கேள்வியை...''

''அப்போ தமிழரசின்னு ஒரு தங்கையே எனக்குக் கிடையாதுன்னு நினைக்கிறே...''

''ஆமா. எல்லாமே பொய்தான்...!''

பளீரென்று அவளின் தலைமயிரைப் பிடித்து ஆட்டலாம் போலிருந்தது எனக்கு. கஷ்டப்பட்டு மனக் கொந்தளிப்பை அடக்கிக் கொண்டேன். ஆவேசத்தில் சிதறி வெடித்து விடக் கூடாது என்று சிறிது நேரத்துக்குப் பல்லைக் கடித்தபடி உட்கார்ந்திருந்தேன்.

''புரியுது... புரியுது சுகந்தா! எத்தனையோ தடவை நீ என் தங்கையோட போட்டோ கேட்டப்பல்லாம் போட்டோ உனக்குக் குடுக்காமலே விட்டுட்டதை நெனச்சி இவ்வளவு கேவலமா என்னை எடை போட்டுட்டே... வேணாம். தயவு செய்து வேணாம். ரெண்டு பேர் தலையிலேயுமே மண்ணைப் போட்டுடாதே... எத்தினியோ விஷயத்ல நான் உன்கிட்ட பொய் சொல்லியிருக்கேன். இல்லேன்னு சொல்லலை. ஆனா, ஸாரி... இந்த மாதிரி உன்னை மோசடி பண்ற அளவுக்கு நான் ஒரு பொய்கூடச் சொன்னது கிடையாது...''

அவளின் முகத்தில் இருந்த இறுக்கம் கடுகளவுகூட இளகவில்லை.

''சரி, உனக்கு என் தங்கையோட போட்டோதானே வேணும்? ஒரு பத்து நாள் பொறுத்துக்க. நேரே பெரிய குளத்துக்கே போய், தமிழரசி போட்டோ ஒண்ணை வாங்கிட்டு வந்து உனக்குக் காட்றேன்...''

பட்டென அவளின் முகம் வெறுப்புடன் என்னை நோக்கித் திரும்பியது. கண்கள் இகழ்ச்சியாக விரிந்தன— மிக அலட்சியமாகக் கேட்டாள் :

''போட்டோ காட்டுவேள். ஆனா, அந்த போட்டோல் இருக்கறவதான் ஓங்க தங்கைன்னு எனக்கு எப்படித் தெரியும்? அதுக்கு என்ன ஆதாரம் காட்டுவேள்?''

ஆயிரம் சூரியன் என் தலைக்குள் கொடும் நெருப்பாகப் பாய்ந்து என் உடலையே பொசுக்கினாற் போலிருந்தது. எந்த மனிதனிடமும் நான் தோற்றதில்லை. எந்தக் கொடிய பிரயாணியையும் என் இலக்குவத் தவற விட்டதேயில்லை. இவள் மட்டும் இத்தனை ஆணவமான கேள்வியைக் கேட்டு விட்டுத் தப்பி விடுவாளோ? நான்தான் இவளிடம் தோற்றுப் போவேனோ?

''ஓ... அவ்வளவு கெட்டிக்காரத்தனமா கேக்கறியா நீ, ஆதாரம் என்னன்னு? சுகந்தா! ஆதாரத்தைக் காட்றேன் நான்! கண்டிப்பா காட்றேன். ஆனா, அதுக்கு முன்னாடி என்னோட இந்தக் கேள்விக்கு நீ பதில் சொல்...

கேள்வியை எதிர்நோக்கி ஆணவத்துடன் காத்திருந்தாள்.

''சுகாந்தா... உங்க அப்பா துரைசாமிக்குத்தான் நீ பொறந்தே என்கிறதுக்கு என்ன ஆதாரம்? என்னோட இந்த கேள்விக்கு நீ பதில் சொல். நான் உன்னோட கேள்விக்குப் பதில் சொல்றேன்...''

இந்த இரண்டே இரண்டு கேள்விகளின் எரிமலை வெடிப்பில் ராம்குமார்- சுகந்தா என்ற இரண்டு ஜீவன்களின் மனங்களில் எழுப்பப்பட்டிருந்த காதல் மாளிகை தூள் தூளாக நொறுங்கி வீழ்ந்து தரைமட்டமாகியது.

நெருப்பிடப்பட்டவள் போலப் பதறித் துடித்து, காற்றில் காறி உமிழ்ந்து பொங்கி அழுது எழுந்து வேகமாக மணலில் ஓடியவளை சில விநாடிகள் பேதலிப்புடன் பார்த்துக் கொண்டிருந்து, பின் நானும் எழுந்து அவள் பின்னால் ஓடினேன். நிறையப் பேர் பார்த்துக் கொண்டிருக்க மானம் அற்றுப் போய்த்தான் ஓடினேன். என்னை

விட்டு அவள் போய்விடக் கூடாதே என்ற பரிதவிப்பில்தான் ஓடினேன்.

நான் அவளின் பின்னால் ஓடி வருகிறேன் என்பது தெரிந்ததும் சுகந்தா மதம் கொண்டவளாகக் குனிந்து மண்ணை அள்ளி என்மேல் வீசினாள். சில கணங்களுக்கு அவளை நான் நெருக்கவே முடியாமல் என் உடல் பூராவும் மண்ணை வாரி இறைத்தாள். முற்றிலுமாக நான் ஸ்தம் பித்துப் போனேன். இரண்டு கைகளிலும் மண்ணை அள்ளிக் கொண்டு ஓர் அசுரப் பாவைவிளக்காக நின்றவள் மண்ணை அப்படியே கீழே கொட்டிவிட்டுச் சொன்னாள் :

''இந்த மண்ணை உதறிட்டுப் போற மாதிரி உங்களை யும் உதறிட்டுப் போறேன். எனக்கும் உங்களுக்கும் இருந்த உறவு இன்னியோட முடிஞ்சாச்சி. இனிமே நமக்குள் எந்த சம்பந்தமும் கிடையாது. என் பின்னாடியும் நீங்க வரப் படாது, வந்தேள்... நான் என்ன செய்வேன்னு எனக்கே தெரியாது... குட்-பை !''

சில கணங்கள் அப்படியே தீப்பிழம்பாய் நின்றவள், கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து, சாலையில் வேகமாக நடந்து என் கண்களிலிருந்து மறைந்தாள்.

பரந்த மெரீனா மணல்வெளியில் சூறைக் காற்றில் வேரோடு சாய்ந்து விட்ட பெரும் விருட்சமாகப் பல மணி நேரங்கள் நான் வீழ்ந்து கிடந்தேன். சுற்றிலும் கவிழ்ந்தி ருந்த இருள் என் வாழ்க்கையிலும் கவிழ்ந்துவிட்டதை உணர்ந்தேன். என் எதிர்கால வளமை பெரும் கேள்விக் குறி யாகிப் போயிருப்பதைத் தெரிந்து கொண்டேன். இந்தக் கடலின் எதிரில்தானே என் கண்ணம்மாவுடன் கொஞ்சி விளையாடினேன். இதே கடலின் எதிரில்தானே என் கண்ணம்மாவுடன் நிலாச் சோறுண்டேன். கண்ணீர் வடித் தேன். அலையில் நின்று கதறினேன். ஓர் அற்புத ஸ்திரீயை என்னுடன் இணைத்து, கத்தரித்துவிட்ட கடவுளிடம் கெஞ்சினேன். என் சுகந்தா இல்லாமல் வாழவே முடியாதென்று புலம்பினேன். ஆனால் எத்தனை கண்ணீர் வடித்தும், எவ்வளவு புலம்பியும், என் காதல் ஏக்க முறையீடுகள் எந்தக் கடவுளின் திருச்சபையிலும் எடுபடவே இல்லை.

என் சுகந்தாவின் காதலையும் உறவையும் நான் இழந்தேன்.



மட்டமா

எங்கள் காதல் முறிவின் இறுதிச் சடங்குகள் அடுத்த சில தினங்களில் நடந்தேறின.

என்னிடம் இருந்த சுகந்தாவின் பணம், அவளின் சில லெட்டர்கள், அவளுடைய போட்டோ இன்னும் சில பொருட்களையும் ஞாபகமாகக் குறிப்பிட்டு அவற்றைத் தவறாமல் எடுத்து வந்து அவளிடம் ஜானகியின் வீட்டில் வைத்து ஒப்படைத்து விடும்படி எனக்குக் கடிதம் எழுதினாள் சுகந்தா. அவளுக்கே தெரியாமல் அவளுடைய பொருள் வேறு ஏதாவது என்னிடம் இருந்தால் அதையும் நாணயத்துடன் அவளிடம் சேர்த்து விடும்படி அக் கடிதத்தில் ஒரு பின் குறிப்பு சேர்ந்திருந்தாள்.

சுகந்தா குறிப்பிட்டிருந்த பொருட்களைக் கவனமாகச் சேகரித்துக் கொண்டேன்.

அவளுக்கே தெரியாமல் என்னிடம் அடைக்கலமாக இருந்த அவளின் ஃபுல்வாயல் புடவையை எடுத்தபோது என் மனம் உணர்ச்சிவசப்பட்டது. அறிவு ஒரு கணம் அப்புடவையை வைத்துக் கொள்ளலாமா என்று மயங்கியது. ஆனால், இதயம் மறுத்துவிட்டது. 'சுகந்தாவே எனக்கு இல்லாதபோது அவளின் புடவை மட்டும் எனக்கு ஏன் ?'

ஜானகியின் வீட்டில் நானும் அவளும் முடிந்துபோன ஒரு வழக்கின் இரண்டு பிரதிநிதிகளாக எதிர் எதிராக நின்றோம்.

நான் கொடுத்தவற்றைச் சரிபார்த்து வாங்கிக் கொண்டாள். கடைசியாக, அந்த ஃபுல்வாயல் புடவையைத் தலைக் குனிவுடன் எடுத்து அவளிடம் நீட்டினேன். புடவையைப் பார்த்து ஒரு கணம் குழம்பினாள். சில கணங்கள் மிகவும் இகழ்ச்சியாக அவளின் கண்கள் என் கண்களைச் சந்தித்து ஜானகியின் பக்கம் திரும்பின.

''பார்த்துக்கோ ஜானகி ! காணாமல் போயிடுத்துன்னு சொன்ன புடவை வரது பார் ! பேசறது ஒவ்வொண்ணும் பொய்... அந்தப் புடவை ஒண்ணும் எனக்குத் தேவையில்லை...'' —கோபத்துடன் கத்தினாள்.

திருப்பிக் கத்துகிற நிலையில் நான் இல்லை. அந்தப் புடவையை மௌனமாகக் கசக்கி அவளுடைய காலடியில் எறிந்தேன். பதிலுக்கு அவள், நான் அவளுக்குப் பரிசப் புடவையாக வாங்கிக் கொடுத்திருந்த அந்த பனாரஸ் பட்டுப் புடவையை என் காலடியில் வீசியெறிந்தாள்.

நான் ஜானகியிடம்தான் சொன்னேன் : ''ஜானகி. நான் அவளுக்குக் குடுத்த எதையும் திருப்பிக் கேக்கலை, அதனால இந்தப் பட்டுப் புடவையை நான் எடுத்துக்கப் போறதில்லை. அதை எடுத்து அவ வீதியில எறிஞ்சாக்கூட எனக்கு கவலையில்லை... கடைசில ஒரு மோசமான வார்த்தையால நான் அவளைக் கேவலமா பேசிட்டது

தப்புத்தான். அதுக்காக மனப்பூர்வமா நான் மன்னிப்பு கேட்டுக்கறேன். ஆனா, எனக்கு [illegible] ஒரு த[illegible] இருக்காளான்னு கேக்கற அளவுக்கு என்னை அந்த [illegible]டமா எடை போட்டுட்ட அந்த அஞ[illegible]யா[illegible]தையை கொடுமையை எந்த ஜென்மத்திலும் நான் மன்னிக்க மாட்டேன். ஆனா இப்பவும் சொல்றேன் சுகந்தா மேல எனக்குக் கோவமே கிடையாது. வருத்தம்தான். இந்த உலகம் பூராவும் அவ தேடினாலும் கெடைக்கவே முடியாத என்னை மாதிரி ஒரு மனுஷன் முகத்துல காறித்துப்பிட்டுப் போற அளவுக்குக் கேவலமாகப் போயிட்டாளேங்கற அந்த வருத்தம்தான்... ஆனா, அவ என்னை விட்டுப் பிரிஞ்சு எங்கே போனாலும் எப்படி வாழ்ந்தாலும் அவளுக்கு நிம்மதி இருக்கப் போறதில்லை. அது என்னமோ உண்மை, பட் ஏ டே வில் கம்; அன்னிக்குத் தெரியும் அவளுக்கு, உண்மையிலேயே இந்த ராம்குமார் யார்னு... மண்ணை வாரி எறிஞ்சுட்டுப்போனா, என்கிட்டேயே வந்து ஒரு நாள் மன்னிப்பு கேட்கத்தான் போறா... தட்ஸ் ஆல். குட்-பை.''

பத்துப் பதினைந்து நாட்கள் யாரும் என்னைத் தேடி வரவேண்டாம் என்று ஆபீஸுக்குத் தகவல் தந்துவிட்டு வேண்டிய உடைகளை எடுத்துக் கொண்டு டாக்ஸியில் ஏறி செயிண்ட் தாமஸ் மவுண்ட் போய்ச் சேர்ந்தேன்.

ரோஸ்மேரி ஆபீஸ் போயிருந்தாள். ஸீலியா ஒரு சிறிய சொத்து விற்பனை விஷயமாகக் குன்னூர் போனவள் இன்னும் திரும்பி வந்திருக்கவில்லை. ஆன்ம களைப்புடன் கட்டிலில் சாய்ந்தேன்.

ஐந்து மணிக்கு ஆபீசிலிருந்து ரோஸ்மேரி சைக்கிளில் திரும்பி வந்தாள். என்னைப் பார்த்ததுமே அந்திமந்தாரையாக அவளின் கண்கள் மலர்ந்தன. ஓடி வந்து என் மார்பில் சாய்ந்து கொண்டாள்.

''எப்ப வந்தே பாஸ்?''

அ காலையிலேயே வந்திட்டேன் ரோஸி.''
அவ
மன இன்னிக்கு ஆபீஸ் போகலையா ?''

பதினஞ்சி நாள் லீவ் ! இங்கேதான் உன்கூட இருக்கப்போறேன்

இது உன் வீடு இங்கேயே இருந்திடு பாஸ்...''

றுகிப் போயிருந்த என் சோகம், அந்த அன்பில் மீண்டும் சிதறிக் கொட்ட ரோஸ்மேரியின் மடியில் சாய்ந்து விட்டேன். என் கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டே இருந்தது. என்னுடைய அழுகையைப் பார்த்து ரோஸ் மேரியும் விம்மத் தொடங்கி விட்டாள்.

''நீ அழாத பாஸ்... நீ அழுதா எனக்கும் அழுகை வருது... அழாத பாஸ்...''—ரோஸ்மேரியின் மடியிலிருந்து எழுந்தேன்.

''சீச்சீ ! நீ ஏன் கண்ணம்மா அழறே !''

''நீ மட்டும் அழறே !''

நான் செஞ்ச பாவத்துக்கு நான் அழறேன். சுகந்தாவை நினைச்சு அழறேன்... ஒனக்கென்ன ராஜாத்தி ?''

''சுகந்தாகூட ஏதாவது சண்டை போட்டியா ?''

''அவதான் முதல்ல சண்டைக்கு வந்தா...''

''ஏன் சண்டைக்கு வந்தா ?''

நடந்தது பூராவையும் சொன்னேன். அவளால் நம்பவே முடியவில்லை.

''சே ! சுகந்தா ரொம்ப மோசம். நான்போய் அவளை நல்லா திட்டிட்டு வரட்டுமா பாஸ்...?''

''அதான்— நான் நல்லா திட்டி விட்டுட்டேனே !

''இனிமே என்ன பண்ணப் போறே பாஸ் ?''

''அதான் தெரியலை...''

ரோஸ்மேரி சில நிமிடங்கள் மௌனமாக இருந்தாள்.

இந்தத் துயரமான சம்பவத்தில் எனக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று அவள் சிந்திக்கிறாள் என்பது அவளுடைய தோற்றத்தில் தெரிந்தது. ஆனால் எதையும் அவள் வாய்விட்டு அப்போது சொல்லவில்லை.

அந்தப் பதினைந்து நாட்களும் ரோஸ்மேரி என்னுடனே இருந்தாள். பதினைந்து நாளும் எந்த வெளி உலகத் தொடர்பும் இல்லாமல் ஒரு வனவாசத்தை மேற்கொண்டாற் போலத்தான் இருந்தது. என்னை ஒரு விநாடி கூடப் பிரியாமல், என்னைப் போஷித்தவள் போன்ற; என்னை அரவணைத்தவள் போன்ற— என் சின்னக் கண்ணம்மாவுக்கு நன்றி சொல்லிவிட்டுப் பதினாறாவது நாள் மாம்பலம் கிளம்பத் தயார் செய்து கொண்டிருந்தேன்.

''சுகந்தாகிட்ட நீ மறுபடியும் போகவே மாட்டியா பாஸ் ?''

''இல்லை ரோஸி. அது முடிஞ்சு போச்சு.''

''அப்ப உன் மேரேஜ் ?''

''எனக்கு இனிமே கல்யாணமே கிடையாது ரோஸி.''

''அப்படியெல்லாம் சொல்லாத பாஸ். என்னை மேரேஜ் பண்ணிக்க பாஸ். உனக்கு நான் ரொம்ப ஃபெய்த்ஃபுல்லா இருக்கேன். வேணும்னா நானும் ஹிண்டுவா கன்வர்ட் ஆயிடறேன்... மாட்டேன்னு சொல்லாதே பாஸ். ஏன்னா, உன் மாதிரி ஆளை நான் லைஃப்ல மீட் பண்ணவே போறதில்லை பாஸ்...''

—சொல்லிக் கொண்டே அந்த மனச்சிறுமி என் மார்பில் சாய்ந்து கொண்டாள். ஆறுதலாக அவளை அரவணைத்த

படி நான் மௌனமாக நின்றேன். எனக்குள் மாற்றம் கொண்டிருக்கும் மிகப் பல தன்மைகளை அவளுக்கு எப்படி நான் வார்த்தைகளில் சொல்வேன்? எனக்குள் முறிந்து விழுந்து விட்ட சில கட்டுமானங்களை மீண்டும் எப்படி நான் நிர்மாணம் செய்வேன்? எதுவும் சொல்லாமல் கண் களை மூடிக் கொண்டேன். அதைப் பற்றி சில நாட்கள் கழித்துப் பேசலாம் என அவளுக்கு அப்போதைக்குப் பதில் சொல்லிவிட்டுக் கிளம்பத் தயாரானேன்.

மாம்பலம் சரோஜினி தெருவில் இருந்த என் அறையின் கதவைத் திறந்ததும் இடுக்கு வழியாகத் திணிக்கப்பட்டிருந்த அந்தத் திருமண அழைப்பிதழ்தான் என் காலில் மிதிப் பட்டது!

ஆச்சரியத்துடன் குனிந்து எடுத்தேன். சுகந்தாவின் திருமணப் பத்திரிக்கை! திருச்சானூரில் அவளுக்கும் வேணுகோபாலனுக்கும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட வண்ணம் நவம்பர் 19-ம் தேதி நடைபெறப் போகிற திருமணத்துக்கான, நான்கு முனைகளிலும் மஞ்சள் தேய்க் கப்பட்ட அழைப்பிதழ்!

நான் துக்கத்துடன் கண்களை மூடிக் கொண்டேன். எனக்கு ஏன் இந்தத் தண்டனை? எனக்கு ஏன் இந்த அவமானம்? சகல மென்மைகளும் கொண்ட அந்தப் பெண் ணுக்கு ஏன் இத்தனை பழி வாங்கும் உணர்ச்சி? வெட்டி வீழ்த்தி விட்ட பறவையின் மிச்சமிருக்கும் ரத்தத்தையும் கொட்ட வைத்துப் பார்க்கிற இந்தக் குரூரம் ஏன் என் கண்ணம்மாவுக்கு? பளீரென்று என் ரத்த நாளங்கள் வெடித்துத் தெறித்தன. என் இழப்பும் துக்கமும் அவமான மும் பொங்கிச் சிலிர்த்தன.

அந்த நவம்பர் 19-ம் தேதி சுகந்தாவுக்கும் வேணு கோபாலனுக்கும் திருச்சானூரில் திருமணம் நடந்து கொண் டிருந்தபோது, பம்பாய் வீதிகளில் இலக்கு இல்லாமல் சுற்றிக் கொண்டிருந்தேன்.

நான் உலகக் கசடுகள் அனைத்தும் தூர்ந்து விட்டு ஸ்படிகமாக களிம்பு நீங்கியிருந்தேன். நான் என்ற கிரஹணம் முற்றிலும் நீங்கிவிட்டிருந்தது. சுகந்தா, ரோஸ்மேரி, தமிழரசி, மாடசாமி என்ற உறவின் முறைகள் எல்லாமே களைந்து போயிருந்தன. பணம், தொழில், காதல், குடும்பம் என்ற மன— சமூக இயல்புகள் வறண்டுவிட்டன. வெறும் தனி மனிதனாக வானக்கூரையின்கீழ் சுதந்திரமாக எழுந்து நின்றேன்.

சில வாரங்களில் சென்னை திரும்பி, கிண்டியில் இயங்கிக் கொண்டிருந்த தொழிலை மூடி விட்டேன். என் பணத்தையெல்லாம் திரட்டி ரோஸ்மேரியிடம் ஒப்படைத்து விட்டு அவளிடமிருந்தும் விடைபெற்றுக் கொள்ள ஒரு இரவில் செயிண்ட் தாமஸ் மவுண்ட் சென்றேன்.

ஸீலியா என்னைக் கண்டதும் ஓடிவந்து அழுதாள். அன்புச் சிறுமி ரோஸ்மேரியின் வாழ்க்கையில் ஒரு விபரீதம் நிகழ்ந்திருந்தது. சில நாட்களுக்கு முன் இரவில் போலீஸ் ஆபீஸர்கள் என்று சொல்லிக் கொண்டு மூன்று பேர் காரில் வந்து அவளை மூர்க்கத்தனமாகக் கடத்திக் கொண்டு போய் பூந்தமல்லியின் அருகில் ஒரு வீட்டில் வைத்து அவளின் கற்பைச் சூறையாடி விட்டு, விடியும் முன் தெருமுனையில் விட்டுவிட்டு ஓடி விட்டார்கள். விலங்குகளால் குதறப்பட்ட பட்சியாக ரோஸ்மேரி சிதைந்து போய் படுக்கையில் கிடந்தாள்.

அந்த வேதனையிலும், ''நான் யாருக்கு என்ன பாவம் செஞ்சேன் பாஸ்?'' என்று கேட்டுத்தான் அவள் கண்ணீர் வடித்தாள்.

''என்னைக் கைவிட்டுடாத பாஸ். என்னை மேரேஜ் பண்ணிக்க பாஸ்...'' என்று கெஞ்சினாள்.

அனைத்தையுமே கைவிட்டுவிட்டதை எப்படி அவளுக்குச் சொல்வேன்? மனத்தில் துறவியாகவே ஆகிவிட்டதை எவ்விதம் விளக்குவேன்?

''ரோஸி, என்னை நீ என்ன வேணுமானாலும் கேள். என் உயிரைக் குடுத்தாவது அதைச் செய்யறேன். ஆனா, கல்யாணம் மட்டும் என்னால பண்ணிக்க முடியாது. ஸாரி...! இனிமே தயவு செஞ்சி அந்த பேச்சை மட்டும் எடுக்காதே...''

''எடுக்கலை பாஸ். இனிமே நான் அந்தப் பேச்சையே எடுக்கலை...''

''நல்ல பெண் நீ. என் பணம், சொத்து அத்தனையும் ஒனக்குத்தான். ஒரு நல்ல பையனா செலக்ட் பண்ணி ஒனக்கு நான் கல்யாணம் பண்ணி வைக்கிறேன் கண்ணம்மா... அழாத... ஒனக்கு இனிமே எந்தக் குறையும் இல்லை. பயப் படாம நிம்மதியா நீ தூங்கு...''

''நிம்மதியா தூங்கிடறேன் பாஸ்.''

நடு இரவில் மாம்பலத்தில் என் அறைக் கதவை ஸீலியா வின் நண்பன் ஜார்ஜ் தட்டினான். எழுந்து கதவைத் திறந்தேன்.

''என்ன ஜார்ஜ்?''

''உடனே வா... ரோஸி பாய்ஸன் சாப்பிட்டிருச்சி...''

''இப்ப எங்கே ரோஸி?''

''அடையாறுல பிரைவேட் நர்ஸிங் ஹோம்ல அட்மிட் பண்ணியிருக்கோம்...''

என் ஸ்கூட்டரில் தலைதெறிக்க விரைந்தோம். நர்ஸிங் ஹோம் வாசலில் ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு உள்ளே ஓடிய போது ஸீலியாவின் அழுகைக் குரல் உரக்க ஒலித்தது.

வாடி உதிர்ந்த ரோஜாக் கனியாக என் சின்னக் கண்ணம்மா ரோஸ்மேரி, வெள்ளைத் துணியின் கீழ் சலவைக் கல் பதுமையாக உயிரற்றுப் போயிருந்தாள்...

ரோஸ்மேரியின் அந்த மரணக் காட்சியின் முன்னிலை யில் நின்று கொண்டிருந்த என் மொத்த வாழ்க்கையுமே

சுழற்சி இழந்து ஸ்தம்பித்து நின்றது. நான் அழவில்லை. கண்ணீர் விட்டுப் புலம்பவில்லை. இப்படியெல்லாம் அழிவுகள் நிகழ்ந்து விட்டனவேயென்று எந்தக் கடவுளையும் நிந்திக்கவும் இல்லை. முற்றிலுமாக நிர்மூலங்கள் ஏற்பட்டு நான் என்ற அகங்கார ரூபத்தையே நொறுக்கி உதிர்த்து விட்ட அந்நிலையில் கண்ணீர் ஏது ? வெறும் எதிர்விளைவுகள் என்று அழுகையும் கதறலும்தான் ஏது ?

ரோஸ்மேரியின் சடலத்தின் எதிரில் இயற்கையோடு இயற்கையாய் இயைந்த ஒரு தாவரமாக வெறும் கைகட்டி நான் நின்று கொண்டிருந்தேன். சற்றும் எதிர்பாராமல் அந்தத் தருணத்தில்தான் புதிதாகவும் பிறந்தேன். மனைவியாக வர இருந்த சுகந்தாவை இழந்து, மகளாக வாழ இருந்த ரோஸ்மேரியைப் பறி கொடுத்து— தன்னந்தனிமையில் நின்ற அந்தக் கணத்தில் ஒரு விநாடி என் இரண்டு கண்களின் பார்வையும் அற்றுப் போன அகண்ட இருளில் நிற்பதாக உணர்ந்தேனே— அந்த இமைப் பொழுதில் என்னுள் மூன்றாவது கண் நெற்றிமேட்டில் திறந்தது. அந்த நெற்றிக் கண்ணின் பார்வையில் இருள், வெளிச்சம், நிழல் என்ற இந்த முப்பரிமாண உலகுக்கு அப்பாற்பட்ட ஆரம்பமோ, முடிவோ அற்ற காலவெளியையும் தாண்டிய பரந்த ஜோதிர்மய ஒளிவெள்ளமே எங்கும் நீக்கமற விரிந்து கிடக்கிறது என்ற தரிசனத்தைக் காட்டுகிற முத்தாய்ப்புடன் என்னுடைய இந்த நினைவுத் தொடர் முற்றுப் பெறுகிறது...

இத்தனை குரூரங்களையும் அவலங்களையும் விழுப்புண்களாக மார்பில் ஏற்றுக் கொண்டு சித்தம் கலங்கி விடாமல், சிதைந்து போகாமல் மானிட வாழ்க்கையின் அத்தனை விபரீதங்களிலிருந்தும் அந்த ராம்குமார் மீண்டு வந்து விட்டான். அவனுக்குத் தொழில் இல்லை. குடும்பம் இல்லை. பொறுப்பு இல்லை. ஆசை இல்லை. கவலை இல்லை. இன்றும் அவன் தனித்துத்தான் வாழ்கிறான். தனித்தே அலைந்து திரிகிறான். நினைத்த நேரங்களில்

கடற்கரையில் நிற்கிறான். எப்போதாவது சில சமயங்களில் ரோஸ்மேரியை நினைக்கிறான். நாட்டிய நர்த்தகி ருத்ரா, சினிமா நடிகையாக வேஷமிட்டு ஆடிக்கொண்டிருக்கிற காட்சிகளை செய்தித்தாள்களில் பார்க்கிறான்.

அந்த சுகந்தா மட்டும் தான் குவாலியர் நகரிலிருந்து சில மாதங்களுக்கு ஒரு முறை அவனுக்குக் கடிதங்கள் எழுதிக் கொண்டிருக்கிறாள். ஒரு குறிப்பிட்ட மதச் சார்பு கொண்ட இயக்கம் குவாலியர் நகரில், வாழ்விழந்த பெண்களுக்காக நடத்தி வருகிற அமைப்பில் சிறிய பொறுப்பான அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டே அவளும் ஓர் அபலைப் பெண்ணாகத் தனித்துதான் வாழ்ந்து வருகிறாள். இறுதி நாட்களில் ராம்குமாருக்குத் தான் செய்த துரோகத்துக்கும், அவனை அவமதித்த துர்நடத்தைக்கும் அப்படித் தனிமைப் பட்டு ஆதரவற்றுத்தான் வாழ வேண்டும்; அந்த வாழ்க்கை தான் அதற்கான பிராயச்சித்தம் என்ற அவளின் சொந்த நியாயப்படி நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறாள்.

தமிழரசி என்று ஒரு தங்கை உங்களுக்கு நிஜமாகவே இருக்கிறாளா என்று ஓர் இதிகாச முக்கியத்துவமான கேள்வியை ராம்குமாரிடம் கேட்டாளே— அந்தக் கேள்வியின் உள்மனச் சந்தேகவடிவம் என்ன தெரியுமா? அப்படியொரு தங்கை அவனுக்கு இல்லவே இல்லை என்ற சந்தேகம் மட்டுமல்ல, ஏற்கனவே அவனுக்குத் திருமணமாகி பெரிய குளத்தில் அவனுக்கு ஒரு மனைவி இருக்கிறாள் என்ற வலிமையான சந்தேகமும் அவளின் அறிவில் ஓர் புற்றாக 'வளர்ந்திருந்தது! அந்த மனைவிக்குத்தான் மாதம் ஒரு முறை புடவைகளை வாங்கி அள்ளிக் கொண்டு ஊருக்கு ஓடுகிறான் என்றெல்லாம் அவள் விபரீதச் சந்தேகங்களை மனத்திலேயே புதைத்துப் புதைத்துப் புரையோடிப் போய் விட்டாள். அந்த விஷ விதையை முதன் முதலாக அவளுடைய மனத்தில் விதைத்தது சுகந்தாவின் தோழி ஜானகி தான்.

அந்த ராமாயணத்தில் கைகேயியை கூனிக் கிழ என்னென்ன வக்கரிப்புக்கெல்லாம் ஆளாக்கிச் சீரழிய வைத்தாளோ, அதே போல் ஜானகியும் நவீனயுகக் கூனியாகச் செயல்பட்டு, ''தங்கைக்குத்தான் புடவை வாங்கிப் போறார்னு என்ன நிச்சயம்?'' என்ற கேள்வியை எழுப்பி வேறொரு இதிகாசமே நிகழக் காரணமாகி விட்டாள். கடைசியில் ஜானகி விதைத்த அந்த விதை, சுகந்தாவின் மொத்த வாழ்க்கையும் நச்சுப் படுத்தி விட்டது. எப்படித் தெரியுமா? எந்த சந்தேகத்தில் ராம்குமாரை நிராகரித்து, அவசர அவசரமாக அமெரிக்காவில் மாண்டேனா யுனிவர்ஸிட்டியில் பேராசிரியாரகப் பணியாற்றிய வேணுகோபாலனை மணந்து இந்த தேசத்தை விட்டே ஓடிப் போனாளோ, அந்த வேணுகோபாலனுக்குத்தான் அந்த அமெரிக்க மண்ணில் ஏற்கனவே மணமாகி ஒரு இத்தாலியப் பெண் அவனுடன் மனைவியாக வாழ்ந்து கொண்டிருந்தாள்...

அந்த உண்மையை அறிந்த சுகந்தா அடைந்த அதிர்ச்சியும் அவமானமும், அமெரிக்க வீதியொன்றில் இதனால் அவள் சித்தம் களங்கியவள் போல ஓடிய கொடுமையும் அலங்கோலமும், சில மாதங்களிலேயே ஓர் அகதியென அவள் இந்தியாவிற்கு மீண்டுவந்த நிர்க்கதியும் சோகமும்; எந்தக் கடற்கரையில் மண்ணை வாரி எறிந்து காறி உமிழ்ந்து உறவை முறித்துக் கொண்டு சென்றாளோ, அதே கடற்கரையில் அதே ராம்குமாரின் கால்களில் விழுந்து அவள் கதறியழுத பரிதாபமும் வேதனையும், வாழ்க்கையெனும் நெடுங்கதையின் மிக வறண்ட அத்தியாயங்கள்...



## கலைஞன் வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| எங்கிருந்தோ ஒரு நிழல் | ஸ்டெல்லா புரூஸ் | 15 | 00 |
| ஒரு முறைதான் பூக்கும் | ,, | 16 | 00 |
| வெகு தூரத்தில் — மனம் | ,, | 18 | 00 |
| அது ஒரு நிலாக் காலம் | ,, | 12 | 50 |
| சூரியன் மிக அருகில் | ,, | 11 | 00 |
| காதல் கதையின் கடைசிப் பக்கம் | ,, | 10 | 50 |
| மதினி | எஸ். பாலசுப்ரமணியன் | 11 | 50 |
| நெஞ்சுக்குத்தான் தெரியும் | ,, | 10 | 00 |
| நினைக்கத் தெரிந்த மனம் | ,, | 10 | 00 |
| இளமையில் ஒரு ராகம் | ,, | 9 | 00 |
| கொஞ்சும் கொல்லுடி என் கண்ணே (இளஞ்செழியன்) | ,, | 11 | 00 |
| ஜலக்கிரீடை | ,, | 11 | 00 |
| புதிரான சொந்தங்கள் | ,, | 10 | 00 |
| மன்னிப்பு | ,, | 10 | 50 |
| மாளிகைப் பறவை | ,, | 10 | 50 |
| நிஜங்கள் நிழலாகும் போது | வாஸந்தி | 18 | 00 |
| கண்ணுக்குத் தெரியாத உலகங்கள் | ,, | 14 | 00 |
| பாதை வெளிச்சங்கள் | சாருபாலா | 11 | 50 |
| அவளுக்கு ஒரு சரணாலயம் | ,, | 16 | 00 |
| அந்தப்புரத்து ஆசைகள் | ,, | 12 | 00 |
| பாரிஜாதக் கனவுகள் | ,, | 11 | 00 |
| வானவில் சிறகுப் பறவை | ,, | 12 | 50 |
| பாசத்தின் நிழலில் | ,, | 11 | 00 |
| கள்வெறி கொள்ளுதடி | இந்துமதி | 16 | 00 |
| அந்த சில விநாடிகள் | ,, | 13 | 50 |